# தெய்வீக வாழ்வின் விஞ்ஞான ரகசியங்கள்

(தெய்வீக தத்துவங்களை நவீன விஞ்ஞான முறையில் விளக்கும் உன்னத ஆராய்ச்சி நூல்)




ஆசிரியர் & வெளியிட்டவர் :

"தெய்வீக விஞ்ஞானி"

**டாக்டர் சாது சு. ஸ்ரீனிவாஸ்,**



ஸ்தாபிதம் : 5—10—1947

# தெய்வீக வாழ்வின் விஞ்ஞான ரகசியங்கள்

(தெய்வீக தத்துவங்களை நவீன விஞ்ஞான முறையில் விளக்கும் உன்னத ஆராய்ச்சி நூல்)




ஆசிரியர் & வெளியிட்டவர் :

''தெய்வீக விஞ்ஞானி''

டாக்டர் சாது சு. ஸ்ரீனிவாஸ்,

இயக்குனர்: ஸ்ரீ ராமாஸ்ரமம், ஹிந்து சமயக் கல்லூரி & சர்வதேச சகோதரத்துவக் கழகம்,

நாகுடி, நாகுடி அஞ்சல், அறந்தாங்கி வட்டம்,

புதுக்கோட்டை மாவட்டம்,

PIN. 614616.

ஸ்தாபிதம் 5 – 10 – 1947

# தெய்வீக வாழ்வின் விஞ்ஞான ரகசியங்கள்

(தெய்வீக தத்துவங்களை நவீன விஞ்ஞான முறையில் விளக்கும் உன்னத ஆராய்ச்சி நூல்)

ஆசிரியர் & வெளியிட்டவர் :

''தெய்வீக விஞ்ஞானி''

டாக்டர் சாது சு. ஸ்ரீனிவாஸ்,

இயக்குனர்: ஸ்ரீ ராமாஸ்ரமம், ஹிந்து சமயக் கல்லூரி & சர்வதேச சகோதரத்துவக் கழகம்,

நாகுடி, நாகுடி அஞ்சல், அறந்தாங்கி வட்டம், புதுக்கோட்டை மாவட்டம்,

PIN. 614616.



விலை: ரூ. 5-00

அச்சிட்டோர் :

ஸ்ரீ கணேசர் அச்சுக்கூடம் அறந்தாங்கி.

# பொருளடக்கம்

நமது ஆடைகள் பழமையாகி கிழிந்து விட்டால் அவற்றை நவீனமாகப் புதுப்பித்து வாங்கி அணிகிறோம்,

நமது வீடு பழமையாகி இடிந்துவிட்டால் அதை நவீன முறையில் புதுப்பித்து முதல்தரமான மாளிகையாக ஆக்கி அதில் வசித்து வாழ்ந்து இன்புறுகிறோம்.

அதேபோல் நமது மிக மிகப் பழமையான ஹிந்து மதத்தையும் தற்கால விஞ்ஞான முன்னேற்றங்களுக்கு ஏற்றவாறு நவீன விஞ்ஞான முறையில் ஆராய்ச்சி செய்து அதன் உண்மைகளை ஒவ்வொருவரும் உணர்ந்து பேரின்பம் பெறவேண்டும் என்ற நமது நாட்டின் மிக மிக உன்னதமாக லெட்சியம் நிறைவேறும் பொருட்டு இந்த நூல் வெளியிடப்பட்டிருக்கிறது.

தெய்வீகத் தத்துவ உண்மைகளைப் பற்றிய சந்தேகங்களைப் போக்கிக்கொள்ள விரும்புவோர் தமது சந்தேகங்களைக் கேள்விகளாக எழுதி அனுப்பலாம்,

இவ்வாறு வரும் கேள்விகளுக்கு நவீன விஞ்ஞான முறையில் உண்மைகளை விளக்கி பதில் அனுப்பப்படும்.

கேள்வி ஒன்றுக்கு கட்டணம் ரூபாய் பத்து



1 நீ எண்ணும் எண்ணங்கள் யாவும் உனது இறைவனை "மனதால் பூஜிககும்" செய்கை ஆகும் அதனுல் உனது இறைவனுக்கும் நீதிக்கும் நேர்மைக்கும் அன்புக்கும உண்மைக்கும் விரோதமான எண்ணங்களை எண்ணுவது கூடாது.

2 நீ பேசும் பேச்சுக்கள் யாவும் உனது இறைவனை "வாயால் பூஜிக்கும் பூஜை" ஆகும் அதனுல் உனது இறைவனுக்கும் நீதிக்கும் நேர்மைக்கும் அன்புக்கும் உண்மைக்கும் விரோதமான பேச்சுக்களை ஒருபோதும் பேசவே கூடாது

3 நீ செய்யும் செய்கைகள் யாவும் உனது இறைவனை "உடலால் பூஜிக்கும் பூஜை" ஆகும் அதனுல் உனது இறைவனுக்கும் நீதிக்கும் நேர்மைக்கும் அன்புக்கும் உண்மைகும் விரோதமான காரியங்களை ஒருபோதும் செய்யவே கூடாது.

4 மற்ற ஒவ்வொருவரையும் உனது உண்மையான சகோதரராகவும் சகோதரியாகவுமேகருதி உண்மையான அன்புடன் உனது காரியங்களையும் தினமும் செய்து வர வேண்டும்:

5 நீ எந்தக் காரியம் செய்தாலும் நீ நம்புகிற உனது கடவுளை மனதில் நினைத்துக்கொண்டே எப்போதும் செய்து வர வேண்டும்.

6 இவ்வாறு தினமும் தவருமல் செய்து பக்தி அன்பு சகோதரத்துவம் இந்த மூன்று நெறிகளையும் உலகில் நிலைநாட்ட வேண்டும்.

7 இப்படி நிலைநாட்டுவதே பேரின்பமாகும் இந்தப் பேரின்பத்தைப் பெறவே நீ பிறந்திருக்கிருய் வாழ்கிருய் வேறு எதற்கும் அல்ல என்பதை இன்றே அறிந்துகொள்.

# வாழ்த்துரை

திருவண்ணாமலை பரம்பரை ஆதீனம் குன்றக்குடி

**அருள்திரு தெய்வசிகாமணி அடிகளார்**

தலைவர். தமிழ்நாடு தெய்வீகப் பேரவை, சென்னை.



விஞ்ஞானத்தின் முன்னேற்றத்தினால் இன்று மனிதன் மிகவும் அகந்தைகொண்டு இயற்கையை உதாசீனம் செய்து செயற்கையை மிகவும் போற்றி வாழ முயற்சிக்கிறான்.

அதனால், இன்று உலகினரின் வாழ்வில் எவ்வளவு முன்னேற்றங்கள் ஏற்பட்டபோதிலும், மனிதரின் உள்ளம் உண்மையான அமைதியும் சாந்தியும் திருப்தியும், இன்பமும் இன்றித் தவிக்கும் நிலை தோன்றியுள்ளது.

அதனால் எனது தோழர் தெய்வீக விஞ்ஞானி டாக்டர் கா. ஸ்ரீநிவாசன் அவர்கள், நமது மத - தெய்வீகத் தத்துவ சாஸ்த்திரங்களையெல்லாம் நவீன விஞ்ஞான முறையில் சென்ற முப்பத்தைந்து ஆண்டுகளாக ஆராய்ச்சி செய்து, இயற்கையின் மகத்தான சக்தியை கேள்வி பதில் மூலமாக விளக்கி சிறந்த பணிபுரிந்துள்ளார்.

அவரது இந்த உன்னதமான ஆராய்ச்சி நூலை அனைவரும் வாங்கிப்படித்து, பயிற்சி பெற்று பேரின்பப் பெருவாழ்வு பெற வேணுமாய் வாழ்த்துகிறேன்.

ஒப்பம் : தெய்வசிகாமணி

**குன்றக்குடி அடிகளார்**





" தெய்வீக விஞ்ஞானி "

# டாக்டர் சாது. சு. ஸ்ரீநிவாஸ்

நாகுடி.

# முன்னுரை

மனிதவாழ்விற்கு இரண்டு தேவைகளே உள்ளன முதலாவது: உடல் ஆரோக்கியத்திற்கும், வளர்ச்சிக்கும், நலத்திற்கும், இன்பத்திற்கும் தேவையான உணவு, உடை, இருப்பிடம், இவைகளைச்சேர்ந்த இதர வசதிகள். இரண்டாவது: நமது உள்ளம் எப்போதும் இன்பநிலையில் உற்சாகமாக, அமைதியாக, சாந்தமாக இருப்பதற்கு வேண்டிய அவசியமான இதர வசதிகள்.

முதல் தேவையாகிய நமது உடல் இயங்குவதற்கு "எரிபொருளாக விளங்கும் உணவை" நாம் சரியாக உரிய காலத்தில் உண்ணுவிட்டால் உடனே நமக்குப் பசி தோன்றிக் களைப்பும், சோர்வும் ஏற்பட்டு, நாம் உடனடியாக உணவை உட்கொள்ளும்படியாக நமது உடல் நமக்கு அறிவுறுத்துகிறது. அதுபோல் "நமது உள்ளமும், உயிரும் நிலையான இன்ப நிலையை அடைவதற்குறிய எரிபொருள் தியானம் ஜெபம், பக்கி, பிரார்த்தனை, வந்தனை, வழிபாடு, தொழுகை, அர்ச்சனை, ஆராதனை முதலிய சாதனப் பயிற்சிகளேயாகும்."

உரியகாலத்தில் உணவு உட்கொள்ளாவிட்டால் பசி, களைப்பு, சோர்வு உண்டாகி, நம்மை உடனடியாக உணவு உட்கொள்ளும்படி நமது உடல் அறிவுறுத்துவது போலவே, நாம் "அவரவர் நம்பிக்கைக்கேற்றவாறு" தியானம், தொழுகை. ஜெபம், பக்தி, பிரார்த்தனை, வந்தனை வழிபாடுகளைச் சரியாக உரியகாலத்தில் செய்யாவிட்டால், நமக்குத் துன்பங்களும், கஷ்டங்களும், கவலைகளும், நஷ்டங்களும், தோல்விகளும் தோன்றி, உடனடியாகத் தமது வழிபாடு முறைகள் மூலம் அவரவர் நம்புகிற இறைவனைத் தொழ வேண்டிய அவசியத்தை அறிவுறுத்துகின்றன.

"பக்தி முறைப்படியும், பகுத்தறிவு வாதத்தத்துவத்தின்படியும், விஞ்ஞான சாஸ்த்திரப்படியும்" இந்த உண்மையை நாம் ஒவ்வொருவரும் தினமும் நமது அன்ருட வாழ்வின் செய்கைகளில் நேரிடையாகக் கண்டு அனுபவித்து உணருகிரும்

நமது உடலானது பலவிதமாகச் செயலாற்றுவதை நாம் நேரிடையாகக் கண்டு உணருகிரும் ஆனல் 'இந்த உடலே இயக்கும் உயிரை'' உயிரின் ஒலி-ஒளி-சக்தி மின் அலேகளே நாம் நேரிடையாகக் காண முடிவதில்லே. அதனல். இந்த உயிர்ச் சக்தியை வளர்க்கும முறைகளில் அக்கரைகொள்ளாமல் இருக்கிரும்

நமது உடலேத் துண்டு துண்டாக அறுத்துப் பார்த்தால், பரிசோதனே செய்தால், அதில் வெறும் நரம்புகளும், சதையும், கொழுப்பும், ரத்தமும், எலும்புகளும்தான் இருக்கின்றன. அதனல், "இவைகள் தாமாக இயங்கவில்லே இவற்றை இயக்கும் உயிர்ச் சக்தியாலேயே இயங்குகின்றன." என்பதை அறிந்து உணருகிரும். "இந்த உயிர்ச்சக்தி போய்விட்டால் உடல் இயங்காது ஒன்றுக்கும் உதவாத பிணம் ஆகி, அழிக்கப்பட வேண்டியதுதான்" என்பதையும் மரணத்தருவாயில் நாம் ஒவ்வொருவரும் காண்கிரும். நேரிடையாகக்கண்டு உணருகிரும்.

"நமது கண்ணுக்குத் தெரியாமல் இவ்விதம் உடலே இயக்கும் ஆத்மாவாகிய நமது உயிர்ச் சக்தியின்" தன்மைகளேயும, உண்மைகளேயும் விளக்கிப் போதிப்பதற்காகவே கடவுள் தத்துவம், சமய சாஸ்திரங்கள், வேதங்கள் மதக்கோட்பாடுகள் யாவும் ஏற்பட்டிருக்கின்றன

நமது உடலியல் சாஸ்திரங்களேயும், அதுபற்றிய உண்மைகளேயும், செயலாக்க முறைகளேயும். சுகாதார வைத்திய சாஸ்திரங்கள் மூலம் நாம் ஐந்தாவது வகுப்பு முதலாகவே பள்ளியில் பாடங்களாகப் படித்திருக்கிரும்.

மற்றும்பல பொது நூல்களையும் படித்து அவைகள்கூறும் நெறிமுறைகள் தவருது நடந்து வாழ்ந்து வருகிறோம்.

இந்த உடல் இயக்கமுறையில் ஏதாவது ஒரு சிறு கோளாறு ஏற்பட்டாலும், ஒரு சிறுநோய் தோன்றினாலும் உடனே சற்றும் தயங்காமல் டாக்டரிடமும், நோய்தீர்க்கும் நிபுணரிடமும் ஓடிச்சென்று, நமது நோயையும், நோய்க்கான காரணங்களையும் தெரிந்துகொண்டு அதற்குத்தக்க சிகிச்சையைப் பெறுகிறோம். "இவ்விதம் தக்க சிகிச்சை பெருவிட்டால் உடனே நமது உடலும் வாழ்வும் அழியும்" என்பதை நன்கு அறிந்திருக்கிறோம்.

அதுபோல் நம் கண்களால் காணமுடியாத நமது ஆத்மாவாகிய உயிரையும், உயிர்ச்சக்தி மின் அலைகளையும் பற்றி நாம் தெரிந்துகொள்ளவும், அதன்படி நடக்கவும் சிறந்த முறையில் விஞ்ஞான முறைப்படி போதிக்கக்கூடிய ஞானிகளையும்,பக்தர்களையும் நாடி ஓடிச்சென்று இவற்றின் உண்மைகளைத் தெரிந்துகொண்டு, நமது தவறுகளைத் திருத்திக்கொண்டு நிலையான இன்பமும், அமைதியும் சாந்தியும், முன்னேற்றமும் பெறவேண்டியது மிக மிக அவசியம்.

நாம் தினமும் காலைக் கடன்களைக் கழிப்பதுபோல் "ஏதோ ஒரு கடனைக் கழிப்பதற்காக" ஒரு சில வழிபாடுகளைச்செய்வதாலும், கோவில்களுக்குப் போய்வருவதாலும் போதுமான பலன் உண்டாகாது.

இவ்விதம், நமது உடலில், நமது ஆத்மாவாகச் செயல்புரியும் உயிர்ச்சக்தி மின் அலைகளின் நிலையான இன்ப நிலையின் தன்மைகளைப்போதிக்கும் தெய்வீக, மத தத்துவ சாஸ்திரங்களைப் பழிப்பதும், பகுத்தறிவின் பெயரால், "மூட நம்பிக்கைகள், முட்டாள்களின் செயல்கள் காட்டுமிராண்டிச் செயல்கள், ஏமாற்று வித்தைகள், மோசடிகள்," என்று துவேஷித்து வெறுப்பதை ஒரு

நாகரிகச்செயலாகவும், முன்னேற்றமாகவும், விஞ்ஞான வளர்ச்சியாகவும்'' பலர் கருதும் ஒரு நிலை இப்போது தோன்றியுள்ளது.

''மேலும், ''விஞ்ஞான முறையில் நிரூபித்துக் காட்டாத'' எந்த உண்மையையும், தத்துவத்தையும், இன்றைய மனிதர் யாரும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள், நம்பமாட்டார்கள்'' என்ற ஒரு கருத்து, படித்த பல அறிஞரிடையும் காணப்படுகிறது. அதனால் இச்சிறு நூலில் இந்த உயிர்ச்சக்தி தத்துவமாகிய தெய்விக, ஆத்மிக, வேத மதத் தத்துவங்களை, ''நவீன விஞ்ஞான முறையில்'' விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது. இவைகள் இறைவனின் அருளால் சுமார் முப்பது ஆண்டு கால ஆராய்ச்சியில் கண்ட உண்மைகளும் முடிவுகளும் அனுபவமும் ஆகும்.

அதனால், உடலியல் சுகாதாரத் தத்துவ சாஸ்திரங்களை எல்லாப்பள்ளிகளிலும் ஐந்தாவதுவகுப்பு முதலாகவே பாடமாகவைத்துப் போதிப்பது போலவே, எல்லா மதங்களுக்கும் பொதுவான இந்த உயிர்ச்சக்தி தத்துவமாகிய உயிரியல் தத்துவ சாஸ்திரங்களின் உண்மைகளையும், எல்லாப்பள்ளிகளிலும் 11ம் வகுப்பு முடியப் போதிப்பதும், எல்லா மத ஸ்தாபனங்களுக்கும் போதிய வசதிகளையும் உதவிகளையும் அளித்து பொதுஜனங்களிடையே பரவச் செய்வதும், அனைவரும் பேரின்ப வாழ்வு பெறச்செய்வதும் மிக மிக அவசியம்.

''மதச்சார்பற்ற சர்க்கார் மதவிஷயங்களில் ஈடுபடக் கூடாது'' என்று சொல்லிக்கொண்டு, இந்த உயிர்ச்சக்தி பற்றிய உயிரியல் தத்துவங்களை போதிக்கவும் உதவி செய்யவும், ஆதரவளிக்கவும் கொஞ்சமும் தவறக்கூடாது.

''இதைப்படிக்கும், ஒவ்வொரு சகோதரரும், சகோதரியும் ''இதை ஒரு வாழ்க்கைப்பாடமாகக்'' கொண்டு

பயன்பெற்று பேரின்பவாழ்வைப்பெறவேண்டும்" என்பது எனது பணிவான கோரிக்கையாகும். இந்தக் கோரிக்கை நிறைவேற இறைவனையும் அன்னையையும் பணிந்து பிரார்த்திக்கிறேன்.

மகத்தான தத்துவமாகிய இந்த உண்மைகளை சாதாரணமானவரும் சுலபமாகப் புரிந்துகொண்டு பயன் அடையும்பொருட்டு இதுவரை பல விஞ்ஞானிகளாலும், அறிஞர்களாலும் மேதைகளாலும் பகுத்தறிவாளர்களாலும் கேட்கப்பட்ட முக்கிய கேள்விகளையும் அவற்றிற்கு என்னால் அளிக்கப்பட்ட பதில்களையும் தொகுத்து இந்த நூல் வெளியிடப்பட்டிருக்கிறது:

நமது ஆடை கிழிந்துவிட்டால், உடனே நாம் அதைப்புதுப்பித்து வாங்கியணிந்துகொள்கிறோம். நமது வீடு பழமையாகி இடிந்து விழுந்துவிட்டால், உடனே அதைப்புதுப்பித்து, 'நவீன ஏர்கண்டிஷன் மாளிகையாக' ஆக்கிப்படைத்து அதில் குடியிருந்து இன்பமடைகிறோம்: ''அதுபோல், மிக மிகப் பழமையான நமது ஹிந்து சமயத்தையும், தற்கால ராக்கெட் உலகத்திற்கேற்றவாறு நவீன விஞ்ஞான முறையில் புதுப்பித்து. அதன்பயன்களை அனைவரும் பெற்று பேரின்ப வாழ்வு வாழச்செய்ய வேண்டும்'' என்பதை இலட்சியமாகக்கொண்டு, சென்ற முப்பது ஆண்டுகளாகப் பல ஆராய்ச்சிகள் செய்து இந்த உன்னத விஞ்ஞான ஆராய்ச்சி நூல் வெளியிடப் பட்டிருக்கிறது.

எனது குருநாதர்கள் சுவாமி சுத்தானந்த பாரதியார், ஸ்ரீ அரவிந்தர், அன்னை இவர்களுக்கு காணிக்கையாக இந்தச் சிறு நூல் அர்ப்பணம் செய்யப் படுகிறது.

வணக்கம்.

தங்கள் அன்புள்ள சகோதரன்

தெய்வீக விஞ்ஞானி

**டாக்டர் சாது சு. ஸ்ரீனிவாஸ்,**

இயக்குனர்; "ஸ்ரீ ராமாஸ்ரமம்" ஹிந்துசமயக்கல்லூரி
& சர்வதேச சகோதரத்துவக் கழகம்

நாகுடி P. O., அறந்தாங்கி Tk., புதுக்கோட்டை Dt.,
தென்னிந்தியா, தமிழ்நாடு.

(தமிழ்நாடு தெய்விகப்பேரவையுடன் இணைந்துள்ள
கிளை ஸ்தாபனம்)

ஸ்தாபிதம் 5—10—1947



# முகவுரை

## கவியோகி மகர்ஷி சுத்தானந்த பாரதியார்
## யோகசமாஜம், அடையாறு, சென்னை - 20

வாழ்க்கை என்பது கடலினும் விரிந்தது; அதில் எத்தனையோ துறைகள் உண்டு; உடலான படகில் உயிரான ஒன்று இந்தக்கடலிற் செல்கிறது. இந்தப்படகை ஓட்டுகிறவன் அந்தராத்மா, அந்தராத்மா சிவன்; உயிர் சீவன்; சீவன் மனத்திற் சிக்குண்டது மனம் புறத்தே சென்று புலன் வழியே தெரிந்து உலக அனுபவங்களை உள்ளே கொண்டு குவிக்கிறது அந்த அனுபவங்கள் சித்தத்தில் பதிவாகிச் சுழல்கின்றன. அகங்காரத்தில் "எனது நான்" என்று கிளம்புகின்றன; புத்தியில் பகுத் தறிகின்றன. வாழ்க்கை உலகமான வெள்ளித் திரையில் ஓடுகிறது, ஜீவாத்மா திரை ஒளிவிளக்குப்போலும், பரமார்த்மா மின்சாரம்போலும், ஒரு வானொலிப்பில் மின்சாரபபோலும் சுத்த சக்கி பரமாத்மா; அது பேசுவதில்லை. அதன் சக்தியால் ஒலி அலைகள் விசிப் பேசுகின்றன பாடுகின்றன இவ்வாறு விளையாடும் ஓசை ஒலிகள் அவற்றை இயக்கும் மின்சக்தியை அறிந்து அடங்குதலே பேரின்பமாகும். கடல் அலைகள் எழுந்தும் விழுந்தும் கடலிலேயே விளையாடுகின்றன அதுபோல உலகவாழ்வும் சுத்தசக்தி பரமாத்மன் அருளில் எழுந்து விளையாடி அடங்குதலே சுத்தசக்தி இன்பம் அதையே பேரின்பம் எனகிறோம் உடலாலும், மனதாலும் நுகரும் இன்பம் மாறும், ஆனும் உள்ளினபமான சிவ-சிவக்கலப்பின்பம் எனறும் இனிக்கும் இந்த உடல் போனாலும் அந்த இன்பத்தில் ஆத்மா கலந்து இன்புறும். இந்த இன்பத்தை பெறுவதற்கு வழி யோகமே. யோகம் என்றால் உகுதல்-உயிர், மனமயக்கின்றி உள்ளத்தானுகிய இறைவனைக்கூடி யினபுறுதல் இந்த இன்பத்தை அடையும் வழிகளை பாரத சக்தி. யோகசக்தி, தியானமாலை முதலிய நூல்களில் விளக்கியுள்ளேன்,

1 ஒன்றினை ஒன்றவே யோகம்; அலைமனத்தை
வென்றிடின் ஒன்றும் விரைந்து.

2 வந்ததையும் போனதையும் வாதனைப்பட்
டெண்ணுவதேன்
சிந்தையலை யாதிருக்கச் செய்.

3 பற்றே துயராகும்; பற்றற்றலே பேரின்பம்
கற்றறிந்தோர் கண்ட கருத்து

இவையே பேரின்ப வழியாம்.

"தெய்வீகப்" பேரின்பக் கலைஞரான டாக்டர் ஸ்ரீநிவாசன் "தெய்வீக வாழ்க்கை" என்னும் தமது இந்த அரிய நூலில் வாழ்க்கையின் இரகசியத்தை ஆராய்ந்திருக்கிறர். உடல், உயிர், மனம், சித்தம் இவற்றின் நுட்பம் ஆன்மரகசியம், உடலுயிர் மனம் தூய்மையாகி உள்ளத் தானைக்கூடி யின்புறும் சாதனங்கள், நோயற்று வாழும் வகை, தியான சாதனம், மந்திர ஜப சாதனம் ஆகிய அரிய பயிற்சிகளை இந்நூலில் தெளிவாகக் காணலாம்

டாக்டர் ஸ்ரீநிவாசன் நிறைமுறையான இல்லறத்தில் மனைவி மக்களுடன் வாழும் சாதகர். அவர் மூலிகை மனோதத்துவ மருத்துவப் புலவர். அரிய மருத்துவ ஆராய்ச்சி செய்துள்ளார், கொடிய நோய்களை எளிதில் தீர்க்கும் மூலிகை மருந்துகளைச் செய்து உதவுகிறர். அவர் எளிய, இனிய, ஒற்றிய தெள்ளிய வாழ்க்கை வாழ்ந்து யோகசித்தியைப் பயின்று வருகிறர்.

இவர் அறந்தாங்கிக்கு அருகே நாகுடியில் நல்ல குடிநலம் பேணுகிறர், எனது யோகத்திலும் யோக சமாஜத்திலும் பற்றுடையவர், இவரை நான் கேரளத்தில் நடந்த உலகச் சமய மாநாட்டில் சந்தித்து பெருமகிழ்ச்சி யடைந்தேன், அந்த மாநாட்டில் நானும் பங்கு கொண்டேன்.

டாக்டர் ஸ்ரீநிவாஸன் ஸ்ரீ ராமாஸ்ரமம், ஹிந்து சமயக்கல்லூரி ஆகிய இரண்டு நன்னிலையங்களை நடத்துகிருர்.

இவ்வளவு அரிய ஆத்மா எழுதிய **தெய்வீக வாழ்க்கை** என்னும் இந்த நூலை எல்லோரும் வாங்கிப் பயின்று இன்புறுக.

(ஒப்பம்) **சுவாமி சுத்தானந்த பாரதியார்.**

யோக சமாஜம், அடையாறு.

சென்னை - 20



# மதம் எதற்காக ?

**கேள்வி :** மதம் என்றால் என்ன ? மதம் வாழ்வுக்கு அவசியமா ? மத வழிபாடுகளும், பக்தியும், தியானமும் செய்யாமல், விஞ்ஞானிகள் மகத்தான சாதனைகள் புரிந்திருக்கிறார்கள் இயற்கையை வென்று வாகைசூடியிருக்கிறார்கள். அதனால், ''மதவழிபாடுகள் மனித வாழ்வுக்கு அவசியமல்ல'' என்ற ஒரு கருத்து படித்த அறிஞர்களிடமும் இன்று பரவி வருகிறது, அதனால் மதம் எதற்காக என்று " நவீன விஞ்ஞான முறையில் '' விளக்கிச் சொல்ல வேண்டும்.

**பதில் :** ''நமது உடலில் என்னென்ன பொருள்கள் இருக்கின்றன? இரத்தத்தில என்னென்ன பொருள்கள் இருக்கின்றன? இரத்தம் எப்படிச் சுத்தம் செய்யப்படுகிறது ? அசுத்தப் பொருள்கள் எப்படி வெளியேற்றப்படுகின்றன? ஆகாரங்களையும் உணவுப்பண்டங்களையும் குடலில்எப்படி ஜீரணிக்கப்படுகின்றது? உடலில் உள்ள பலவிதமான அணுக்களும், நரம்புகளும், எலும்புகளும் எப்படிச் செயல் புரிகின்றன? உடலிலுள்ள எந்தப் பொருளாவது கெட்டுவிட்டால், அதை எப்படி சரிசெய்ய வேண்டும்? எந்தப் பொருளாவது சரியாக இயங்காவிட்டால், அவற்றைஎப்படி இயக்க வேண்டும்? '' என்பன போன்ற விஷயங்களையும் உண்மைகளையும், தத்துவங்களையும் போதித்துப் பயிற்சியளிக்கச் சுகாதார வைத்திய சாஸ்திரங்கள் ஏற்பட்டிருக்கின்றன அல்லவா?

அதேபோலவே, கர்ப்பத்திலுள்ள கருவிற்கு எப்படி உயிர் உண்டாகிறது? இந்த உயிர் எப்படி வளர்கிறது ? உடலில் உள்ள ஒவ்வொரு நரம்புமூலமாகவும் – எழுபத்தி இரண்டாயிரம் நரம்புகள் மூலமாகவும் – எப்படிச் செயல் புரிகிறது? மரணம் ஏன் உண்டாகிறது? மரணத்திற்குப் பின் நமது உயிர் எப்படிச் செயல் புரிகிறது? மகத்தான,

பிரமாண்டமான சாதனைகளைச் செய்யக்கூடிய சக்தியும், ஆற்றலும், வலிமையும் நமக்கு எப்படி உண்டாகிறது ? என்பன போன்ற "உயிரியல்" உண்மைகளையும், தத்துவங்களையும், கோட்பாடுகளையும் தெரிவிக்கும் சாஸ்திரங்களே மதம், வேதம், தெய்வீகத் தத்துவம், கடவுள் கோட்பாடு, ஆத்மீக ஞானம், என்றெல்லாம் கூறப்படுகிறது

"நமது தாயின் கர்ப்பத்தில் நமது உடலில் பதிவு செய்யப்படும் ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளானது,படிப்படியாகவளர்ந்து நமதுமரணத்திற்குப்பின்னும் வானத்தில் என்றென்றும் நக்ஷத்திரமாகப் பிரகாசித்துக் கொண்டிருக்க வேண்டும்."

இந்த நிலையை அடைவதற்காகவே மனிதன் பிறக்கிருன், வாழ்கிருன். இந்த நிலையை நமது உயிர் அடையும்படி நாம் வாழாவிட்டால் நமது வாழ்விலுைம், பிறவியினுலும் எவ்விதமான பயனும இல்லை

அதனுல், இந்தநிலையை நாம் அடைவதற்குரியவழிகளைக்காட்டிப் பயிற்சியளித்து அழைத்துச்செல்வதே மதம் ஆகும். தெய்வீகதத்துவ சாஸ்திரங்களாகும் பக்தியாகும். வேதங்களாகும்.

தெய்வ பக்தியும், வழிபாடுகளும், தியானமும் செய்யாமல், விஞ்ஞானிகள் மகத்தான இயந்திர சாதனங்களையுப, சக்திகளையும் கண்டுபிடித்திருக்கிருர்கள். சந்திரனுக்கும் சென்று வந்திருக்கிருர்கள். இயற்கையை வென்று வாகை சூடியிருக்கிருர்கள் என்பது உண்மையே.

ஆனல், இதேவிஞ்ஞானிகள்தான் "ஒரு நொடியில் பல ஆயிரக்கணக்கான சகோதரர்களைக்கொன்று குவிக்கும் பயங்கரப் படுகொலை ஆயுதங்களையும் செய்து குவிக்கிருர்கள்"என்பதை நீங்கள் மறக்கக்கூடாது.

இந்த விஞ்ஞானிகள் இவ்விதம் கோடிக்கணக்கான

பயங்கரப் படுகொலை ஆயுதங்களையும், கருவிகளையும் செய்து குவிப்பதனாலேதான், இன்று உலகில் மூன்றில் இரண்டு பங்கு சகோதரர்கள் உண்ண உணவின்றியும், உடுக்க உடையின்றியும், இருக்க வீடின்றியும் திண்டாடித் தவிக்கிறார்கள், துன்பமடைகிறார்கள்.

ஆனால், இதேவிஞ்ஞானிகள் தெய்வபக்தியும் தியானமும் வழிபாடுகளும் செய்துவந்தால், இப்படிப் பயங்கரப் படுகொலை ஆயுதங்களையும் – கருவிகளையும் ஒருபோதும் உற்பத்தி செய்து குவிக்கமாட்டார்கள்.

" அதற்குப் பதிலாக, இந்தப் படுகொலை ஆயுதங்களுக்கும் கருவிகளுக்கும் ஆண்டுதோறும் செலவு செய்யும் பலஆயிரக் கோடிரூபாய்களை உபயோகித்து வறுமையிலும் துன்பத்திலும் வாடி வதங்கும் பலநூறு கோடிக்கணக்கான சகோதரர்களுக்கு நல்வாழ்வையும், பேரின்ப வாழ்வையும் நிலைநாட்டி மிகமிக உயர்ந்த நிலையை அடையச் செய்திருப்பார்கள்."

"அதனால் பக்தியும், தியானமும், வழிபாடுமில்லாமல் எந்தக் காரியம் செய்தாலும் அது "அழிவை" நோக்கியே செல்லும்,"

பக்தி, தியானம், வழிபாடுகள் தவறாமல் எந்தக் காரியம் செய்தாலும் அது சிறப்பையும், உயர்வையும் பேரின்பத்தையும், அனைவருக்கும் நன்மையையும் நாடியே செல்லும்.

இந்த உண்மையை இந்த ஒரு உதாரணத்தின் மூலமாகவே தெரிந்துகொண்டு ஒவ்வொருவரும், தாம் எந்தக்காரியம் செய்தாலும் அவரவர் நம்புகிற கடவுளை, எப்போதும் மனதில் நினைத்துத் தியானித்துக் கொண்டே செய்து உயர்வையும், சிறப்பையும், பேரின்ப வாழ்வையும் பெற வேண்டியது மிக மிக அவசியம்,

அழிவிலிருந்தும், நாசத்திலிருந்தும் காப்பதற்கே மதம் தேவை.

அழியாத ஆனந்த வாழ்வைப் பெறுவதற்கே மதம் தேவை

---

## 2 எந்த மதம் சிறந்தது?

கேள்வி; உலகில் ஒவ்வொருவரும் தமது மதம்தான் சிறந்ததுஎன்று கூறுகிருர்கள்.கிறிஸ்த்துவமதமேசிறந்தது என்று சில ஹிந்துக்கள் அதில் சேருகிருர்கள். முஸ்லிம் மதமே சிறந்ததென்று அதில் சிலர் சேருகிருர்கள். ஹிந்து மதமே சிறந்ததென்று சில கிறிஸ்துவர்களும்-முஸ்லிம்களும் அதில் சேருகிருர்கள், இதைப்பார்க்கும் சாதாரணமானவர்களுக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது அதனுல், எந்த மதம் சிறந்தது என்பதை விளக்கிச் சொல்ல வேண்டும்

பதில்: சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய இயேசு கிறிஸ்த்து என்னும் ஒரு மனிதருடைய பிறவியினுலும் அவருடைய அன்புக்கோட்பாடுகளை நிறைவேற்றுவதற்காகவுமே கிறிஸ்த்துவமதம் தோன்றியுள்ளது.

அதேபோலவே, முகம்மது நபி என்னும் ஒரு மனிதருடைய பிறவியினுலும், அவருடைய போதனைகளை நிறைவேற்றுவதற்காகவுமே முஸ்லிம் மதம் அமைக்கப்பட்டிருக்கிறது

அதேபோலவே புத்தர் என்ற ஒரு மனிதரின் பிறவியினுலும் அவருடைய கொள்கைகளை நிறைவேற்றுவதற்காகவுமே புத்த மதம் ஏற்பட்டிருக்கிறது.

ஆனுல், ஹிந்து மதம் அப்படி எந்த ஒரு தனி மனிதரின் கோட்பாடுகளையும் நிறைவேற்றுவதற்காகத் தோன்றவில்லை அனைத்துக்கும் ஆதிமுதலாகிய கடவுளின்

கட்டளைகளை நிறைவேற்றுவதையே அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டிருக்கிறது கடவுள் என்பவரால் படைக்கப்பட்டுள்ள என்பத்திநான்குஆயிரம் வகையான ஜீவராசிகளின் உயிர்கள் யாவும் எப்படி இயங்குகின்றன ? எப்படித் தோன்றுகின்றன? எப்படி அழிகின்றன? எப்படி பிறவி எடுக்கின்றன? என்னும் உண்மைகளைக்கூறும் "உயிரியல் தத்துவ சாஸ்த்திரமாகவே" நமது ஹிந்து மதம் தோன்றியுள்ளது.

அதனால், மனிதன் என்பவன் முதன்முதலாக இந்தப் பூமியில் எப்போது தோன்றினனே அப்போதே இந்த உயிரியல் தத்துவமாகிய ஹிந்து மதமும் தோன்றிவிட்டது. இப்படித் தோன்றி, "சுமார் அறுநூத்தி இருபத்திஒன்பது கோடி ஆண்டுகள்" ஆகின்றன என்று நமது கணித சாஸ்த்திரங்கள் கூறுகின்றன

அதனால், அனைத்துக்கும் மேலான சிறந்த மதம் நமது ஹிந்து மதமும், அதனுடைய உயிரியல் தத்துவ உண்மைகளுமே ஆகும்,

சிறந்ததையே சேர்ந்திரு
சிகரம்போல் உயர்ந்திரு



## 3 கடவுள் யார்?

கேள்வி ; விஞ்ஞானிகள் ராக்கெட்டுகளையும் செயற்கைச் சந்திரன்களையும், வான வெளிக் கப்பல்களையும் ஸ்கைலாப்புகளையும் வானமண்டலத்தில் ஏவிச்சுழலவிட்டு இயக்குகிறார்கள். சந்திரனுக்கும்சென்று வந்திருக்கிறார்கள் செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன, சனி முதலிய கிரஹங்களுக்கும் சென்றுவர முயற்சி செய்கிறார்கள் அவ்விதமிருக்க, உங்கள் கடவுள் எந்த அற்புத சாதனையை செய்கிறார் ?

பதில் : " நாம் வசிக்கிற இந்தப் பிரம்மாண்டமான பூமி யானது, ஒரு நிமிஷத்திற்கு நாற்பது ஆயிரம் கிலோ மீட்டர் வேகத்தில், ஒரு நாளைக்கு ஒரு தரம் தன்னைத் தானே சுற்றிக்கொண்டும், ஆண்டுக்கு ஒரு முறை சூரியனை யும் சுற்றி வருகிறது " என்று விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருக்கிறார்கள் அல்லவா ?

இவ்விதம் இந்தப்பிரம்மாண்டமான பூமியை அதன் அயன கதியில் அணுவளவும் பிசகாது சுழற்றிக்கொண் டிருப்பது எந்த விஞ்ஞானியோ, அல்லது எந்தப் பகுத்தறி வாளரோ அல்லவே அல்ல

இந்தப்பிரமாண்டமான பூமியை ஒரு நிமிஷத்திற்கு நாற்பது ஆயிரம் கிலோ மீட்டர்கள் வேகத்தில், அதன் அயன கதியில் அந்தரத்தில் அனுவளவும் பிசகாது, சற்றும் தவறாது. ' அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாகச் " சுழற்றிக்கொண்டிருக்கிற, மகத்தான அதி அற்புதமான, ஆச்சரியமான, பிரம்மாண்டமான சாதனையைச் செய்து கொண்டிருப்பவர் யாரோ, அவரே கடவுள்

அன்புள்ள சகோதரர்களே! சகோதரிகளே அறிந்துகொள்ளுங்கள். இவ்விதம் பூமியை நமது கடவுள் சுழற்றாவிட்டால் பூமி சுழலாது, இயங்காது அழிந்துவிடும்.

## 4. பூமியைப் படைத்தது எந்த விஞ்ஞானி.

கேள்வி: விமானங்களையும், செயற்கைக் கிரகங்களையும் ராக்கெட்டுகளையும் விஞ்ஞானிகள் படைத்திருப்பதுபோல், இந்தப் பூமியைப் படைத்திருப்பது எந்த விஞ்ஞானி ?

பதில்: தரையில் கொஞ்சம் மண் எடுத்து அதைத் தண்ணீரில் கரைத்துப் பார்த்தால் அடியில் மணலாகத் தங்கியிருப்பது பூமியணுக்கள். மேலே கலங்கலாகத் தெரிவது ரஸாயனப் பொருள்கள்.

இந்தப் பூமியணுக்களேயும், ரஸாயனப் பொருள் களேயும் சேர்த்து அதில் “ஹைடிரஜன்” என்னும் நீரக வாயுவைப் பாய்ச்சி, இவைகள் இறுகிக் கெட்டிப்பட்டுப் பூமியாக மாறும்படி செய்திருக்கும் அதிசயமான விந்தை யான விஞ்ஞானி யாரோ, அவரே கடவுள்.

அன்புள்ள சகோதரர்களே! சகோதரிகளே நீங்கள் இந்தப் பிரம்மாண்டமான பூமியின்மீது காணும், மலைகள் மடுக்கள் மற்ற யாவற்றையும் இவ்விதம் அணுக்களின் ரஸாயன முறைச் சேர்க்கையாலேயே உண்டாக்கி இயக்கும் சுழற்றும் விந்தையான விஞ்ஞானி யாரோ அவரே கடவுள் அறிந்துகொள்ளுங்கள்.

இவ்விதம் இந்தப் பூமியின் ரஸாயன முறைச் சேர்க்கையிலும் பல பல மாற்றங்கள் செய்து, பூமியில அந்தந்த இடத்திற்கேற்றவாறு வைரங்கள், ரத்திலங்கள் கோமேதகம், புஷ்பராகம், நீலம், பச்சை, சிகப்பு நிறக் கற்கள், தங்கம், வெள்ளி, ஈயம், இரும்பு, பித்தளே, தாமிரம், அலுமினியம், கெந்தகம், யுரேனியம், நிலக்கரி எண்ணே, நீர் ஊற்றுகள் போன்ற பல பல. பொருள் களேயும், “இவைகள் மனிதருக்கு அவசியமாகத் தேவை” என்பதை “முன்பே அறிந்து” இவைகளே இப்பூமியில் அமைத்திருக்கும் விந்தையான விஞ்ஞானி யாரோ அவரே கடவுள.

அன்புள்ள சகோதரர்களே! சகோதரிகளே!! அறிந்துகொள்ளுங்கள்.



## 5. கடவுள் பூமியை எப்படி சுழற்றுகிருர்?

கேள்வி: இந்தப் பிரமாண்டமான பூமியைக் கடவுள் எப்படிச் சுழற்றுகிருர் ?

பதில்: இப்போது விஞ்ஞானிகள் வானவெளிக் கப்பல்

களையும், ராக்கெட்டுகளையும், செயற்கைக் கிரஹங்களையும் பூமியிலிருந்தபடியே டெலிமீட்ரி சக்தி - டெலிமீட்ரி கருவிகள்மூலமாகவும், "ரேடியோ அலைகள்" மூலமாகவும் எப்படி இயக்கிச் சுழற்றிச் செயல்புரியச் செய்கிறார்களோ, அதேபோலவே, வானவெளிக் கலங்களில் ஏதாவது கோளாறுகள் ஏற்பட்டால், பூமியிலிருந்தபடியே "ரேடியோ அலைகள்" மூலமாகவே எப்படிச் சரிசெய்து இயக்குகிறார்களோ அதேபோலவே, நமது கடவுளும், இந்தப் பிரமாண்டமான பூமியை அதன் அயனகதியில் அணு அளவும் பிசகாமல் அந்தரத்தில் ஒரு நிமிஷமும் தவறாமல் சுழன்று செல்லும்படி சுமார் அறுநூத்தி இருபத்து ஒன்பது கோடி ஆண்டுகளாய் "ரேடியோ அலைகள்" மூலமாகவே இயக்கிச் சுழலவிட்டுக்கொண்டிருக்கிறார், இன்னும் பல ஆயிரம்கோடி ஆண்டுகளுக்கு இவ்விதம் "ரேடியோ அலைகள்" மூலமாகவே இந்தப்பிரம்மாண்டமான பூமியைச் சுழலவிட்டுக்கொண்டிருப்பார்.

இப்படிப்பட்ட பிரமாண்டமான சாதனைகளைப் புரிந்துகொண்டிருப்பதற்காகவே அவரைக் "கடவுள்" என்று போற்றிப் புகழ்ந்து பணிந்து வணங்குகிறோம். பூஜிக்கிறோம்.

## 6. கடவுள் பூமியை எப்படித் தாங்குகிறார்?

கேள்வி: இந்தப் பிரமாண்டமான பூமியைக் கடவுளே தாங்குகிறார் காப்பாற்றுகிறார் இவ்விதம் கடவுள் காக்கா விட்டால் பூமியும் பூமியிலுள்ள சகல ஜீவன்களும் அழிந்து விடும், நாசமாகிவிடும் - என்று சகல மதங்களும் வேதங்களும் சாஸ்திரங்களும் கூறுகின்றனவே, இந்தப் பிரம்மாண்டமான பூமியையும், பூமியிலுள்ள கோடிக் கணக்கான பொருள்களையும் கடவுள் எப்படித்தாங்குகிறார்? அழியாமல் எப்படிக் காப்பாற்றுகிறார்? என்பதை "விஞ்ஞான முறையில்" விளக்கிச் சொல்ல வேண்டும்.

பதில்: ''இந்தப்பூமியின்மீதுள்ள பொருள்கள் யாவற்றையும் கீழே விழாமல் இழுத்துப் பிடித்துக்கொண்டிருப்பது, ''ஆகர்ஷண சக்தியே'', இந்த ஆகர்ஷண சக்தி இல்லாவிட்டால் பூமி சுழலாது பூமியின்மீதுள்ள பொருள்கள் யாவும் அதில் தங்கமுடியாமல் கீழே விழுந்து அழிந்து நொறுங்கி நாசமாகிவிடும்''-என்று விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருக்கிறுர்கள் அல்லவா?

இவ்விதம் பூமி சுழலவும், பூமியின் மீதுள்ள பொருள்களைக் கீழே விழாமல் இழுத்துப்பிடித்துக்கொண்டிருப்பதற்காகவும், இந்தப் பிரம்மாண்டமான பூமியில் 'ஆகர்ஷண சக்தி' என்னும் மகத்தான, பிரம்மாண்டமான அளவிடமுடியாத அற்புத சக்தியை ஆதிமுதலாகப் பதிவு செய்து வைத்தும், இந்த ஆகர்ஷண சக்தியானது, இது வரை சுமார் அறு நூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாகப் ''பூமியிலிருந்து வெளியாகி விடாமல்' தடுத்துக் காத்துக்கொண்டிருப்பதன் மூலமாகவும் கடவுள் இந்தப் பூமியைத்தாங்குகிருர். பூமியின்மீதுள்ள பொருள்களைக்காக்கிருர்.

இவ்விதம் இந்தப் பிரம்மாண்டமான பூமியையும், பூமியின் மிதுள்ள பொருள்களையும் கீழே விழாமல் இழுத்துப்பிடித்துக்கொண்டிருப்பதற்காக, இந்தப் பூமியில் பிரம்மாண்டமான ஆகர்ஷண சக்தியைப் பதிவு செய்து வைத்து, இச்சக்தி பூமியிலிருந்து வெளியாகிவிடாமல் காப்பது எந்த விஞ்ஞானியோ அல்லது எந்தப் பகுத்தறிவாளரோ அல்லவே அல்ல,

இவ்விதமாகவே, ''கடவுள் பூமியையும் பூமியிலுள்ள சகல பொருள்களையும் கடவுள் தாங்குகிருர். காக்கிருர்' என்று சகல வேதங்களும், மதங்களும், சாஸ்திரங்களும் கூறுகின்றன. இந்த ஆகர்ஷணசக்தியையே
"ஆதிபராசக்தி" ★ என்று சகல
தெய்வீகத்தத்துவ சாஸ்திரங்களும்
கூறுகின்றன.

## 7 சூரியனைப் படைத்தது எந்த விஞ்ஞானி?

**கேள்வி:** பூமியைக் கடவுள் படைத்திருக்கிருர் என்ருல், சூரியனைப் படைத்திருப்பது எந்த விஞ்ஞானி?

**பதில்:** இப்போது உலகில், வெளிச்சம் கொடுக்கவும், இயந்திர சாதனங்களை இயக்கும் சக்தியைக் கொடுக்கவும் வேண்டி, மின்சார சக்தி உற்பத்தி நிலையங்களை விஞ்ஞானிகள் அமைத்திருப்பது போலவே, இந்தப் பிரம்மாண்டமான பூமிக்கும், சந்திரனுக்கும், மற்ற கிரகங்களுக்கும் வெளிச்சம கொடுக்கவும், உஷ்ணத்தை அளிக்கவும், சக்தியை அளிக்கவும வேண்டிய ஒரு சக்தி நிலையமாகச் சூரியனை அமைத்துப் படைத்து, அறுநூத்தி இருபத்தி ஒனபது கோடி ஆண்டுகளாக இயக்குபவரே 'கடவுள்' ஆவார்.

இவ்விதம் பூமியைப்போல் பலபங்கு பெரிதான சூரியனை அமைத்துப் படைத்து இயக்குவது எந்த விஞ்ஞானியோ அல்லது எந்தப் பகுத்தறிவாளரோ அல்லவே அல்ல.



## 8 நவக் கிரகங்கள் சுழல்வது எப்படி?

**கேள்வி:** சந்திரன் முதலிய சகல கிரகங்களும் பூமியும் சூரியனைச் சுற்றி வருவதாக விஞ்ஞானிகள் கூறுகிருர்கள் இவை ஏன் சூரியனைச்சுற்றுகின்றன? எப்படிச்சுழல்கின்றன?

**பதில்;** உதாரணமாக ஒரு சைக்கிள் ஓடிக்கொண்டே இருந்தால் அது கீழே சாய்ந்து விழாது, அதன் மேல் ஒரு மனிதரும் ஏறிக்கொண்டு செல்லலாம், தாங்கும் அளவு பாரங்களும் ஏற்றிவைத்து ஓட்டலாம். ஆனுல் இந்த சைக்கிள் ஒரு நிமிஷம் ஓடாமல் நின்ருல் உடனே கீழே

சாய்ந்து விழுந்துவிடும். அதனல் ஸ்டாண்டுபோட்டுத் தாங்கிவைத்து நிற்கச் செய்யவேண்டும். அதனல் "ஒரு பொருள் ஓடிச் சுழன்றுகொண்டே இருந்தால் "அந்தச் சுழற்சியின் வேகத்தால்" சாய்ந்து கீழே விழுகாத நிலேயும் சக்தியும் உண்டாகிறது".

இந்தப் பிரமாண்டமான பூமி, சந்திரன், மற்ற கிர ஹங்கள் யாவும், வானமண்டலத்தில் "எவ்வித ஆதார மும் தாங்கும் சாதனமும் இல்லாமல் அந்தரத்தில்" இருப் பதால் அவற்றைக் கீழே விழாமல் காக்கவேண்டும்.

பூமியில் ஆகர்ஷண சக்தியை அமைத்திருப்பதுபோல் சந்திரன் முதலிய சகல கிரகங்களிலும் ஆகர்ஷண சக்தி களேக் கடவுள் அமைத்துப் படைத்திருக்கிருர். இவை களின் ஆகர்ஷண சக்தியும், சூரியனின் உஷ்ண மின் காந்த சக்தியும் ஒன்றையொனறு பிடித்து இழுத்துக் கோண்டே இருப்பதால் சுழற்சி ஏற்பட்டு வேகமடைந்து அவைகள் அந்தரத்தில் நிலேத்து, நீடித்து இருக்கும்நிலே உண்டாகிறது.

அதனல், சகல கிரஹங்களும் அவைகளில் உள்ள பொருள்களும் கீழேவிழாமல் காக்கவே அந்தரத்தில் நிலேத் திருப்பதற்காகவே, இவ்வாறு சூரியனின மின் காந்த சக்தியால் இழுக்கப்பட்டுச் சுழன்றுகொண்டிருக்கும்படி "கடவுள்" அமைத்திருக்கிருர் விஞ்ஞானிகளோ பகுத்தறி வாளர்களோ இவ்விதம் அமைக்கவில்லே.

இல்வாறு கடவுள் அமைத்திருக்காவிட்டரல் பூமியும், மற்ற கிரஹங்களும் அவைகளிலுள்ள பொருளகளும் தமது சுழற்சியிலிருந்து நின்று தவறிக் கீழே விழுந்து நொறுங்கி ஒரு நொடியில் நாசமாகி யாவும் அழிந்துவிடும்.

## 9 சூரியன் ஒளியும் உஷ்ணமும் கொடுப்பது எப்படி?

கேள்வி ; சூரியன் பூமியிலிருந்து சுமார் ஒன்பதரைக் கோடி மைல்கள் தூரத்தில் இருக்கிறது இவ்வளவு தூரத்

திற்கு ஒளியும், உஷ்ணமும் வரும்படி உங்கள் கடவுள் எப்படிச் செய்கிருர் ?.

பதில்; நமது பூமியைச்சுற்றி ஒரு வாயுமண்டலத்தை அமைத்திருப்பதுபோலவே சூரியனைச்சுற்றியும் ஒரு வாயு மண்டலத்தைக் கடவுள் அமைத்திருக்கிருர். இந்த வாயு மண்டலத்தில், வெள்ளி, தாமிரம், அலுமினியம் அயம், நைட்ரஜன் போன்ற பல பொருள்களின் மூலகங்களை அமைத்திருக்கிருர். சூரியனிலுள்ள கருவிகளும், சாதனங்களும், இந்த வாயுமண்டலத்திலுள்ள வாயுவையும், நைட்ரஜன முதலிய மற்ற பொருள்களின் மூலகங்களையும் வெப்ப சக்தியாகவும். ஒளிப் பிழம்புகளாகவும் மின் காந்த அலைகளாகவும் மாற்றி, பூமிக்கும, மற்ற கிரஹங்களுக்கும் அனுப்பிக்கொண்டே இருக்கின்றன

இவ்வாருக எங்கள் கடவுள் சுமார் அறுநூத்தி இருபத்தி ஒன்பதுகோடி ஆண்டுகளாகச் சூரியன்மூலம் பூமிக்கும் மற்ற கிரஹங்களுக்கும் ஒளியையும், உஷ்ணத்தையும் மின் காந்த அலைகளையும் ஒரு நிமிஷமும் தவருமல் அனுப்பிக்கொண்டே இருக்கிருர். இன்னும் பல ஆயிரம்கோடி ஆண்டுகளுக்கு இவ்விதம் அனுப்பிக்கொண்டே இருப்பார். இப்படிப்பட்ட கடவுளை இல்லையென்று சொல்வது குருட்டுத்தனம்

## 10. சூரியனை இயக்குவது யார் ?

கேள்வி: சூரியனுடைய உஷ்ணம் ஒன்பதரைக் கோடிமைல்கள் தூரத்திலுள்ள பூமியில் இருக்கும் நம்மையே சுடுகிறது வெய்யில்காலத்தில் பகல் பணிரெண்டு மணிக்கு வெளியில் செல்லமுடியவில்லை, அதனுல் சூரியனின் அருகே உஷ்ணம் அதிகம். எவரும் நெருங்க முடியாது. நெருங்கினுல் எரிந்துபோய்விடுவார்கள் என்று விஞ்ஞானிகள் கூறியிருக்கிருர்கள் அதனுல் சூரியனில் இருந்து யார் எவ்விதம் அதை இயக்குகிருர்கள் ?

பதில் : நாம் வீட்டிலும் தொழிற்சாலைகளிலும், உப யோகிக்கும் மின் சக்தியானது பல நூறுமைல்களுக்கு அப் பால் இருந்துவருகிறது. இதைத் தவறான முறையில் தொட்டால்தான் ஆபத்து நேரிடுகிறது. சரியான முறை யில் உபயோகித்தால் அபாயம் இல்லை, மேலும் மின்சக்தி யானது பல நூறு மைல்களுக்கு அப்பால் ஒளியும், சக்தி யும் கொடுத்தாலும், இந்த மின்சக்தி உற்பத்தி செய்யப் படும் நிலையங்களில் வேலை செய்பவர்களைச் சுடுவதில்லை தாக்குவதில்லை அதுபோல், சூரியனின் உஷ்ணம் பூமி யிலும், மற்ற கிரஹங்களிலும் தாக்கினாலும், அதில் வேலை செய்து இயக்குபவர்களைத் தாக்குவதில்லை. இவ்விதம் நம் கடவுள் அமைத்திருக்கிறார்.

இந்தச் சூரியனை இயக்கும் தலைமை விஞ்ஞானி. நம் கடவுளே ஆவார் இவருடைய தலைமையில், வாலகில்லி யர்கள் எனனும் அறுபதினாயிரம்பேர் தினசரி மூன்று ஷிப்ட்டுகளாக வேலைசெய்து இந்தச் சூரியனை இயக்குகி றார்கள், இவர்களின தலைமை இஞ்ஜினியரின் பெயர் அருணன் என்பதாகும்.

மற்றும் ரிஷிகள், கந்தர்வர்கள், கிராமினிகள்' யக்ஷர்கள், தேவர்கள் முதலியோர் அறுபதினாயிரம் பேர்கள் உபரியாக, இந்தச் சூரியனின் இயக்கத்தில் பங்குகொள்ள எப்போதும் சித்தமாகக் காத்துக்கொண்டிருக்கிறார்கள் இவற்றிற்குத் தக்க ஆதாரங்கள் நமது சாஸ்திரங்களில் உள்ளன

இவ்விதமாகவே நம் கடவுள் சூரியனைச் சுமார் " அறு நூத்தி இருபத்தி ஒன்பதுகோடி ஆண்டுகளாக" இயக்கிக் கொண்டிருக்கிறார். இன்னும் பல ஆயிரம்கோடி ஆண்டு களுக்கு இவ்விதம் இயக்கிக்கொண்டிருப்பார் இந்த உண் மைகளை உணராமல் பிதற்றிக்கொண்டிருப்பது பகுத்தறிவு அல்ல

## 11. உயிரினங்களுக்கு உயிர் வருவது எப்படி ?

கேள்வி ; " இந்தப் பூமியிலுள்ள, எண்பத்தி நாலாயிரம் ஜீவராசிகளுக்கும் கடவுளே உயிர்கொடுத்துக் காக்கிறார் ''—என்று எல்லா வேதங்களும, மதங்களும், சாஸ்திரங்களும் கூறுகின்றன. ஒருவர் ஒரேசமயத்தில் எல்லா உயிரினங்களுக்கும் எப்படி உயிர்கொடுத்துக் காக்கமுடியும் ? இது எப்படி உண்மை ? " விஞ்ஞான முறையில் நிரூபித்து '' விளக்கிச் சொல்லவேண்டும்

பதில் ; " சூரியனிடமிருந்து வருகிற உஷ்ண சக்தி அலைகளாகிய மின்சக்தி அலைகள், புல், பூண்டு, மரம் செடி கொடி, முதலியவற்றின்மீதுள்ள இலைகளின்மீது படிந்து, அவற்றிலுள்ள, நரம்பு நார்கள் மூலமாக அடிவேர்வரை சென்று, பூமியிலுள்ள நீர்ச்சக்தியை மேலேகொண்டுவந்து, அவைகள் வளர்ந்து பூத்துக்காய்த்துப் பயன்தரச் செய்கின்றன சூரியனுடைய உஷ்ணசக்தி மின் அலைகள் இவ்வாறு அனைத்திலும் படிந்து பரவி, அவைகளை இயக்காவிட்டால், எதுவுமே உயிர்வாழவோ, வளரவோ முடியாது ''—என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள் அல்லவா ?

அதேபோலவே, மனிதரிடத்திலும், மற்ற உயிரினங்களிலும், அவற்றின் உடலின்மீதுள்ள மயிர்களில் சூரியனுடைய உஷ்ணசக்தி மின் அலைகள் படிந்து அவற்றின் மூலம், உள்ளே சென்று உடலிலுள்ள நரம்புகள் பூராவுக்கும் பாய்ந்து பரவி, வியாபித்து இயக்கிச் செயல்புரியச் செய்கிறது.

இவ்வாறு சூரியனுடைய உஷ்ணசக்தி மின் அலைகளே, சகல உயிரினங்களையும் அவற்றிற்கு உயிராக இருந்து செயல்புரியச் செய்வதால், சூரியனையும் கடவுள் என்று சிலர் வணங்குகிறார்கள்,

இந்தச் சூரியனையும் கடவுள் இயக்கி, யாவற்றுக்கும் உயிர்சக்தி மின் அலைகளை அனுப்பி இயக்கி வாழச் செய்வதையே—“ கடவுள் யாவற்றுக்கும் உயிர்கொடுத்துக் காக்கிறார் ” என்று கூறப்பட்டிருக்கிறது.

## 12 சந்திரனையும், மற்ற கிரகங்களையும் சுழற்றுவது யார் ?

கேள்வி : சந்திரனையும் மற்ற கிரஹங்களையும், சுழற்றுவது யார் ?

பதில் : சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்ரன் சனி, ராகு, கேது, முதலிய பிரம்மாண்டமான கிரஹங்களை எந்த விஞ்ஞானியோ, அல்லது எந்தப் பகுத்தறிவாளரோ, அந்தரத்தில் அமைத்துப் படைத்துச் சுழற்றிக்கொண்டிருக்கவில்லை.

இந்த ஒன்பது கிரஹங்களையும் மற்றும் நாம் வானத்தில் காண்கிற சகல கிரஹங்களையும், அந்தரத்தில் அதனதன் அயனகதியில் சற்றும் தவறாமல், ஒரு நிமிஷமும் மாறாமல், சுமார் “அறுநூத்தி இருபத்தி ஒன்பதுகோடி ஆண்டுகளாக” “ரேடியோ அலைகள்” மூலமாகவே இயக்கிச் சுழலவிட்டுக்கொண்டிருப்பவர் யாரோ, அவரே நமது கடவுள் ஆவார்

இன்னும் பல ஆயிரம்கோடி ஆண்டுகளுக்கு நம் கடவுள் இவ்விதம் இக்கிரஹங்களை இயக்கிச் சுழலவிட்டுக் கொண்டிருப்பார் இந்தப் பிரம்மாண்டமான சாதனையை தினமும் நேராகக் கண்டும், கடவுளைப் பழிப்பது பகுத்தறிவு அல்ல.

## 13 நவகிரஹங்கள் எதற்காக ?

கேள்வி : இந்தக் கிரஹங்களையெல்லாம் எதற்காகப் படைத்துச் சுழலவிட்டுக்கொண்டிருக்கிறார் ? அவருக்கு வேறு வேலை இல்லையா ?

பதில் : நம் வாழ்வுக்கு உண்மை, சத்தியம், சாந்தம், சகோதரத்துவம், அன்பு, அஹிம்சை, நீதி, நேர்மை, பண்பு, பக்தி, ஒழுக்கம், காதல், வீரம் கோபம், துக்கம், முதலிய பலவிதமான உணர்ச்சிகளும் தேவை. உணர்ச்சிகளில் இவ்வித வேறுபாடுகள் இல்லாவிட்டால் வாழ்க்கை வெறுத்து வீணாகிவிடும். அதனால் நம் வாழ்க்கைக்கு இந்த ஒன்பதுவிதமான உணர்ச்சிகளையும் கொடுப்பதற்காக இந்த ஒன்பது கிரகங்களையும் நம் கடவுள் படைத்துள்ளார். ரேடியோ டெலிவிஷன் தொடர்புகளுக்காக விஞ்ஞானிகள் செயற்கைக் கோள்கள் அமைத்திருப்பது போல சூரியனிடமிருந்து வரும் உஷ்ண சக்தி, மின் அலைகள் நம் உடலில் உஷ்ணத்தையும், கோப உணர்ச்சியையும் உண்டாக்குகிறது

சந்திரனிடமிருந்து வரும் சாந்த சக்தி மின் அலைகள் நம் உடலில் அன்பையும், அமைதியையும, சாந்தத்தையும் இன்பத்தையும், குளிர்ச்சியையும் உண்டாக்குகிறது.

செவ்வாயினிடமிருந்து வரும் சக்தி அலைகள், நம் உடலில் ரத்த அணுக்கள் விருத்தியடையவும் ரத்தஓட்டம் சிரப்பாக நடைபெறவும், வீரம், வெற்றியளிக்கக்கூடிய உணர்ச்சிகளையும் உண்டாக்குகிறது.

புதனிடமிருந்துவரும் சக்தி அலைகள் நமது மூளை நரம்புகளை இயக்கி, மகத்தான புத்தி, சாதுர்யம், சாகஸச் செயல்கள் புரியும் சக்திகளையும், உணர்ச்சிகளையும் உண்டாக்குகிறது

வியாழனிடமிருந்து வரும் சக்தி அலைகள், நமக்கு மகத்தான அறிவு, ஞானம், பக்தி, பண்பு, நீதி, நேர்மை சத்தியம், யோகம், முதலிய உன்னத உணர்ச்சிகளை உண்டாக்குகிறது.

சுக்கிரனிடமிருந்து வரும் சக்தி அலைகள் நமது விந்து அனுக்களை வளர்தது, காதல் உணர்ச்சிகளையும், தூண்டிவிட்டுச் சந்தான விருத்திகளையும் உண்டாக்குகிறது.

சனியினிடமிருந்து வரும் சக்தி அலைகள், யாராவது நீதி, நேர்மை, சத்தியம், அன்பு, அஹிம்சை, பண்பு பக்திக்கு விரோதமான காரியங்களைச் செய்தால், அவர்களுக்குப் பலவிதமான இடையூறுகளையும், கஷ்டங்களையும் நஷ்டங்களையும், துன்பங்களையும், தீமைகளையும் உண்டாக்குகிறது.

ராகுவிலிடமிருந்து வரும் சக்தி அலைகள், நமது உடலில் உண்டாகும் விஷப்பொருள்களை வெளியேற்றி உடல் சிறப்பாகச் செயல்புரியச் செய்கிறது.

கேதுவினிடமிருந்து வரும் சக்தி அலைகள், உலக வாழ்வில் வெறுப்பையும, ஞானம், மோக்ஷம், தெய்வீகம் ஆத்மீகம், முதலிய தத்துவ சாஸ்திரங்களில் ஈடுபாட்டையும் உண்டாக்குகிறது.

இதுபோல் மற்ற ஒவ்வொரு கிரஹத்தையும் நமது சிறப்பான நல் வாழ்வுக்காகவே பலவித சக்திகளையும் நமக்குக் கொக்கும்படி நமது கடவுள் அமைத்து. அவைகளைச் சுமார் அறுநூற்றி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாக, அதனதன அயனகதியில் அந்தரத்தில் அணுவளவும் பிசகாமல், ஒரு நிமிஷமும் மாருமல் இயக்கிச் சுழல் விட்டுக்கொண்டிருக்கிருர், இவ்விதம் இன்னும் பல ஆயிரம்கோடி ஆண்டுகளுக்குச் சுழல விட்டுக்கொண்டிருப்பார் இவைகளை நாம தினமும கண்டும் கடவுளைப் பழிப்பது காட்டுமிராண்டித்தனம்.

## 14. ஜோதிட சாஸ்திரம் பொய்யல்ல

கேள்வி: ஜோதிட சாஸ்திரம பார்ப்பதாகச் சொல்லிக்கொண்டு, பலர் பலவிதமான பலன்களைச் சொல்லுகிருர்கள் அவர்கள் சொல்படி பெரும்பாலும் நடைபெறுவதில்லை. அதனுல் ஜோதிட சாஸ்திரம பொய்தானே?

பதில்; உதாரணமாக:- ஒருவர் சித்திரை மாதம் பத்தாம் தேதி காலை 9-மணிக்குப் பிறந்தால், அப்போது

பூமியின் அருகில் எந்தெந்த கிரஹம் சுழன்றுகொண்டிருக்கிறதோ, அந்தந்த கிரஹங்களின் மின் காந்த ,சக்தி அலைகள் அந்த சிசுவின் உடலில் பதிவாகி, அதற்கேற்ற குணங்களையும், உணர்ச்சிகளையும் உண்டாக்குகிறது.

அதன்பின் மரணம்வரை எந்தெந்த கிரஹங்கள், எந்தெந்தச் சமயத்தில், தனது சுழற்சியில், பூமியின் அருகே வருகிறதோ அந்தந்தச் சமயங்களில், அந்தந்தக் கிரஹங்களின் காந்த சக்தி அலைகள் நம் உடலில் பதிந்து, அதற்கேற்ற குணங்களையும், செயல்களையும், உணர்ச்சிகளையும் உண்டாக்குகிறது.

இந்த மாறுதல்களையும், கிரஹங்களின் சுழற்சியில் நாம் பிறந்த நேரப்படி எந்தெந்த சமயம் எந்தெந்த கிரகம் பூமியின் அருகே வந்து, நமது வாழ்வில் என்ன பலன்களை உண்டாக்கும் என்ற உண்மைகளைத் தெரிவிப்பதே ஜோதிட சாஸ்திரமாகும். இந்த சாஸ்திரமும் பொய்யல்ல. உண்மையானது. சரியானது. மாறுதல் இல்லாதது. சத்தியமானது.

ஆனால், இந்த சாஸ்திரத்தைப் பார்த்துச் சொல்பவர்களின் தவறுகளாலேயே, சரியான பலன்கள் சொல்கிறபடி நடைபெறுவதில்லை சரியான நிபுணர்கள், சரியாகப் பார்த்துச்சொன்னால் அவைகள் சரியாக இருக்கும், தவறு இருக்காது

## 15. கிரஹகங்களை கடவுள் எப்படிச் சுழற்றுகிறார் ?

கேள்வி ; இந்தக் கிரஹங்களை யெல்லாம் உங்கள் கடவுள் எப்படிச் சுழற்றுகிறார் ?

பதில் :- இப்போது விஞ்ஞானிகள் ராக்கெட்டுகளையும், வானவெளிக் கப்பல்களையும், செயற்கை கிரஹங்களையும் பூமியில் இருந்தபடியே "ரேடியோ அலைகள்"— மூலமாகவே எப்படி இயக்கிச் சுழலவிடுகிறார்களோ அதே

போலவே, வானவெளிக் கப்பல்களிலும், செயற்கைக் கிரஹங்களிலும் ஏதாவது கோளாறுகள் ஏற்பட்டால். அவைகளைப் பூமியிலிருந்தபடியே 'ரேடியோ சமிக்ஞைகள்' மூலமாகவே சரிசெய்து எப்படி மீண்டும் இயக்குகி ருர்களோ அதேபோலவே, நம் கடவுளும் சகல கிரஹங் களையும் ' ரேடியோ அலைகள் மூலமாகவே இயக்கி'' அதன தன் அயனகதியில் அந்தரத்தில் அனுவளவும் பிசகாமல், ஒரு நிமிஷமும் தவருமல் சுழன்று செல்லும்படி சுமார் அறுநூற்றி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாகச் சுழற்றிக் கொண்டிருக்கிருர்.

இன்னும் பல ஆயிரம்கோடி ஆண்டுகளுக்கு இவ்விதம் சுழற்றிக்கொண்டிருப்பார்.

இவ்விதம் பூமியையும், மற்ற சகல கிரஹங்களையும் சுழற்றும் இந்த சக்தியையே ரேடியோ அலைகளையே அன்னை பராசக்தி தேவியின் சக்தி என்றெல்லாம் நமது மத, வேத. சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது. இந்த உண்மைகளை ஆராய்ந்து உணராமல் உளரிக்கொண்டி ருப்பது பகுத்தறிவு அல்ல

## 16 கடலைக் காப்பது எந்த விஞ்ஞானி.

கேள்வி: கடல் எப்படி உண்டாயிற்று? யார் உண்டாக்கிஞர்கள் ?

பதில் : அன்புள்ள சகோதரர்களே ! சகோதரிகளே!! நீங்கள் காண்கிற பிரம்மாண்டமான கடலையும். அதிலுள்ள அளவிடமுடியாத அளவுள்ள நீரையும், எந்த விஞ்ஞா னியோ, அல்லது எந்தப் பகுத்தறிவாளரோ உண்டாக்க வில்லை. பூமியுடன் சேர்த்துச் சுழற்றவில்லை.

இந்தப் பிரம்மாண்டமான கடலை உண்டாக்கி, அதைப் பூமியுடன சேர்த்து ''அந்தரத்தில்'' ''ஒரு சொட்டு நீர்கூடக் கீழே சிந்தாமல்'' சுமார் அறுநூற்றி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாக ''ரேடியோ அலைகள் மூல மாகவே'' சுழற்றி இயக்கிக்கொண்டிருப்பவர் யாரோ. அவரே நமது கடவுள்.

இவ்விதம் இந்தப்பிரம்மாண்டமான கடலைப்பூமியுடன் சேர்த்து இன்னும் பல ஆயிரம் கோடி ஆண்டுகளுக்கு இயக்கி "அந்தரத்தில்" சுழற்றிக்கொண்டிருப்பவர் நமது கடவுளின் பெருமையை விளக்க இது ஒனறு போதாதா? இதுபோன்ற ஏராளமான பெருமைகள் படைத்த கடவுளை பழிப்பதுதான் பகுத்தறிவா?

## 17 கடல் நீரில் உப்பு

கேள்வி: கடலில் இவ்வளவு பிரம்மாண்டமான அளவு நீர் எப்படி உண்டாயிற்று? கடல் நீர் ஏன் உப்பாக இருக்கிறது? நல்ல தண்ணீராக இருந்தால் எவ்வளவோ நலமாக இருக்குமே!

பதில்: "இந்தப் பூமி தோன்றியது முதல் இதுவரை பெய்த மழை நீர் எல்லாம் சேர்ந்துதான் கடலில் தேங்கி இவ்வளவு பெருகியிருக்கிறது" என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள்.

ஆனால், மழை நீர் உப்பாக இருப்பதில்லை. சுத்தமான நீராகவே இருக்கிறது. அதனால், கடல் நீரானது மழைத் தண்ணீரே என்று சொல்வது பொருந்தாது உண்மை அல்ல

கடல்நீரில் கொஞ்சம் எடுத்து, அதை ரஸாயனமுறையில் பரிசோதனை செய்து பார்த்தால், அதில் எவ்விதமான ரஸாயனப் பொருள்கள் இருக்கிறதோ., அவ்விதமான ரஸாயனப் பொருள்களின சேர்க்கையாலேயே நமது கடவுள் இக்கடலை உண்டாக்கியிருக்கிறார். இதுவே உண்மை.

நீங்கள் உப்பு இல்லாமல் ஒரு நாளாவது உணவு சாப்பிட முடியுமா? முடியாது.

இந்த உண்மையை முன்பே உணர்ந்துதான் நமது கடவுள், நமக்கும் பூமியிலுள்ளோருக்கும், பல கோடி ~~மக்களுக்கு~~ ஆண்டுகளுக்குத் தேவையான உப்பை இந்தப் பிரம்மாண்டமான கடல் நீரில் கலந்து வைத்துள்ளார்.

மழையின் மூலமும், பூமியில் நீர் ஊற்றுகள் மூலமும் நமக்கு நல்ல தண்ணீர் கிடைக்க வழி செய்துள்ளார். இதே போலவே, பூமியிலுள்ள ஒவ்வொரு பொருளேயும் நமது நன்மைக்காகப் படைத்து வைத்திருப்பவர் யாரோ அவரே நமது கடவுள்

## 18 கடலுக்கு கரை உண்டா ?

**கேள்வி:** நாம் காண்கிற பிரம்மாண்டமான கடலுக்கு எதிர்புறமாக மறுகரை உண்டா ?

**பதில்:** "கரை காணாத கடல்" என்றுதான் சகல நூல்களும் கூறுகின்றன.

சந்திரனுக்குச் சென்று வந்த விஞ்ஞானிகள், புதன், வியாழன், சுக்கிரன், சனி முதலிய கிரகங்களுக்குச் செல்ல முயற்சி செய்யும் விஞ்ஞானிகள், "நாம் காண்கிற இந்தப் பிரம்மாண்டமான கடலுக்கு மறுகரை உண்டா ? மறுகரை இல்லாமல் எப்படி இவ்வளவு நீரும் இதில் தங்கியிருக்கிறது ?" — எனனும் விஷயம்பற்றி இனனும் ஆராய்ச்சி செய்யவில்லை

"விஞ்ஞானிகள் வான வெளிக் கப்பல்களில் சந்திரனுக்குச் செல்வதுபோல், தென் துருவத்திலிருந்து தெற்கு நோக்கிச் சுமார் பத்து லக்ஷம் கிலோ மீட்டர்கள் தூரம சென்றால் இக்கடலின மறு கரையைக் காணலாம்"–என்று நமது பூமி அமைப்பு சாஸ்திரங்கள் கூறுகின்றன. அதனல் கடலுக்கு மறு கரை உண்டு

## 19 உயிரைக் காப்பது எப்படி ?

கேள்வி: "எல்லா உயிர்களையும் கடவுளே காப்பாற்றுகிறார்" என்று வேதங்களும், மதங்களும், சாஸ்த்திரங்களும் கூறுகின்றன ஒருவர் ஒரே சமயத்தில் எப்படி எல்லா உயிர்களையும் காப்பாற்ற முடியும்?" விஞ்ஞான முறையில் நிருபித்து" விளக்கிச் சொல்ல வேண்டும்.

பதில்: அன்புள்ள சகோதரர்களே! நீங்கள் சதா காலமும் உங்கள் மூக்கால் மூச்சுவிட்டுக் கொண்டே இருக்கிறீர்கள். இதேபோல் சகல உயிரினங்களும் சதா காலமும் மூச்சுவிட்டுக் கொண்டே இருக்கின்றன.

நீங்கள் இவ்விதம் மூச்சு விடுவதற்கான காற்றையும், காற்று மண்டலத்தையும், அதிலுள்ள வாயு அணுக்களையும், மின் காந்த அணுக்களையும் உண்டாக்கி இயக்கிக் கொண்டிருப்பது எந்த விஞ்ஞானியோ அல்லது எந்தப் பகுத்தறிவாளரோ அல்லவே அல்ல

நீங்கள் ஒரு நிமிஷம் மூச்சு விடாவிட்டால், மூச்சு விடுவதற்கான காற்று இல்லாவிட்டால், உயிர் வாழ முடியுமா? வேறு எந்த உயிரினங்களாவது, தாவர வர்க்கங்களாவது உயிர் வாழ முடியுமா ?

"இதை முன்பே உணர்ந்து மனிதரும், மற்ற சகல உயிரினங்களும் உயிர் வாழ்வதற்காக இந்தப் பிரம் மாண்டமான காற்று மண்டலத்தை உண்டாக்கிப் பூமியை விட்டு, இந்தக் காற்று மண்டலம் எங்கும் ஓடிவிடாமல்," "சுமார் அறுநூற்றி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாக" தடுத்துக் காத்துக் கொண்டிருப்பவர் நமது கடவுளே ஆவார்.

"பூமியைச் சுற்றிச் சுமார் ஐம்பது மைல்களுக்குள்ளாகவே காற்றும் காற்று மண்டலமும் இருக்கிறது.

வேறு எங்கும் காற்றே கிடையாது'' என்று விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

அதனால், நமது கடவுள் நாம் மூச்சுவிட்டு உயிர் வாழ்வதற்காக இந்தக் காற்றையும் காற்று மண்டலத்தையும் உண்டாக்கிக் காப்பதையே. — ''கடவுள் சகல ஜீவன்களின் உயிரையும் ஒரே சமயத்தில் காக்கிறார்'' — என்று சகல வேதங்களும் மதங்களும் கூறுகின்றன.

இன்னும் ''பல ஆயிரம் கோடி ஆண்டுகளுக்கு'' இவ்விதம் இக்காற்று மண்டலத்தைப் ''பூமியைவிட்டு எங்கும் ஓடிவிடாமல் காப்பாற்றி'' இயக்கி வருவார்

''அந்தரத்தில் சுழலும் பூமியுடன் சேர்த்து, இந்தக் காற்று மண்டலத்தையும் அந்தரத்தில் சுழற்றி இயக்கி வரும் நமது கடவுளின் மகத்தான பெருமைகளுக்குச் சான்று இது ஒன்று போதாதா?

## 20 கடவுளின் கருணை மழை

**கேள்வி:** கடவுளின் கருணையினாலேயே மழை பெய்கிறது — எனறு வேதங்களும் சாஸ்த்திரங்களும் கூறுகினறன. ஆனால், சூரியனின வெப்பத்தால் கடல் நீர் ஆவியாகி மழை பொழிகிறது — என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். இதில் எது உண்மை?

பதில்: விஞ்ஞானிகள் கூறுவதுபோல், சூரியனின் வெப்பத்தால் கடல் நீர் ஆவியாகி மழை பொழிந்தாலும், சூரியனையும், கடலையும், கடவுளே உண்டாக்கியிருப்பதால் மழை பொழிவது கடவுளின் கருணையாலேயே ஆகும்.

தாகத்திற்குத் தண்ணீர் அருந்தாமல் நீங்கள் ஒரு நாளாவது உயிர் வாழ முடியுமா? மற்ற உயிரினங்களும் உயிர் வாழ முடியுமா?

இந்த உண்மையை முன்பே உணர்ந்து நமது உயிர் வாழ்க்கைக்காகக் கடலையும், சூரியனையும் உண்டாக்கி, மழையைப் பொழிவிப்பதே நமது கடவுளின் மகத்தான பெருமைகளில் ஒன்று.

மழை பெய்யாத போதும் நமது தேவைகளுக்கு வேண்டிய தண்ணீர் கிடைக்கும்படி, பூமிக்குள்ளும் நீரையும் நீர் ஊற்றுக்களையும் நமது கடவுள் அமைத்திருக்கிறார்.

## 21. புயலும், வெள்ளமும் ஏன் ?

கேள்வி! நமது நன்மைக்காக மழையைப் பொழிவிக்கும் கடவுள், புயலையும் வெள்ளத்தையும் உண்டாக்கி, ஏன் ஏராளமான பொருள்கள் நாசமடையும்படி செய்கிறார்?

பதில்: மழை பொழிவிக்கும் மேகங்களை, பூமி பூராவுக்கும் மழை பெய்யும்படி, காற்றின் மூலமாகவே கொண்டுசெல்ல வேண்டியதாய் இருக்கிறது அதனால் மழை மேகங்களைப் பலமான காற்றின் மூலம் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் கொண்டு போகும்போது சில இடங்களில் புயலும் சேதமும் உண்டாகிறது. இது தவிர்க்க முடியாதது,

பூமியில் சுபிக்ஷம் உண்டாகவும் உணவுப் பயிர்கள் ஏராளமாக விளையவுமே மழை பொழியப்படுகிறது. சில இடங்களில் பெய்யும் அதிகமான மழையினால் உண்டாகும் வெள்ள நீர்களைத்தக்க அணைகள் கட்டித் தேசம் பூராவும் பாசன வசதிகள் செய்யாதது நமது தவறு, கடவுளின் தவறு அல்ல.

## 22. மழை இல்லாமல் பஞ்சம் ஏன் ?

கேள்வி: சில சமயங்களில் மழை பெய்யாமல் பஞ்சமும் பட்டினியும் ஏன் உண்டாகிறது? இப்படிப் பஞ்சம் உண்டாகாமல் உங்கள் கடவுள் ஏன் தடுக்கவில்லை?

பதில்: உலகினர் நீதிநேர்மை, அன்பு, அஹிம்சை, பண்பு, பக்தி, உண்மை, ஒழுக்கம், சத்தியம், சாந்தம், சகோதரதத்துவம், போன்ற உன்னத, நெறிமுறைகளை மறந்து. அநீதிகளும், கொடுமைகளும் செய்வதாலேயே, சில சமயங்களில் பஞ்சமும் பட்டினியும் உண்டாகிறது.

பர்மாவில் மழைக்காக, ஒரு திருநாள் கொண்டாடி இறைவனைப் பணிவார்கள். உடனே மழை பொழியும் அதிக மழை பெய்தால், அதற்கும் உடனே இந்தத் திருவிழாவைக் கொண்டாடி கடவுளைப் பணிவார்கள். உடனே மழை நின்றுவிடும்: இந்த வழக்கம் இன்னும் பர்மாவில் இருந்துவருகிறது

ரஷ்யாவில், மழை கொண்டு வருவதற்கு, மூன்றுபேர் மிக செங்குத்தாக ஓங்கி வளர்ந்து நிற்கும் ஒருமரத்தின் மீது ஏறி அதன் உச்சாணிக் கொம்பை அடைவார்கள். அங்கிருந்து கொண்டு ஒருவன் தன் கையில் உள்ள தப்பட்டையை, 'டபார்' 'டபார்' என்று சத்தம் கேட்கும்படி அடிப்பான் இது இடி இடிக்கிறது என்று அர்த்தம், இன்னொருவன் கையில் உள்ள இரண்டு தீப்பந்தங்களை ஒன்றோடு ஒன்று உரசி, தீப்பொறிகள் பறக்கும்படி செய்வான் இது மின்னல் அடிக்கிறது என்று அர்த்தம், மூன்றாவது ஆள் கையிலுள்ள பாத்திரத்தில் உள்ள தண்ணீரை இலைக்கொத்தினால் கீழே தெளிப்பான் இது மழை பொழிகிறது என்று அர்த்தம். இந்த அசட்டு இடியையும், மின்னலையும் மழையையும் காணச் சகிக்காமல் நிஜமழை தானாக உடனே பெய்யும் என்பது இவர்கள் நம்பிக்கை-

ஜப்பானிலும் கிட்டத்தட்ட இதுபோன்ற வழக்கம் இருக்கிறது மழை இல்லாவிட்டால், ஜப்பானியர் ஜோனன் டாக்கே என்னும் மலைமீது ஏறி, அங்கு மலை உச்சியில் நெருப்பை மூட்டுவார்கள்: துப்பாக்கியால் ஆகாயத்தைப்

பார்த்துச் சுடுவகர்கள்: பாறைகளை மேலேயிருந்து உருட்டி விடுவார்கள்.

வட அமெரிக்காவைச் சேர்ந்த ஓமாஹா இந்தியர்கள் ஒரு பெரிய தண்ணீர்த் தொட்டியைச் சுற்றி ஆடிப்பாடி வருவார்கள். பிறகு ஒருவன் தன் வாய் நிறையத் தண்ணீர் நிரப்பி, அதை மழை போலத் துப்புவான். பிறகு தண்ணீர்த் தொட்டியைக் கவிழ்த்து அத்தனை தண்ணீரையும் கீழே கொட்டுவார்கள்.

மெக்ஸிகோ இந்தியர்கள் புகைக்கும், மழைக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிறது என்று நம்புகிறுர்கள் ஆகவே மழை இல்லாத நாட்களில் அவர்கள் அங்கே குப்பை செத்தைகளை எறியவிட்டு, எங்கும் ஒரே புகைமயமாக இருக்கும்படி செய்வார்கள் இந்தச் சமயங்களில் இந்த நாட்டில் யாருமே பயணம் செய்யமுடியாது எங்கு நோக்கினும் அத்தனை புகையாக இருக்கும்.

சில ஐரோப்பிய நாடுகளில் இன்ஞெரு வழக்கம் கையாளப்பட்டது. தன் மேனியை இலைகளைக்கொண்டே மறைத்துக்கொண்டுள்ள ஓர் இளம்பெண்ணைச் சுற்றி, அநேக இளம்பெண்கள் ஆடிப்பாடிக் கொண்டு, வீடு, வீடாகச் செல்வார்கள். ஒவ்வொரு வீட்டு அம்மாளும், ஒருவாளித் தண்ணீரைக் கொண்டு வந்து, இலையால், தன் மேனியை மூடிக் கொண்டிருக்கிறுளே; அவள் மீது கொட்டுவாள்,

ஆர்மீனியா நாட்டில் இதேகாரியத்தைச் சற்றுமாற்றிச் செய்கிறுர்கள். ஒருவிளக்குமாற்றைப் பெண்போல் அலங்காரம் செய்து, அதைச்சுற்றி ஆடிப்பாடிக் கொண்டு, சிறுவர்களும், சிறுமியர்களும் வீடு விடாகச் செல்வார்கள் விளக்குமாற்றுக்குத் தண்ணீர் அபிஷேகம் கிடைக்கும். ஆனல் சிறுவர்களுக்கோ தின்பண்டங்கள் கிடைக்கும்.

பஞ்சாப்பில் ஒரு வழக்கம் உண்டு. கிராமத்தில் வாய்த் துடுக்கு அதிகம் உள்ள ஒரு கிழவியின் குடிசைக்கு முன்னால், கிராமத்தார் கண்ட குப்பைகளைக் கொட்டி அசிங்கம் செய்வார்கள். இதைக் கண்டு கிழவி சினந்து, வாயில் வந்தபடி ஏசுவாள். இந்த ஏச்சு வார்த்தைகளைக் கேட்கப் பொறுமல் மழை வந்துவிடும் என்று நம்பிக்கை.

ஜாவாவில், ஒரு கறுப்பு ஆண் பூனையையும் ஒரு கறுப்பு பெண் பூனையையும் ஜோடியாகச் சேர்த்து ஒரு பல்லக்கில் உட்கார்த்தி வைத்து அவற்றை மேள தாளத்துடன் ஊர்வலம் எடுத்துச் செல்வார்கள். இதை வேடிக்கை பார்க்க மழை வரும் என்பது நம்பிக்கை.

ஐஸ்லுலாந்தில், வருண பகவானுக்குத் தங்கள் மீது கருணை பிறக்க வேண்டும் என்பதற்காகத் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளைக் கழுத்தளவுக்குப் பூமியில் புதைத்து வைப்பார்கள்.

ஆனால் சீனாவில் கையாளப்பட்ட வழக்கம் இருக்கிறதே, அது இவற்றையெல்லாம் தூக்கி அடிப்பது. சீனர்களின் மனப்பான்மையைப் புரிந்து கொள்வதற்கும் இது உதவும்.

மழை பெய்யாவிட்டால், மழைக் கடவுளைக் குறிக்கும் ஒரு பூதாகாரமான உருவத்தை (அது பார்ப்பதற்கும் பூதம் போல் இருக்கும்) காகிதத்தைக் கொண்டு செய்வார்கள். இந்த மழைக் கடவுள் ஏக ஆர்ப்பாட்டத்துடனும், மேளதாளத்துடனும் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படுவார். பிறகு இந்த 'கடவுளுக்கு' நிறைய பூஜைகள் நடக்கும். பூஜைகள் நடந்து முடிவதற்குள் மழை பெய்தாக வேண்டும். இல்லையோ?–

இந்த மழைக் கடவுளின் பாடு ஆபத்துத்தான்! மழைக் கடவுளை அடித்து நொறுக்கி, சின்னாபின்னப்படுத்தி விடுவார்கள். மழைக் கடவுள்களின கோவில்களை

இடித்தெறிவார்கள் மழைக் கடவுளுக்கு யாரும் பூஜை போடக்கூடாது என்று அரசாங்கம் உத்தரவு போடும்! -

நமது நாட்டில் வருண ஜெபம் செய்யும் வழக்கமும், மற்றும் பல நாடுகளிலும் இதுபோன்ற பல வகைகளில் மழைக்காக இறைவனைப் பணிந்து பூஜிக்கும் விழாக்கள் நடைபெறுகின்ற வழக்கமும இருந்து வருகிறது.

"இப்போது உலக வல்லரசுகள் ஒரு நாளைக்குச் சுமார் ஐயாயிரம் கோடி ரூபாய்களுக்குமேல் செலவு செய்து "பயங்கரப் படுகொலை ஆயுதங்களை உற்பத்தி செய்து குவிப்பதாலேயே" பஞ்சமும் பட்டினியும் பற்றுக் குறைகளும், விலைவாசி உயர்வும், மற்றும பல தீமைகளும் ஏற்பட்டுள்ளன,

இந்தப் படுகொலை ஆயுதங்களை உற்பத்தி செய்து குவிப்பதற்காகச் செலவு செய்யும் ரூபாய்களை ஏராளமான அணைகள் கட்டி, ஏழைகளின் நல்வாழ்வுக்கும், முன்னேற்றத்திற்கும் செலவு செய்தால், ஒரு சில ஆண்டுகளிலேயே உலகில் பஞ்சமும் பட்டினியும், வறுமையும் ஒழிந்துவிடும். இது நமது கட்மை கடவுளின தவறு அல்ல.

## 23. மனிதனைப் படைப்பது யார்?

கேள்வி: நமது தாயும் தந்தையும் கூடிக் கர்ப்பம் உண்டாக்கி, நம்மைப் படைக்கிறார்கள், இதே போலவே மற்ற சகல உயிரினங்களும் ஆண்-பெண் சேர்க்கையால் கர்ப்பம உண்டாக்கி அந்தந்த உயிரினங்களை உண்டாக்குகின்றன. அவ்விதமிருக்க, மனிதரையும் மற்ற உயிரினங்களையும் "கடவுள் படைத்தார்-படைக்கிறார்" என்று சொல்வது எப்படி நியாயமாகும்?

பதில்: நமது தாயின் கர்ப்பத்தில் சேரும் ஆண்-பெண் விந்து அணுக்கள் நமது "உடலை மட்டுமே" உருவாக்கிப் படைத்து வளர்க்கின்றன.

இப்படி வளரும் கர்ப்பத்தின் நான்காவது மாதத்தில், அந்த உடலில் செயலாற்றுவதற்குத் தகுதியான "ஆத்மா வாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளை" கடவுளே "ரேடியோ அலைகள் மூலம்" சேர்ப்பித்துப் பதிய வைக்கிறுர் இப்படிப் பதிவு செய்த பின்புதான் கர்ப்பத்திலுள்ள சிசுவுக்கு உயிர் உண்டாகிறது.

கடவுள் இப்படி உயிர்ச் சக்தி மின் அலைகளைச் சேர்ப்பிக்காவிட்டால், கர்ப்பம் கெட்டு. சிதைந்து அழிந்து குறைப் பிரசவமாகி வெளியாகிவிடும்.

திருமணமாகிப் பல ஆண்டுகள் கூடி வாழும் தம்பதிகள் அனேகருக்கு குழந்தையே பிறக்காமல் இருப்பதை நாம் நேரில் காண்கிறும்,

"அதனுல். நமது தாய் தந்தையர்கூடிக் கர்ப்பம் உண்டாக்கி, நம்மைப் படைத்தாலும்கூட அந்தக் கர்ப்பத்தில் உள்ள சிசுவின் உடலில் தகுதியான ஆத்மா வாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளைக் கடவுள் சேர்ப்பித்துப் பதிய வைத்தால்தான் சிசுவுக்கு உயிர் உண்டாகிக் குழந்தை பிறக்க முடியும் இல்லாவிட்டால் இயலாது"

இதையே. கடவுள் எல்லா மனிதர்களையும் உயிரினங்களையும் உயிர் கொடுத்துப் படைக்கிறுர்" என்று சகல வேதங்களும், மதங்களும், சாஸ்திரங்களும் கூறுகின்றன.

மனிதரைப் போலவே மற்ற ஒவ்வொரு உயிரினத்தின் கர்ப்பத்திலும் அததற்குத் தகுதியான ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளைக் கடவுள் 'ரேடியோ அலைகள் மூலமாகவே சேர்ப்பித்துப் பதிய வைக்கிறுர்" இப்படிப் பதிவு செய்யாவிட்டால கர்ப்பத்திலுள்ள கருவுக்கு உயிர் உண்டாகாது. பிராணிகள் பிறக்காது குறைப் பிரசவங்கள் தோன்றிக் கர்ப்பம் சிதைந்து அழிந்து வெளியாகிவிடும்.

அதனுலேயே "சகல உயிரினங்களையும் கடவுளே படைத்துக் காக்கிருர்" என்று சகல வேத சாஸ்திரங்களும் கூறுகின்றன.

## 24, இயற்கை என்ருல் என்ன?

கேள்வி: இந்தப் பூமி, சூரியன், சந்திரன், மற்ற கிரகங்கள், மற்ற உயிரினங்கள் யாவும் இயற்கையாக் உண்டாகி இயற்கையாக இயங்குகின்றன, எதையும் கடவுள் படைக்கவில்லை" — என்று விஞ்ஞானிகளும் பகுத்தறிவாளர்களும் கூறுகிருர்களே. இயற்கை என்ருல் என்ன?

பதில்: இயற்கை என்ருல் "ஒருவர் இயக்காமல் தானுக இயங்குவது" என்று பொருள்.

மனிதன் பிறந்து வளர்ந்து வாழ்வது இயற்கைதான் ஆனுல், அவனது தாயும் தந்தையும் கூடிக் கர்ப்பம் உண்டாக்காவிட்டால் மனிதன் பிறக்க முடியாது.

பூமியை இயற்கையாக வைத்துக் கொள்வோம் ஆனுல் இதை "ஒருவர் சுழற்ருமல்" எப்படி ஒரு நிமிஷமும் தவருமல், ஒரு நிமிஷத்திற்கு நாற்பதாயிரம் கிலோ மீட்டர்கள் வேகத்தில் அதன் அயன கதியில் அந்தரத்தில் அணுவளவும் பிசகாமல் சுமார் அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாகச் சுழன்று கொண்டிருக்க முடியும்?

விதையிலிருந்து மரம் முளைத்து வருவது இயற்கை, ஆனுல், இந்த விதையைப் பூமியில் போட்டுத் தண்ணீர் ஊற்றினுல்தான் முளைக்கும். இல்லாவிட்டால் முளைக்காது.

மண் இயற்கை, ஆனுல், இந்த மண்ணைச் செங்கலாகவும், சுண்ணும்பாகவும், சிமிண்டாகவும், சுவராகவும் செய்துதான் வீடுகட்ட வேண்டும். இவ்விதம் ஒருவர் முயற்சி செய்யாமல் வீடு உன்டாகாது.

"-இதேபோலவே, இன்று நாம் காண்கிற இயற்கைப் பொருள்கள் யாவற்றையும், "இயற்கையாக இயங்கும்படி இயக்குபவர்" யாரோ அவரே நமது கடவுள்."

## 25. கண்களால் காண முடியாதது பொய்யா?

**கேள்வி;** "நம் கண்களால் நேருக்கு நேராகக் காணுதவைகளேயும், காணமுடியாதவைகளேயும் உண்மையென்று நம்பி ஒப்புக்கொள்ள இயலாது கண்களால் காணமுடியாதவை யாவும் பொய், புரட்டு, மோசடி, ஏமாற்று வித்தை"–என்று பகுத்தறிவாளர்கள் கூறுவது உண்மையில்லையா?

**பதில்:** காற்றைக் கண்களால் காணமுடியவில்லே ஆனுல் உணருகிறோம். மூச்சுவிடுகிறோம்.

ரேடியோ அலேகளேக் கண்களால் காண முடிவதில்லே ஆனுல், ரேடியோப் பெட்டியில் பேச்சுக்களேயும் பாட்டுக்களேயும் கேட்கிறோம்,

நமது உடலே மட்டும்தான் கண்களால் காண்கிறோம், ஆனுல், உயிரைக் காண முடிவதில்லே.

அதனுல், "காற்றைக் கண்களால் காண முடியாததால் உலகில் காற்று இல்லே ரேடியோ அலேகளேக் கண்களால் காண முடியாததால் ரேடியோ அலேகள் இல்லே உயிரைக் கண்களால் காண முடியாததால் ஒவ்வொருவர் உடலிலும் உயிர் இல்லே." என்று எந்த விஞ்ஞானியாவது, எந்தப் பகுத்தறிவாளராவது கூற முன் வருவாரா?

காற்றையும், ரேடியோ அலேகளேயும், உயிரையும் போலவே கடவுளும், உண்மையாக இயங்கிக்கொண்டு யாவற்றையும், "ரேடியோ அலேகள் மூலமாகவே" இயக்கிக் கொண்டிருக்கிறுர்.

## 26, உருவங்கள் ஏன் ?

**கேள்வி:-** கடவுள் ஒருவரே என்று ஹிந்து மதமும் மற்ற சகல மதங்களும், வேத சாஸ்திரங்களும் கூறுகின்றன. அவ்விதமிருக்க பலபல விதமான உருவங்களை வைத்து "இதுதான் கடவுள்" என்று பலர் வணங்குவது மூடக் கொள்கை. இல்லையா ?

**பதில்:** அன்புள்ள சகோதரர்களே! சகோதரிகளே! உங்கள் உறவினர்கள் வெளியூர்களில் உத்தியோகம் பார்க்கச் சென்றால் அப்போது அவர்களைப் போட்டோ எடுத்து வைத்துக்கொள்கிறீர்கள். இது ஏன்? அவர்கள் கண்களுக்குக் காணாத இடத்தில் வசித்துக்கொண்டிருக்கும் போதும் நீங்கள் அவர்களை எப்போதும் உங்கள் வீட்டில் பார்த்துக்கொண்டே இருப்பதற்காகத்தான்.

உங்கள் இல்லங்களிலுள்ள முதியவர்களையும் போட்டோ எடுத்து வைத்துக் கொள்கிறீர்கள். இது ஏன்? அவர்கள் மரணமடைந்த பிறகும் எப்போதும் பார்த்துக்கொண்டே இருப்பதற்குத்தான்

பல அரிய சாதனைகள் புரியும் அரசியல் தலைவர்களின் சாதனைகளைப் பாராட்டுவதற்காக அவர்களுடைய உருவங் களைச் சிலைகளாகவும் படங்களாகவும் செய்து வைத்து வணங்கிப் போற்றும் வழக்கம் உலகம் பூராவும் இருந்து வருகிறது இதை "மூடக் கொள்கை" என்று எவரும சொல்லவில்லை.

அதைப்போலவே நாம் வாழ்வதற்காக இந்த பூமி, சூரியன், சந்திரன், மற்ற கிரஹங்கள், கடல், காற்று முதலிய யாவற்றையும் உண்டாக்கி சுமார் அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாக இயக்கிக் கொண்டிருக்கும் அதியற்புதமான, ஆச்சரியகரமான, அதிசயமான ஆற்றல்கள் நிறைந்த மகத்தான, பிரம்மாண்டமான,

சாதனைகளைப் போற்றிப் புகழ்வதற்காகவே. அவரவர் விருப்பத்திற்கும், நம்பிக்கைக்கும் ஏற்றவாறு பல உருவங்களை வைத்து வணங்கிப் பூஜித்து வருகின்றனர்.

மேலும், பசித்தவருக்கு யார் உணவு கொடுக்கிறார்களோ, அவரையே கடவுளாக அவர்கள் போற்றுகின்றனர். வேலையில்லாதவனுக்கு யார் வேலை கொடுக்கிறார்களோ அவரையே அவன் கடவுளாகப் போற்றி வணங்குகிறான்.

செல்வமில்லாதவர்களுக்கு யார் செல்வத்தைக் கொடுக்கிறார்களோ அவர்களையே, அவர்கள் கடவுளாகக் கும்பிடுகின்றனர்.

இதைப்போலவே, அவரவர் தேவைகளையும், கோரிக்கைகளையும் நிறைவேற்றிக் கொடுப்பவர்களையே, அவரவர்கள் தமது கடவுளாகக் கருதி, அவர்களுடைய உருவங்களை வைத்து வணங்கிப் பூஜிக்கும் வழக்கம் இருந்து வருகிறது அதனால்தான், பல கடவுள்களை, கடவுளின் பெயரால் பல உருவங்களைப் பலர் வைத்து. வணங்கிப் பூஜிக்கும் வழக்கம இருந்து வருகிறது.

இவைகள் எவ்விதத்திலும் மூடக் கொள்கைகளோ முட்டாள்தனமான செய்கைகளோ அல்லவே அல்ல. பகுத்தறிவின் பெயரால் இவைகளைப் பழிப்பதே மூடக் கொள்கை.

## 27. கல்லில் கடவுள்

கேள்வி: வெள்ளைக் கல்லையும், கருங்கல்லையும் செதுக்கிச் சிலைகளாகச் செய்து வைத்துக்கொண்டு "இதுதான் கடவுள் எல்லோரும் வணங்குங்கள்" என்று சொல்வது அயோக்கியத்தனமாக இல்லையா? இந்தக் கல் சிலைகளில் கடவுள் எப்படி இருக்க முடியும்?

பதில்: முன் காலத்தில் நெருப்புப்பெட்டிக்குப் பதிலாக இரண்டு வெள்ளைக் கல் துண்டுகளை ஒன்றுடன் ஒன்றை உரசியே நெருப்பு உண்டாக்கிச் சகல காரியங்களையும் செய்து வந்தார்கள்

இதிலிருந்து, "வெள்ளைக் கல் துண்டுகளில் மின் சக்தி அலைகள் உள்ளன" என்பது நிருபணமாகிறது.

"அதனால், இந்தக் கற்களில் சிலைகள் செய்துவைத்து, மந்திரங்கள் ஜெபிப்பதன் மூலம் மேலும் மேலும் அவைகளில் மின் சக்தி அலைகளைப் பதிவு செய்யப்படுகிறது."

அதனால், இவ்விதம் இக்கற்சிலைகளில் சேரும் மின் சக்தி அலைகள், தரிசிப்போருடைய உள்ளங்களில் பாய்ந்து, அவரவர் கோரிக்கை நிறைவேற ஊக்கத்தையும் சக்தியையும் கொடுக்கிறது.

கிராமபோன் பிளேட்டுகளில் டேப் ரிகார்டுகளில் பேச்சுக்கள், பாட்டுக்கள் பதிவு செய்யப்படுகிறது. ஒரு அங்குல அகலமுள்ள சினிமா பிலிம் சுருளில், பிரதி பிம்பங் களும் காட்சிகளும் பதிவு செய்யப்படுகிறது. இந்த சினிமா படச் சுருளில் ஒரு நூல் இழை அகலம் உள்ள இடத்தில் பேச்சுக்கள் பாட்டுக்கள் பதிவு செய்யப்படுகிறது.

இதேபோலவே, கோவில்களிலுள்ள விக்கிரகங்களிலும் சக்தி அலைகள் பதிவு செய்யப்பட்டு, மந்திரங்களின் ஒலி அலைகள் மேலும் மேலும் பதிவு செய்யப்பட்டு, அவரவர் கோரிக்கைகளை நிறைவேற்றச் சக்தியைக் கொடுக்கும் ஆற்றல் உடையதாக ஆக்கப்படுகிறது.

இவ்விதமாகவே கோவில்களிலுள்ள விக்கிரகங்களில் "கல்லில் கடவுள் இருக்கிறார்." அதனால் இவற்றை வணங்குவது அயோக்யத்தனமானதோ முட்டாள்தன மானதோ அல்லவே அல்ல.

## 28. கோவில்களில் நிர்வாணச் சிலைகள் ஏன்?

கேள்வி:- புனிதமான பக்தியை வளர்ப்பதற்காக ஏற்பட்ட கோவில்களில் அனேக சிலைகள் மேல் ஆடையில்லாமலும், சில ஆண், பெண் சிலைகள் முழு நிர்வாணமாகவும் இருக்கின்றன. இந்தச் சிலைகளைப் பார்ப்போரின் காம உணர்ச்சிகள் தூண்டப்பட்டு தீமைகள் ஏற்படாதா? கோவில்களில் இப்படிப்பட்ட சிலைகள் இருக்கலாமா? இந்த நிர்வாணச் சிலைகள் தான் கடவுளா?

பதில்:- நம் முன்பாக, ஒரு பெண், முழுமையாக ஆடையே இல்லாமல் நிற்கும் சமயத்திலும்கூட நமது மனதிலும், உள்ளத்திலும், கொஞ்சமும் காம உணர்ச்சியும் வேறு எவ்வித விகாரமான கெட்ட எண்ணமும் உண்டாகாமல், "அவளும் நமது சகோதரியே" என்ற உணர்ச்சியும பண்பும் உண்டாக நாம் ஒவ்வொருவரும் பயிற்சி பெறவேண்டும்.

அதேபோல, ஒரு பெண்ணின் முன்பாக, ஒரு ஆண், முழுமையாக ஆடையே இல்லாமல் நிற்கும்போதும்கூட, அந்தப் பெண்ணுக்குக் காம உணர்ச்சியும், வேறு எவ்வித விகாரமான கெட்ட எண்ணங்களும் உண்டாகாமல் "அவனும் நமது சகோதரனே" என்ற உணர்ச்சியும், பண்பும் உண்டாக ஒவ்வொரு பெண்ணும் பயிற்சி பெற வேண்டும்.

இந்தப் பயிற்சியை ஒவ்வொரு ஆணும்-பெண்ணும் பெறுவதற்காகவே பல ஆண்-பெண் சிலைகள் மேல் ஆடை இல்லாமலும், கீழ் ஆடையில்லாமலும் கோவில்களில் அமைக்கப்பட்டிருக்கின்றன.

## 29. கடவுள் பிறவியில்லாமல் எப்படித் தோன்றினர்?

கேள்வி:- "கடவுள் பிறவியில்லாதவர்" என்று ஹிந்து மத வேத சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஒருவர் தாய் தந்தை இல்லாமல், பிறவியில்லாமல் எப்படித் தோன்ற முடியும்? "விஞ்ஞான முறையில் நிருபித்து" விளக்கிச் சொல்லவேண்டும்?

பதில்:- தாய் தந்தையின் விந்து அணுவிலிருந்து மனிதன் தோன்றிப் பிறந்து வளர்ந்து மகத்தான சாதனைகள் புரிகிருன் என்பது நாம் அனைவரும் அறிந்ததே.

ஆண்–பெண் விந்து அணுவின் ஒரு துளியில் சுமார் ஐந்து லெட்சத்திற்கு மேல் உயிரணுக்கள் உள்ளன. இந்த ஐந்து லெட்சம் அணுக்களில் "ஒரே ஒரு அணுவிலிருந்தும்" கர்ப்பம் உண்டாகி மனிதன் தோன்றி வளர்ந்து பிறக்க முடியும்.

இதிலிருந்து என்ன ஏற்படுகிறது? "ஒரு துளியின் ஐந்து லெட்சத்தில் ஒரு பாகமாக உள்ள மிகச் சிறிய ஒரு அணுவிலிருந்து மனிதன் தோன்றுகிருன்" என்ற உண்மையும் தத்துவமும நிருபணமாகிறது அல்லவா?

இந்த உண்மைப்படியே, இந்தத் தத்துவப்படியே, ஒரு சிறு அணுவிலிருந்து, தாயின் கர்ப்பத்தில் வளராமல் கர்ப்பப் பையில் உள்ளதுபோன்ற ரஸாயன முறைச் சேர்க்கையிலும் சூழ்நிலையிலும் வளர்ந்து கடவுள் தோன்றியிருக்கிருர். கண்ணுடிக் குழாய்களில் கருவை விஞ்ஞானிகள் வளர்ப்பதுபோல.

விஞ்ஞானிகள் அணுக்களையும் ரஸாயனப் பொருள்களையும், மின் சக்தி அலைகளையும், பல்வேறு பாகுபாடுகளில் கலந்து, பலபல விதமான பரிசோதனைகளும்

ஆராய்ச்சிகளும் செய்யும்போது எதிர்பாராதவிதமாகப் பலவிதமான "புதுப் பொருள்கள்" தோன்றுவது போலவே, மனிதக் கருவின் உயிரணுவானது, தற்செயலாக, கர்ப்பப் பையில் உள்ளதுபோன்ற ரஸாயனத் திரவப் பொருள்களுடனும், வாயுப் பொருள்களுடனும், தாது உப்புக்களுடனும், சக்தி அலைகளுடனும் ஒன்று சேர்ந்த ஒரு சூழ்நிலையிலேயே அனைத்துக்கும் ஆதிமுதல் மனிதராகிய கடவுள் தோன்றினர்.

இயேசு கிறிஸ்துவைக் கிறிஸ்துவர்கள் கடவுளாகத் தொழுவது போலவும், முகம்மது நபிநாயகம் அவர்களை, முஸ்லிமகள கடவுளாகத் தொழுவது போலவும், மற்றும் பல பல மனிதர்களும் பலபல உருவங்களைக் கடவுளாகத் தொழுவது போலவும், ஹிந்துக்கள் "இந்த அனைத்துக்கும் ஆதிமுதலாகத் தானகத் தோன்றிய முதல மனிதரையே" கடவுளாகத் தொழுது வணங்குகிறுர்கள்.

இதுவே ஆதிமுதல் மனிதராகிய கடவுள் தானகத் தோன்றிய விஞ்ஞானப் பூர்வமான உண்மையாகும்.

சில மேல்நாட்டு விஞ்ஞானிகள் கூறியிருப்பதுபோல "புழு பூச்சியிலிருந்து பரிணம முறையில் வளர்ச்சியடைந்து, எலி, பூனைபோல ஆகி - அதன் பின்பு, பரிணம முறையில் வளர்ச்சியடைந்து குரங்குபோல் ஆகி, அதன் பினபு பரிணம முறையில் வளர்ச்சியடைந்து மனிதன தோன்றினன்" என்பது உண்மை அல்லவே அல்ல.

## 30. கிரஹங்களைப் படைத்தவர் கடவுளே.

கேள்வி: "சந்திரன் முதலிய கிரஹங்கள் யாவற்றையும் கடவுள் படைக்கவில்லை அவைகள் சூரியனிலிருந்து சிதறி விழுந்த துண்டுகளேயாகும்"—என்று விஞ்ஞானிகள் கூறியிருப்பது உண்மை இல்லையா?

பதில்: சந்திரன் முதலிய நவக்கிரஹங்களும் அதனதன் அயனகதியில் அந்தரத்தில் அணுவளவும் பிசகாது, ஒரு நிமிஷமும் தவருது, சற்றும் மாருமல் சுமார் அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாகச் சுழன்று கொண்டிருக்கின்றன.

மேலும் இந்த ஒன்பது கிரஹங்களும் உஷ்ணம், குளிர்ச்சி, அறிவு, ஞானம், வீரம், காதல், துன்பம், இன்பம் முதலிய பல வேறுபாடுகள் உள்ள உணர்ச்சிகளின் சக்தி அலைகளைப் பூமிக்கு அனுப்பிக்கொண்டே இருக்கின்றன.

அதனுல், இந்தக் கிரஹங்கள் சூரியனிலிருந்து சிதறி விழுந்த துண்டுகளாய் இருந்தால் இவ்விதம் குறிப்பிட்டபடி இவ்வளவு காலம் இயங்கிக்கொண்டிருக்க இயலாது ஒரே மாதிரியாக இல்லாமல, வேறுபாடுள்ள உணர்ச்சி அலைகளை வீசிக்கொண்டிருக்க இயலாது.

அதனுல், நமது கடவுளே நமது நன்மைகளுக்காக இவைகளைப் படைத்துச் சுமார் அறுநூத்தி இருபத்தி ஒனபதுகோடி ஆண்டுகளாக இயக்கிக் கொண்டிருக்கிறுர். இதுவே சரியான உண்மையாகும். இனனும பல ஆயிரம கோடி ஆண்டுகள் இவ்விதம் இவைகளை இயக்கிக் கொண்டிருப்பார்,

## 31. சமுதாய வளர்ச்சி

கேள்வி: பிறவியில்லாமல் கடவுள் முதன் முதலாகத் தானுகத் தோன்றியபின், மனித சமுதாயம் எப்படித் தோன்றி வளர்ந்தது?

பதில்: தானுகத் தோன்றிய முதல் மனிதராகிய நமது கடவுள், இந்தப் பூமி. சூரியன, சந்திரன், மற்ற கிரகங்கள் கடல், காற்று முதலிய யாவற்றையும் படைத்து இயக்கக் கூடிய மிகமிகப் பிரம்மாண்டமான ஆற்றல்கள் உடையவராக இருந்தார் அவருடைய உடலும் உள்ளமும மகத்தான பேரின்ப நிலையில் இருந்தது

அதனால், அவர் இவ்வளவு பிரம்மாண்டமான சக்திகளுடனும் பேரின்ப நிலையுடனும் 'தான் மட்டும் தனியாக' வாழ விரும்பவில்லை. தன்னைப்போலவே இன்னும் ஏராளமானவர்கள் தோன்றி பேரின்ப வாழ்வு வாழவேண்டுமென்று நினைத்துத் திட்டமிட்டார்.

இந்தத் திட்டத்தின்படி தனது உடலின் பல பாகங்களிலிருந்தும், பலவிதமான அணுக்களையும், பாக்டீரியாக்கள் என்னும் உயிரணுக்களையும், செல்களையும், ரஸாயனத் திரவப் பொருள்களையும், மற்றும் பலவித வாயுப் பொருள்களையும், தாது உப்புக்களையும், எடுத்துச் சேர்த்து, அதில் பெண்குறி, கர்ப்பப்பை, ஸ்தனங்கள் உண்டாகி இயங்குவதற்கான இந்திரிய அணுக்களையும், ரஸாயனப் பொருள்களையும், 'உபரியாகச் சேர்த்து' அதில் தன் உடலிலிருந்தே உயிரின ஒலி-ஒளி-சக்தி, மின் அலைகளைப் பாய்ச்சி ஒரு பெண்ணை உண்டாக்கி இயங்கச் செய்தார்.

இவ்விதம் தனது உடலிலிருந்து பிறருடைய உடலிலும், பிற பொருள்களிலும் உயிர்ச் சக்தி மின் அலைகளைப் பாய்ச்சும் முறையை 'மெஸ்மெரிஸ முறை' என்று மேல்நாட்டு விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருக்கிறார்கள்

இவ்விதம உண்டாக்கிய முதல் பெண்ணையே ஸ்ரீ லெட்சுமிதேவி என்னும் பெண் தெய்வமாக ஹிந்துக்களும் வைஷ்ணவர்களும் போற்றி வணங்கினார்கள். 'அன்னை மேரி' என்று கிறிஸ்தவர்கள் கூறுகிறார்கள். 'தயாபரை' என்று ஜப்பானியர் சொல்லுகிறார்கள். மற்றும் பல பல மதத்தினரும் பலபல பெயர்களில் போற்றி வணங்குகிறார்கள்.

"தானாகத் தோன்றிய முதல் மனிதரையும், அவர் உண்டாக்கிய-சிருஷ்டி செய்த-முதல் பெண்ணையும், ஆதாம்-ஏவாள் எனனும, இந்த ஆதாமும் ஏவாளும்கூடி

மனிதனை உற்பத்தி செய்தார்கள், அதிலிருந்தே மனித சமுதாயம் தோன்றியது'' என்றும் கிறிஸ்துவ மதம் கூறுகிறது.

"முதல் மனிதராகிய ஸ்ரீமந் நாராயணரும் அவர் உண்டாக்கிய முதல் பெண்ணாகிய லெட்சுமி தேவியும்கூடி வாழ்ந்து, பிரம்மா, விஷ்ணு, சிவன் என மூன்று குழந்தைகளைப் பெற்றார்கள். பின்பு, பிரம்மாவும் விஷ்ணுவும், சிவனும், சரஸ்வதி தேவியையும், ஸ்ரீ தேவி, பூதேவியையும், உமாதேவியையும சிருஷ்டித்தார்கள். அணுக்களின் ரஸாயன முறையில் உயிர்ச் சக்தி மின் அலைகளைச் சேர்த்து உண்டாக்கினார்கள். பின்பு அவர்கள் மூலம் மனிதர் மேலும் மேலும் உண்டாகி வளர்ந்து மனித சமுதாயம் தோன்றியது'' என்று ஹிந்துமத வேத சாஸ்திரங்கள் கூறுகின்றன.

இவ்விதமாக மனித சமுதாயம் முதலில் தோன்றி, இன்று உலகில் சுமார் நானூற்றி ஐம்பது கோடிப் பேர்களாக வாழ்கிறார்கள்.

இவ்வாறாக, கடவுளாகிய முதல் மனிதரிலிருந்தே நாமனைவரும் வம்ச பரம்பரையாக வளர்ந்து பெருகி வந்திருப்பதாலேயே, "மனிதர் அனைவரும் கடவுளின் குழந்தைகள. ஒரே சகோதரர்கள்'' என்று சகல மத, வேத சாஸ்திரங்களும் கூறுகின்றன.

இதுவே, மனிதர் தோன்றி வளர்ந்துள்ள உண்மையான வரலாறு ஆகும், இதை இப்போதில்லாவிட்டாலும் நாளடைவில் உலக விஞ்ஞானிகள் ஒப்புக்கொள்வார்கள் என்பது நிச்சயம்.

"புழு பூச்சியிலிருந்து பரிணாம முறையில் வளர்ச்சியடைந்து எலி, பூனைபோல் ஆகிப்பின்பு பரிணாம முறையில் வளர்ச்சியடைந்து குரங்குபோல் ஆகிப் பின்பு பரிணாம

முறையில் வளர்ச்சியடைந்து மனிதன் தோன்றினன்" என்று சில விஞ்ஞானிகள் கூறியிருப்பது உண்மை அல்லவே அல்ல

## 32. சகோதரத்வம் வளர...

கேள்வி: "நாம் அனைவரும் கடவுளின் குழந்தைகள்-ஒரே சகோதரர்கள்" என்று சகல மதங்களும் கூறியிருந்தாலும், இன்று உலகில் ஒவ்வொரு நாட்டு சர்க்காரும் தினமும் பல நூறு கோடி ரூபாய்களைச் செலவு செய்து பாதுகாப்பு யுத்தத்தின் பேரால பயங்கரப் படுகொலை ஆயுதங்களைச் செய்து குவிக்கிறார்கள். தனிப்பட்டவரும் ஜாதி இனம் என்ற பேரால் மற்றவரிடம் துவேஷம் காட்டுகிறார்கள். இதைப்போக்க என்ன செய்யவேண்டும்?

பதில்:- நாம் ஒருவருக் கொருவர் கொஞ்சமும் தீமை, துரோகம், வஞ்சகம், மோசம், அநீதி, கொடுமை, பொறாமை முதலியன செய்யக்கூடாது

எந்தத் தொழில் செய்தாலும், வேலை செய்தாலும் அது சமுதாயத்திற்கு அவசியமானதே. அதனால், "மட்டமான தொழில், கேவலமான வேலை" என்று எந்தத் தொழிலையும், வேலையையும் செய்பவர்களை இகழக்கூடாது வெறுக்கக்கூடாது. அனைவரையும் சமமாகவே பாவித்து அன்பு செய்யவேண்டும்.

மற்றவர் உடைமைகளைத் தகாத முறையில் அநியாயமாக அடைய ஆசைப்பட்டு எவ்விதத் தகாத முயற்சிகளையும், செயல்களையும் செய்யக்கூடாது.

பிறர் நமக்குத் தீமை செய்த போதிலும்கூட அவரை மன்னித்து, அவருடைய நன்மைக்காகவே பாடுபட்டுப் பணி செய்யவேண்டும்

எந்தச் சமயத்திலும் நீதி, நேர்மை, கடமை, அன்பு, அஹிம்சை, பண்பு, பக்தி, உண்மை, ஒழுக்கம், சத்தியம்,

சகோதரத்துவம், ஒற்றுமை, நெறிமுறைகள் தவறாது, நமது காரியங்களையும், கடமைகளையும், தொழில்களையும், வேலைகளையும், உத்தியோக அலுவல்களையும் செய்துவர வேண்டும்.

நமது மனைவியைத் தவிர, மற்ற ஒவ்வொரு பெண்ணையும் நமது உண்மையான சகோதரியாகவே கருதி அன்பு செய்யவேண்டும்.

நாம் மற்றவருக்குக் கடிதம் எழுதும்போது தலைப்பில் "அன்புள்ள ஐயா, அன்புள்ள நண்பரே" என்று எழுதுவதற்குப் பதிலாக "அன்புள்ள சகோதரா-அன்புள்ள சகோதரி" என்றே எழுதிப் பின்பு கையெழுத்துப்போட வேண்டும்.

நம் வீட்டிற்கு வரும் ஒவ்வொருவரையும், "அன்புள்ள சகோதரா வாருங்கள். அன்புள்ள சகோதரியே வாருங்கள்" என்ற அழைத்து வரவேற்று உபசரிக்க வேண்டும்.

நாம் தொழில் செய்யுமிடங்களிலும், உத்தியோகம் பார்க்குமிடங்களிலும், வேலை செய்யுமிடங்களிலும். நாம் சந்திப்பவர்களை யெல்லாம் "அன்புள்ள ஐயா, அன்புள்ள நண்பரே" என்று அழைப்பதற்குப் பதிலாக, "அன்புள்ள சகோதரா, அன்புள்ள சகோதரி" என்றே அழைத்து உரையாடவேண்டும்.

டெலிபோனில் நாம் பேசும்பொழுது மற்றவரை "ஹலோ ஹலோ" என்று அழைப்பதற்குப் பதிலாக, "அன்புள்ள சகோதரா, சகோதரி, டியர் பிரதர், டியர் சிஸ்டர்" என்றே அழைத்துப் பேசவேண்டும்.

இவ்விதமாக நாம் தினசரி செய்கிற ஒவ்வொரு சிறிய காரியத்திலும், பெரிய காரியத்திலும், ஒவ்வொரு சமயத்திலும், மற்ற ஒவ்வொருவரையும், நமது "சகோதர,

சகோதரி"யாகவே பாவித்து அழைத்து உண்மையான அன்புடன் பணி செய்து, "உண்மையான உலக சகோதரத்துவத்தை உலகில் ஒவ்வொருவர் வாழ்விலும் நிலை நாட்ட வேண்டும்?"

நீ உனக்கு எதை விரும்புகிறாயோ, அதை மற்ற ஒவ்வொருவருக்கும் விரும்பு.

இதுவே அன்பு
இதுவே சகோதரத்வம்.

## 33. ஆண் - பெண் குழந்தை

கேள்வி: ஆண் குழந்தையை விரும்புகிறவர்களுக்குப் பெண் குழந்தையையும், பெண் குழந்தையை விரும்புகிறவர்களுக்கு ஆண் குழந்தையையும் ஏன் கடவுள் கொடுக்கிறார்? அவரவர் விருப்பப்படி ஏன் கொடுக்கவில்லை?

பதில்: நமது மனைவியின் சினைப்பை என்னும் Ovaries வலது பக்கம் ஒன்றும், இடது பக்கம் ஒன்றுமாக இரண்டு இருக்கிறது. ஒரு மாதம் வலது பக்க சினைப் பையிலுள்ள முட்டை முதிர்ச்சியடையும் மறு மாதம் இடதுபக்க சினைப் பையிலுள்ள முட்டை முதிர்ச்சியடையும். இவ்விதம் மாதா மாதம் மாறி மாறி முதிர்ச்சியடைந்து வரும்.

வலது பக்க சினைப் பையிலுள்ள முட்டை முதிர்ச்சியடைந்திருக்கும்போது, கணவனின் விந்து அணு அதில் வந்து கூடினால ஆண் குழந்தையும், இடது பக்க சினைப் பையிலுள்ள முட்டை முதிர்ச்சியடைந்திருக்கும்போது கணவனின விந்து அணு அதில் வந்து கூடினால் பெண் குழந்தையும் தோன்றி வளர்ச்சியடையும்,

அதனால் நமக்கு முதன் முதலாகப் பிறந்திருக்கும் குழந்தை ஆணா பெண்ணா என்கிற விவரத்தையும் இந்தக் குழந்தை கர்ப்பம் உண்டான மாதத்தையும் எழுதி வைத்துக்கொண்டு அதிலிருந்து எண்ணி வருகிற மாதம்

ஆண் சினைப் பையிலுள்ள முட்டை முதிர்ச்சியடையும் மாதமா? அல்லது பெண் சினைப் பையிலுள்ள முட்டை முதிர்ச்சியடையும் மாதமா? என்று கணக்கு வைத்துக் கொண்டு அந்தந்த மாதத்தில் மனைவியுடன் கூடினால் விருப்பம்போல் ஆண் குழந்தையும், பெண் குழந்தையும் பெறலாம்

இவ்வாறு நமது கடவுள் ஸ்திரீகளின் உடலமைப்பில் ஏற்பாடு செய்துள்ளார்

## 34. ஆத்மா என்றால் என்ன?

கேள்வி: சகல மதங்களும், வேதங்களும், சாஸ்த்திரங் களும், ஆத்மா, ஆத்மா என்று கூறுகின்றனவே. இந்த ஆத்மா என்றால் என்ன?

பதில்: நமது உடலில் உயிராகச் செயலாற்றுகிற "உயிர்ச் சக்தி மின் அலைகளையே" ஆத்மா. ஆத்மா என்று சகல மத வேத சாஸ்த்திரங்களும் கூறுகின்றன. நமது உடல் வேறு, ஆத்மாவாகிய உயிர் வேறு என்பதை நமது மரணத் தறுவாயில் நாம் நேராகக் காண்கிறோம்,

## 35. ஆத்மா எவ்வாறு செயல்புரிகிறது?

கேள்வி: இந்த ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளானது, நமது உடலுக்கு எப்படி வருகிறது? எவ்வாறு செயல்புரிகிறது? விஞ்ஞான முறையில் விளக்கி சொல்லவேண்டும்.

பதில்: நமது உடலானது ஒரு ரேடியோப் பெட்டிபோல் அமைக்கப்பட்டிருக்கிறது.

காற்று மண்டலத்தில் ஊடுருவி வருகிற ரேடியோ ஒலி அலைகளை இழுத்துக்கிரஹித்துக்கொண்டு ரேடியோப் பெட்டி வெளியிடுவதுபோலவே —

சூரியனிடமிருந்து வருகிற உஷ்ண சக்தி மின் அலைகளை இழுத்துக் கிரஹித்துக்கொண்டு நமது உடல் செயல் புரிகிறது.

ரேடியோப் பெட்டிக்கு 'ஏரியல்' இருப்பதுபோலவே, நமது தலையிலும் உடலிலும், மற்ற பிராணிகளின் உடலிலும் உள்ள "மயிர்களே ஏரியல்களாக" இருக்கின்றன.

சூரியனிடமிருந்து வருகிற உஷ்ண சக்தி மின் அலைகள் இந்த மயிர்களின் மீது படிந்து, மயிர்க்கால் துவாரங்கள் மூலமாக உடலின் உள்ளே சென்று பரவி, உடல் பூராவும் வியாபித்து உடலை இயக்குகிறது,

நமது தலையில் மூளையில் உள்ள நரம்புகள் மூலம், நாம் எல்லா விஷயங்களையும் "அறியும் சக்தியாகவும் அறிவிக்கும் சக்தி"யாகவும் செயலாற்றுகிறது.

காதுகளில் உள்ள நரம்புகள் மூலம், நாம் எல்லா விதமான ஒலிகளையும் 'கேட்கும் சக்தி' யாகச் செயலாற்றுகிறது

கண்களில் உள்ள நரம்புகள் மூலம் நாம் எல்லாப் பொருள்களையும் 'பார்க்கும் சக்தி' யாகச் செயலாற்றுகிறது.

மூக்கில் உள்ள நரம்புகள் மூலம் நாம் எல்லாப் பொருள்களின வாசனைகளையும், மணங்களையும், 'நுகரும் சக்தி' யாகச் செயலாற்றுகிறது.

நாக்கில் உள்ள நரம்புகள் மூலம், நாம் எல்லாப் பொருள்களின் வாசனைகளையும். மணங்களையும் 'நுகரும் சக்தி'யாகச் செயலாற்றுகிறது

இதயத்தில உள்ள நரம்புகள் மூலம், நாம், அனபு, அஹிம்சை, நீதி, நேர்மை, பண்பு, பக்தி, உண்மை, ஒழுக்கம, இன்பம், தன்பம, சுகம், துக்கம, சத்தியம்,

சாந்தம், சகோதரத்துவம், பொறுமை பொறுமை முதலிய எல்லாவிதமான 'உணர்ச்சிகளையும் உணரும் சக்தி'யாக செயலாற்றுகிறது.

குடல்களில் உள்ள நரம்புகள் மூலம உணவுப் பொருள்களை ஜீரணிக்கும் 'ஜீரண சக்தி'யாகச் செயலாற்று கிறது

பீஜங்களில் உள்ள நரம்புகள் மூலம் நமக்குச் சந்ததிகளை உண்டாக்கும் 'சந்தான சக்தி'யாகச் செயலாற்று கிறது.

இதேபோலவே நமது உடலில் மற்ற ஒவ்வொரு பாகத்திலும் உள்ள நரம்புகள் மூலம், ஒவ்வொருவிதமாகச் செயல்புரிந்து, நமது உடலையும் வாழ்வையும் இயக்கு கிறது.

இதுவே ஆத்மீக தத்துவ சாஸ்திரமாகும்.

## 36. கடவுளுடன் ரேடியோத் தொடர்பு

**கேள்வி:** நாம் மனதுக்குள் ஜெபம் செய்வதாலும், தியானம் செய்வதாலும் எப்படிப் பயன் உண்டாகமுடியும்? விஞ்ஞான முறையில் விளக்கிச் சொல்லவேண்டும.

**பதில்:** "நமது எண்ணங்களின் ஒலி அலைகள் ரேடியோ அலைகளாகி, நமது மயிர்கால் துவாரங்கள் மூலமாக வெளியேறி, குறிப்பிட்ட இடத்திற்குச் சென்று, குறிப்பிட்ட காரியங்களை நிறைவேற்றும் சக்தி யுடையவையாக இருக் கின்றன" — என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக் கிறார்கள் அல்லவா?

அதே முறைப்படியே நமது பிரார்த்தனை எண்ணங் களின் ஒலி அலைகள், ரேடியோ அலைகளாகி, நமது மயிர்க் கால் துவாரங்கள் மூலமாக வெளியேறி இறைவனை

அடைகிறது. இவ்வாறு வரும் ரேடியோ அலைகள் கடவுளின மயிர்க்கால் துவாரங்கள் மூலமாகவே சென்று அவருடைய உள்ளத்தில் பதிவாகிறது.

இவ்வாறு பதிவானவுடன் நமது கோரிக்கைகளைக் கடவுள் அறிந்துகொண்டு நாம் செய்ய வேண்டியவைகளை ரேடியோ அலைகள் மூலமாகவே நமக்குச் செய்திகளாக அனுப்புகிறார்

இவ்வாறு கடவுளிடமிருந்து வரும் கட்டளைகளை நாம் உணரும்போது "எனது மனச்சாட்சி இந்தக் காரியம செய்யும்படி என்னைத் தூண்டுகிறது" என்று சொல்லுகிறோம்

கடவுளின் கட்டளையாகிய மனச்சாட்சியின்படி நாம் நடக்காமல, நமது கீழ்த்தரமான உணர்ச்சிகளையும் விருப்பங்களையும் நிறைவேற்றிக் கொள்வதிலேயே நேரத்தைச் செலவிட்டு வாழ்வை வீணாக்குகிறோம். பல விதமான அல்லல்களுக்கும் ஆளாகி வாழ்வை அழித்துக் கொள்கிறோம்.

கடவுளின் கட்டளையாகிய மனச் சாட்சியின்படி நாம் சரியாக நடந்தால், பல நன்மைகள் பெற்று வாழ்வில் வெற்றியும், பேரின்பமும், மிக உன்னத நிலையும் அடைகிறோம்.

அதனால், தியானம், தொழுகை, ஜெபம், பூஜை, பிரார்த்தனை வந்தனை, வழிபாடு, அர்ச்சனை, ஆராதனை முதலிய நிகழ்ச்சிகள் யாவும், நாம் கடவுளுடன் கொள்ளும் 'ரேடியோத் தொடர்பு' முறையே, 'ரேடியோத் தொடர்பு நிகழ்ச்சிகளே'யாகும்.

## 37. கடவுளுடன் டெலிவிஷன் தொடர்பு

கேள்வி: 'கடவுள் என் கனாவில் தோன்றி இக்காரியம் செய்யுமபடி கட்டளையிட்டார்" என்று பலர் சொல்வது பொய் இல்லையா? நாம் தூங்கும்போது எப்படிக் கடவுள்

நமக்குள் சென்று கட்டளையிட முடியும்? விஞ்ஞான முறையில் விளக்கிச் சொல்ல வேண்டும்.

பதில்: நமது உடலில் பலவிதமான வேலைகளைச் செய்யக் கூடிய பலவிதமான நரம்புகள் இருப்பதைப் போலவே, ''நமது மூளையில், ரேடியோ நரம்புகளும், டெலிவிஷன் நரம்புகளும் இருக்கின்றன.''

கடவுளிடமிருந்து வரும் கட்டளைகளை நமது ரேடியோ நரம்புகள் நமக்கு அறிவிக்கும்போது, "எனது மனச் சாட்சியின் அறிவிப்பு" என்று சொல்லுகிறோம்

இந்தக் கட்டளையாகிய நமது மனச் சாட்சியின்படி நாம் நடக்காமல், தவறான காரியங்கள் செய்யும்போது, கடவுள் நமது நல்வாழ்வுக்காகவும், நாம் திருந்துவதற் காகவும், நாம் செய்ய வேண்டிய சரியான காரியங்களை, டெலிவிஷன் அலைகளாகப் படமாகக் காணும்படி அனுப்பு கிறார். இப்படி வரும் டெலிவிஷன் அலைகளை நமது மயிர்க்கால் துவாரங்கள் மூலமாக உள்ளே இழுத்து நமது மூளையில் உள்ள டெலிவிஷன் நரம்புகள் பதிவு செய்து கொண்டு, நாம் இரவில் அமைதியாகத் தூங்கும்போது "கனவுக் காட்சிகளாகப் படமாக" அறிவிக்கிறது.

இவ்விதம் நாம் காணும் டெலிவிஷன் காட்சிகளையே, "கடவுள் என் கனவில் தோன்றி இந்தக் காரியத்தைச் செய்யும்படி கட்டளையிட்டார்" என்று சொல்லுகிறோம்.

பெரும்பாலோர், "இது வெறும் கனவு இதில் உண் மையும் பொருளும் இல்லை." என்று இந்தக் கனவுக் காட்சி களை பயனற்றதென ஒதுக்கித் தள்ளிவிட்டுத் தமது கீழான மன இச்சைகளின்படியே காரியங்களைச் செய்து அல்லல் பல பட்டு வாழ்வை வீணாக்கிக் கொள்கிறார்கள்.

"அதனால், விஞ்ஞான முறைப்படி நாம் கனவில் காணும் காட்சிகள் யாவும், நமது டெலிவிஷன் நரம்புகள் காட்டும் டெலிவிஷன் காட்சிகளேயாகும்."

நமது நண்பர்கள் நம்மைப்பற்றி நினைக்கும் நினைவுகளின் காட்சிகளும் கனவுக் காட்சிகளாகத் தெரியும்.

## 38. மனிதனின் மகத்தான சக்தி

**கேள்வி:** ஒரு சிலர் மகத்தான காரியங்களைச் செய்து பிரம்மாண்டமான சாதனைகள் புரிவதற்கும், பெரும் பாலோர் சாதாரண நிலையில் இருப்பதற்கும் என்ன காரணம்? உங்கள் கடவுள் ஏன் இப்படிப் பாரபட்சம் காட்டுகிறார்?

**பதில்:** நமது உடலில் பலவிதமான வேலைகளைச் செய்யக் கூடிய பலவிதமான நரம்புகள் இருப்பதுபோலவே, நமக்குப் பிரம்மாண்டமான சக்தியை அளித்து மகத்தான சாதனைகள் புரியக்கூடிய வல்லமையையும், ஆற்றல்களையும் அளிக்கக்கூடிய நரம்புகள் நமது தலையின் மூளைக்குமேல் இருக்கிறது. இதற்கு "சகஸ்ரார நரம்புகள்" என்று பெயர்.

இது ஆயிரம் நரம்புகள் கொண்ட ஒரு சுருள் ஆகும். இது தாமரைப் பூவின் இதழ்களை நன்கு விரித்துக் குப்புறக் கவிழ்த்து வைத்துக் கொண்டால் எப்படி யிருக்குமோ அதேபோலத் தோற்றம் உடையது. எலக்ட்ரிக் மோட்டாரின் உள்ளேயுள்ள கம்பிச் சுருள் போல இருக்கும். இது அப்படியே நமது தலையில் மூளைக்கு மேல் குல்லா மாட்டுவதுபோல் பொருத்தி அமைக்கப்பட்டிருக்கிறது.

மின்சார உற்பத்தி நிலையங்களில், மின்சார சக்தியை ஏராளமாகச் சேமித்து வைக்கக்கூடிய ஜெனரேட்டர்கள். பாட்டரிகள் இருப்பதுபோல், இந்த சஹஸ்ரார நரம்புகள் சூரியனிடமிருந்து வருகிற உஷ்ண சக்தி மின் அலைகளை, ஏராளமாகச் சேமித்து வைத்துக்கொள்ளக்கூடிய ஒரு "சேமிப்புப் பெட்டி"யாகச் செயல் புரிகிறது.

இதிலிருந்து நமது உடலின் அன்றாடத் தேவைக்கு வேண்டிய சக்தியைச் செலுத்தும் சிறிய இணைப்பு வழி பிடரியில் இருக்கிறது. இது எப்போதும் திறந்திருக்கும்.

மகத்தான சாதனைகள் புரியக் கூடிய பிரம்மாண்ட மான சக்தியை இதிலிருந்து உடலுக்குப் பாய்ச்சக் கூடிய பெரிய இணைப்பு வழி நமது நெற்றியில் புருவங்களுக்கு மத்தியில் இருக்கிறது ' இதைக் காட்டுவதற்காகவே நாம் நெற்றியில் பொட்டு வைத்து விபூதி பூசிக்கொள்ளும் பழக்கம்'' இருந்து வருகிறது

இந்தப் பெரிய இணைப்பு வழி நமது நெற்றியில் புருவங்களுக்கு மத்தியில் இருக்கிறது. "இதைக் காட்டு வதற்காகவே நாம் நெற்றியில் பொட்டுவைத்து விபூதி பூசிக்கொள்ளும் பழக்கம்'' இருந்து வருகிறது

இந்தப் பெரிய இணைப்பு வழி மூடப்பட்டிருக்கும் இதை "நமது முயற்சியால் நாமாகவே திறக்கவேண்டும்''

நமது உடலில் ஆண்-பெண் இருபாலோர்க்கும் தினமும் உண்டாகும் விந்து அணுக்கள் மிகமிகப் பிரம் மாண்டமான ஆற்றலுள்ளவை. விந்தின் ஒரு துளியில் சுமார் ஐந்து லெட்சம் உயிர் அணுக்கள் உள்ளன இந்த இந்த ஐந்து லக்ஷம் அணுக்களில் ஒவ்வொரு அணுவும ஒரு மனிதனை உண்டாக்கக்கூடிய (கர்ப்பத்தை உண்டாக்க கூடிய) அவ்வளவு மகத்தான ஆற்றல் பெற்றவை. அதனால், "ஒரு துளி விந்து அணுக்கள் நமது உடலில் இருந்து வெளியேறினால் அதனால், ஐந்து லெட்சம் மனிதர் களுக்குள்ள சக்தியை பலத்தை நாம் இழக்கிறோம்.

இந்த விந்து அணுக்கள் பக்குவமடைந்து முதிர்ச்சி யடைந்தவுடன் தனது சிருஷ்டி வேலையைத் தொடங்கும் பொருட்டு வெளியேற முயற்சிக்கிறது. இந்தச் சமயத்தில் தான் நமக்குக் காம உணர்ச்சி என்னும் பெண் சேர்க்கை உண்டாகிறது.

இந்த உணர்ச்சி உண்டாகும் சமயத்தில் மனைவியின் சேர்க்கை மூலமாகவோ, வேறு வழிமுறைகளிலோ, நமது விந்து அணுக்களை வெளியாக்கினால், அந்தச் சமயம் சுமார் "ஐம்பது லெட்சம் உயிரணுக்களுக்கு மேல் வெளியாகி அந்த அளவுக்கு நமது உடலிலுள்ள ஆற்றலும், பலமும், சக்தியும் குறைந்து நஷ்டமாகி விடுகிறது"

அதனால், இந்த உணர்ச்சி உண்டாகும் சமயத்தில் இவ்விதம் நமது விந்து அணுக்களை வெளியாக்காமல் அமைதியாக, அடக்கத்துடன், பொறுமையுடன், இறைவனைத் தியானித்துக் கொண்டிருந்து விந்து அணுக்களை வெளியாக்காமல் தடுத்தால், அவை உடனே நெற்றியில் உள்ள பெரிய இணைப்பைத் திறப்பதற்காக மேல் நோக்கிச் செல்கின்றன.

இவ்விதம் இந்த உயிரணுக்கள் நெற்றியை நோக்கி மேலே செல்வதற்காகப் படிப்படியாக ஆறு நரம்புக் குழாய்ச் சுருளகள் நமது உடலில் உள்ளன.

இவற்றில் பீஜங்களை ஒட்டினாற்போல் உள்ள முதல் நரம்புக்குழாய்ச் சுருளுக்கு "குண்டலினி அல்லது மூலாதாரச் சக்கரம்" என்று பெயர்

இரண்டாவது சுருளுக்கு "சுவாதிஷ்ட்டானச் சக்கரம" என்று பெயர்.

மூன்றாவதாகத் தொப்புளைச் சுற்றியுள்ள சுருளுக்கு "மணி பூரகச் சக்கரம்" என்று பெயர்.

நான்காவதாக இதயத்தில் உள்ள சுருளுக்கு "அநாஹதச் சக்கரம்" என்று பெயர்

ஐந்தாவதாக கழுத்தில் உள்ள சுருளுக்கு "விஷுத்திச் சக்கரம்" என்று பெயர்

ஆருவதாக நெற்றியில் உள்ள இணைப்புச் சுருளுக்கு "ஆக்ஞாசக்கரம்" என்று பெயர்

நாம் ஒரு மலை உச்சியின் மீது ஏறிச் செல்ல வேண்டுமானால், செங்குத்தாக இடையில் தடையில்லாமல சென்றால் மிகுந்த சிரமமும், கஷ்டமும், களைப்பும், சோர்வும் ஏற்பட்டு அதனால் தவறிக் கீழே விழுந்துவிடவும் கூடும். இடையில் சில இடங்களில் தங்குமிடங்களை ஏற்படுத்தி அங்கங்கே கொஞ்ச காலம் தங்கித் தங்கி, இளைப்பாறிக் கொண்டு மேலே சென்றால். நிச்சயமாகவும், கஷ்டமில்லாமலும் உச்சிக்குச் செல்லலாம்.

அதுபோல், மூலாதாரத்திலுள்ள உயிரணுக்கள் நெற்றியின் உச்சியை நோக்கி மேலே செல்கையில் தவறிக் கீழே விழுந்துவிடாமலும், விழுந்தால் தங்குமிடமாகவும் இருக்கும் பொருட்டே இந்த "ஆறு ஆதாரச் சக்கரங்களாகிய தங்குமிடங்களை"க் கடவுள் நமது உடலில் அமைத்திருக்கிறார்.

நாம் சேமித்துவைக்கும் விந்து அணுக்கள் இவ்விதம் படிப்படியாக மேலே சென்று, நெற்றியிலுள்ள பெரிய இணைப்பைத் திறந்து அதன் மூலம், சேமிப்புப் பெட்டியாகிய சஹஸ்ரார நரம்பிலிருக்கும் ஏராளமான சக்தியை உடல் பூராவிலும் உள்ள எழுபத்தி இரண்டாயிரம் நரம்புகளிலும பாய்ச்சுகிறது.

இவ்விதம் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமான சக்தி உடலில் பாய்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு பிரம்மாண்டமான சக்தி, உடலில் தோன்றி நம் மகத்தான சாதனைகளைப் புரியக்கூடிய ஆற்றலையும், உறுதியையும், வீரத்தையும், வெற்றியையும் தருகிறது.

நாம் இவ்விதம் பிரம்மாண்டமான சக்தி உடலில் சேர்த்து வளர்த்து மகத்தான பேரின்ப வாழ்வைப் பெற வேண்டும் என்பதற்காகவே, ஆண்கள் "பிரம்மசரிய நெறி" தவறாமல் இருக்கவேண்டும் என்றும், பெண்கள் "கற்பு நெறி" தவறாமல் இருக்கவேண்டும் என்றும் எல்லா மதங்களையும் சேர்ந்த பெரியோர்கள் யாவரும் கூறியிருக்கிறார்கள்,

அதனுல், ஒருசிலர் வாழ்வில் மகத்தான வெற்றியடைவதற்கும், பெரும்பாலோர் தோல்வியடைவதற்கும் அவரவர் சக்தியை வளர்த்துக் கொள்ளாததே காரணம் ஆகும். இது கடவுளின் குற்றமல்ல. நம் ஒவ்வொருவரையும் கடவுளைப்போல் மகத்தான சாதனைகளைப் புரியக் கூடிய சக்தியுடனேதான் படைத்துள்ளார்,

## 39. ஆத்மாவின் முடிவான நிலை என்ன?

கேள்வி:- நமது ஆத்மாவின் முடிவான கடைசியான அதி உன்னதமான நிலை எது?

பதில்: நமது ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகள், நமது மரணத்திற்குப் பின்னும் வானத்தில் என்றென்றும் நட்சத்திரமாகப் பிரகாசித்துக்கொண்டே இருக்கவேண்டும். இப்படி இருப்பதே ஆத்மாவின், வாழ்வின் மிக உன்னதமான முடிவான நிலை ஆகும். அதற்குமேல் வேறு எந்த நிலையும் கிடையாது.

சொர்க்கலோகத்தை அடைவது. மோட்ச மடைவது, இறைவனை அடைவது. கடவுளை அடைவது என்ற நிலைகள் யாவும். இவ்விதம் மரணத்திற்குப் பின்னும் நமது ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகள் வானத்தில் என்றென்றும் நட்சத்திரமாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் நிலையை அடைவதேயாகும்

வான மண்டலத்தில் நாம் காண்கிற "சப்தரிஷி மண்டலம்" என்னும் ஏழு நக்ஷத்திரங்களும், காசியப மகரிஷி, அத்திரி மகரிஷி, வசிஷ்ட்ட மகரிஷி, விசுவாமித்திர மகரிஷி, கௌதம மகரிஷி ஜமதக்னி மகரிஷி, பாரத்துவாஜ மகரிஷி என்ற ஏழுபேர்களுடைய ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளேயாகும்

இவர்கள் மிக நீண்டகாலம் தவம் செய்து, வேதங்களையும், சாஸ்திரங்களையும் இயற்றி, மிக நீண்டகாலம்

வாழ்ந்து, பல மகத்தான சாதனைகள் புரிந்திருப்பதால், அவர்களுடைய ஆத்மாவாகிய உயிர்ச்சக்தி மின் அலைகள் மிகமிகப் பிரம்மாண்டமான சக்தி பெற்று, அவர்களுடைய மரணத்திற்குப் பின் நாம் இன்றும் வான மண்டலத்தில் காண்கிற, "சப்த ரிஷி மண்டலம்" என்னும் ஏழு நக்ஷத்திரங்களாகப் பிரகாசித்து ஒளிவீசிக்கொண்டிருக்கின்றன.

'துருவன்' கதைதான் நம்மெல்லோருக்கும் தெரியுமே ஐந்து வயது முதல் மிக உறுதியான தவம் செய்து, தெய்வ தரிசனம் பெற்று, அதன் பின் இருபத்தி ஆறுயிரம் ஆண்டுகள், சத்தியம், சாந்தம், நீதி, நேர்மை, அன்பு, அஹிம்சை, தருமம், பக்தி, உண்மை தவறுமல் ஆட்சி புரிந்து, மற்றும் பல சாதனைகள் புரிந்ததால், அவருடைய ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகள் மிகமிகப் பிரம்மாண்டமான சக்தி பெற்று, அவருடைய மரணத்திற்குப் பின்னும், வான மண்டலத்தில் நாம் தினமும் காண்கிற "துருவ நக்ஷத்திரமாகப்" பிரகாசித்துக் கொண்டிருக்கிறது

"இயேசுநாதரைச் சிலுவையில் அறைந்து அடக்கம் செய்தபின், அவருடைய கல்லறையிலிருந்து ஒரு மகத்தான ஒளி தோன்றி ஜெருசலேம் நகரை நோக்கி வான மண்டலத்தில் சென்றதை அவருடைய சீடர்கள் நேரில் கண்டார்கள்" எனறு கிறிஸ்தவ மத வேத சாஸ்திரங்கள் கூறுகின்றன அவருடைய ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகள் வான மண்டலத்தில் 'நக்ஷத்திரமாகிச் சென்றதையே' இவ்வாறு கூறப்பட்டிருக்கிறது,

புத்தர், சங்கரர், முகம்மது நபி, ராமானுஜர், கம்பர், காளிதாசர், திருமூலர், திருவள்ளுவர், ராமகிருஷ்ணர், விவேகானந்தர், மகாத்மா காந்தி, பக்தமீரா, ஆண்டாள் முதலியவர்களுடைய ஆத்மாக்களாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளும் வான மண்டலத்தில் நக்ஷத்திரங்களாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன,

அமெரிக்க சுதந்திரத் தந்தையாகிய புக்கர் வாஷிங்டன் ஆப்ரஹாம்லிங்கன், ரஷ்ய ஞானிகளாகிய லெனின், டால்ஸ்டாய் மற்றும் இவர்களைப்போன்ற பல மேல் நாட்டு மேதைகள், ஞானிகள், விஞ்ஞானிகளின் ஆத்மாக்களாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளும் வான மண்டலத்தில் நட்சத்திரங்களாக ஒளிவிசிக் கொண்டிருக்கின்றன.

இவ்வாருக வானத்சில் நாம் தினமும் காண்கிற கோடிக்கணக்கான நட்சத்திரங்கள் யாவும், சென்ற அறு நூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளில் பூமியில் வாழ்ந்து மரணமடைந்துள்ள உத்தமப் பெரியார்கள், ரிஷிகள், ஞானிகள், தவசிகள், பக்தர்கள், அடியார்கள், கவிகள், விஞ்ஞானிகள், யோகிகள் ஆகியவர்களுடைய ஆத்மாக்களாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளேயாகும்

வான மண்டலத்தில் கோடிக்கணக்கான நட்சத்ரங்கள் தோன்றி ஒளிவிசிக் கொண்டிருப்பதற்கு இதுவே நிச்சயமான காரணம் ஆகும். இதை நாளடைவில் மேல் நாட்டு விஞ்ஞானிகளும் ஒப்புக்கொள்வார்கள் என்பது நிச்சயம

"சூரியனிலிருந்து சிதறி விழுந்த சில துண்டுகளே வானத்தில் இவ்வித நட்சத்திரங்களாக ஒளி விசிக் கொண்டிருககின்றன" என்று சில மேல்நாட்டு விஞ்ஞானிகளும், வான சாஸ்திர நிபுணர்களும் கூறுகிருர்கள் அவ்விதம் சில இருக்கலாம். "ஆனுல், முற்றிலும் இந்தத் துண்டுகள் அல்ல"

"ஆத்மிக வாழ்க்கை, தெய்விக வாழ்க்கை, என்றென்றும் அழியாத நித்திய வாழ்க்கை." என்று எல்லா மதங்களிலும் கூறப்பட்டுள்ள வாழ்க்கை நிலையானது. இவ்வாறு நமது மரணத்திற்குப் பிறனும், நமது ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகள் என்றென்றும் வான மண்டலத்தில் நட்சத்திரமாக ஒளிவிசிக் கொண்டிருக்கும் நிலையை அடைவதேயாகும்

அதனால். நாமும் மற்ற ஒவ்வொருவரும் சத்தியம், சாந்தம், சகோதரத்துவம், நீதி, நேர்மை, அன்பு, அஹிம்சை, பக்தி, பண்பு, உண்மை, ஒழுக்கம், ஒற்றுமை, முதலிய நெறிமுறைகள் தவறாது வாழ்ந்து நமது கடமைகளையும், உத்தியோக அலுவல்களையும், வேலைகளையும், தொழில்களையும் செய்து வந்தால், நமது ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளும், மிகமிகப் பிரம்மாண்டமான சக்தியுடையதாக வளர்ந்து, நமது மரணத்திற்குப் பின்னும வானத்தில் என்றென்றும நட்சத்திரமாக ஒளி வீசிக் கொண்டிருக்கும்.

நாம் நமது சக்தியை எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக வளர்க்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு நமது ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகள் பெரிய நட்சத்திரமாகவும், சிறிய நட்சத்திரமாகவும் ஒளி வீசிக் கொண்டிருக்கும்.

இதுவே சகல மதங்களும், சகல வேத சாஸ்திரங்களும் கூறுகிற உண்மையான ஆத்மிக வாழ்க்கையும், உயிரியல் தத்துவமும் ஆகும் விஞ்ஞான உண்மையும் ஆகும்.

## 40. இலட்சிய வாழ்க்கை

கேள்வி: நமது வாழ்வுக்கு ஒரு இலட்சியம் தேவையா? அல்லது "எல்லாம் கடவுளின் திருவுள்ளப் படி நடக்கும்" என்று ஒருவிதமான திட்டமும் இல்லாமல் வாழவேண்டுமா?

பதில்: நமக்கு "உணவு வேண்டுமானால்" உணவு விடுதிக்குப் போனால்தான் கிடைக்கும். "ஆடைகள் வேண்டுமானால்" ஜவுளிக் கடைக்குச் சென்றால் தான் கிடைக்கும். "மளிகைச் சாமான்கள் வேண்டுமானால்" மளிகை கடைக்குத்தான் செல்லவேண்டும். புத்தகங்கள் வேண்டுமானால், புத்தகக் கடைக்குச் செல்லவேண்டும் "இரும்புச் சாமான்கள் வேண்டுமானால்" இரும்புக் கடைக்குச் சென்றால்தான் கிடைக்கும்.

நமக்குத் தண்ணீர் தேவையானல், குழாய்க்கும், குளத்துக்கும், கிணற்றுக்கும்தான் செல்லவேண்டும். கக்கூசுக்கு போவது சரியல்ல.

நாம் குளிக்க வேண்டுமானல், குழாய்க்கும், கிணற்றுக்கும், குளத்துக்கும்தான் செல்லவேண்டும் சாக்கடைக்குப் போவது சரியல்ல.

இதுபோல், நமக்கு எந்தப் பொருள் வேண்டும்? எந்த அளவு வேண்டும்? அது எங்கே கிடைக்கும்? அதைப்பெற எவ்வளவு விலை கொடுக்கவேண்டும்? இதைப் பெறுவது அவசியந்தானா? என்ற விவரங்களையெல்லாம் தெரிந்துகொண்டு, அந்தந்த இடங்களுக்குச் சென்று அதனதன் விலையைக் கொடுத்துப் பெறுவதற்காகவே நமது கடவுள் நமக்கு அறிவையும், உடலையும், உழைப்பையும், கை கால்களையும் கொடுத்திருக்கிறர்.

எல்லாம் கடவுளின் திருவுள்ளப்படியே நடக்கும் என்று ஒரு திட்டமும், வேலையும், கடமையும் செய்யாமல் இருந்தால், அது சோம்பேறியாவதற்குத்தான பயன்தரும்.

ஒரு சிந்தனையும் இல்லாமல், ஒரு விவரமும் அறியாமல், கண்மூடித்தனமாகக் கண்ட கண்டபடி காரியங்கள் செய்வது, பைத்தியக்காரத்தனமும் ஆகும். பகுத்தறிவிற்கும் பொருந்தாது.

அதனல் நமது வாழ்வுக்கு ஒரு சரியான இலட்சியமும், குறிக்கோளும் திட்டமும் வகுத்து அமைத்துக்கொள்ள வேண்டும்.

நமது கீழான மன நிலையில் தோன்றும், கீழ்த்தரமான உணர்ச்சிகளையும் ஆசைகளையும் திருப்திப்படுத்துவதையே, வாழ்வின் இலட்சியமாகக் கொள்ளக்கூடாது. "இப்படிச் செய்வது குளிப்பதற்காகச் சாக்கடைக்குப் போவதுபோல் ஆகும்" இச்சைகளை வெல்வதே இன்பம்.

பசியைப் போக்க உணவு கொள்கிறோம் வறுமையை போக்க வேலை செய்கிறோம்' குடியிருக்க வீட்டைப் பெறு கிறோம் மானத்தைக் காக்க உடை உடுத்துகிறோம். அறி யாமையைப் போக்க கல்வி கற்கிறோம். பொழுதைப்போக்க பல இடங்கள் போகிறோம். தளர்ச்சியைப் போக்கத் தூங்குகிறோம். உயிரைக் காத்து வளர்க்கத் தியானம் செய்கிறோம.

இதுபோல் ஒவ்வொரு இலட்சியத்தைப் பயனைக் குறிக்கோளை அடையவே ஒவ்வொரு காரியத்தையும நாம் செய்து வருகிறோம்.

இதுபோல், " நமது வாழ்வின்-பிறவியின் இலட்சியம், நமது மரணத்திற்குப் பின்னும் நமது ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகள் வான மண்டலத்தில் என் றென்றும் நட்சத்திரமாகப் பிரகாசித்துக்கொண்டே இருக்க வேண்டும்'' என்பதேயாகும்

அதனால், எல்லாம் கடவுளின் திருவுள்ளப்படியே நடக்கும் என்று சோம்பியிருமல், இந்த இலட்சியம் நிறை வேற அல்லும் பகலும், நீதி, நேர்மை. அன்பு, அஹிம்சை பண்பு, பக்தி, சத்தியம், சாந்தம், உண்மை, ஒழுக்கம். சகோதரத்துவ நெறிமுறைகள் தவறுமல் உழைத்துக் கொண்டே இருக்கவேண்டும்

இந்த இலட்சியமும் உழைப்பும் இல்லாத வாழ்வு வீணுகும் வாழ்க்கையின் குறிக்கோள் சுகம் அல்ல இறைவனை அடைவதே. நமது உயிர்ச் சக்தி மின் அலைகள் நட்சத்திரமாகப் பிரகாசிக்கச் செய்வதே

## 41. கடவுளின் சேவை

கேள்வி: ' நமது காரியங்கள் யாவும் நிறைவேறக் கடவுளே உதவி செய்கிறார்'' என்று சகல மத, வேத சாஸ்திரங்களும் கூறுகின்றன. கடவுள் எப்படி உதவி

செய்கிறார்? ஒருவர் ஒரே சமயத்தில் அனைவருக்கும் எப்படி உதவி செய்ய முடியும்?

பதில்: நம்மைப் பெற்று வளர்ப்பதற்குத் 'தாயாக' கடவுள் வருகிறார்.

நம்மைப் போற்றி வளர்க்கத் 'தந்தையாகக்' கடவுள் வருகிறார்.

நமக்குக் கல்வியைக் கற்பிக்க 'ஆசிரியராக' நமது கடவுள் வருகிறார்.

நமக்கு அன்புடன் பணிவிடைகள் செய்ய 'மனைவியாக' நமது கடவுள் வருகிறார்

பசிக்கிறவனுககு 'உணவாக' கடவுள் வருகிறார்.

துன்பப்படுபவனுக்குத் 'தோழனாக' கடவுள் வருகிறார்.

நமது வறுமையைப் போக்கிக்கொள்ள 'வேலையாகவும், தொழிலாகவும்' கடவுள் வருகிறார்.

இதுபோலவே நமது கடவுள் ஒவ்வொருவர் மூலமாக வந்து நமது காரியங்கள் நிறைவேற உதவி செய்கிறார்.

"அதனால் தான் நமது தாயையும், தந்தையையும், ஆசிரியரையும், மனைவியையும், தோழர்களையுப், வேலையையும் தொழிலையும், மற்ற ஒவ்வொன்றையும் கடவுளாகவே கருதி வணங்கி, அன்பு செய்யவேண்டும்" எனறு சகல மத, வேத சாஸ்திரங்களும் கூறுகின்றன

## 42. வேலையே வழிபாடு தொழிலே தியானம்.

கேள்வி: இந்த நவீன விஞ்ஞான அவசர உலகத்தில் தினமும் காலை மணி ஐந்து முதல் இரவு மணி பத்து வரையில் நமது அனறாட வேலைகளைச் செய்வதற்கே நேரம் போதவில்லை அவ்விதமிருக்க ஜெபம், பூஜை, தியானம், தொழுகை, வழிபாடுகள் செய்ய முடிவதில்லை. அதனால், இந்தக் குறையைப் போக்க என்ன செய்ய வேண்டும்?

பதில்: நமக்குச் சந்தர்ப்பச் சூழ்நிலைகளாலும் நமது கல்விக்கும், திறமைக்கும், தகுதிக்கும், பயிற்சிக்கும், ஆர்வத்திற்கும் ஏற்றபடி எந்தத் தொழில், வேலை, உத்தியோகம் கிடைக்கிறதோ, அதைச் சிரத்தையாகவும், திறமையாகவும், ஒழுங்காகவும், 'அவரவர் நம்பும் கடவுளை மனதில் நினைத்துத் தியானித்துக்கொண்டே' செய்ய வேண்டும் இப்படிச் செய்வதும் கடவுளைப் பூஜிப்பதேயாகும்.

தோட்டி தனது வேலையை ஒழுங்காகச் செய்யாவிட்டால், ஊரெல்லாம் நாறிவிடும் ஒருவரும் நல்வாழ்வு வாழ இயலாது. அதனால், தனது 'இறைவனைத் தியானித்துக்கொண்டே தனது கடமையைச் சரியாகச் செய்து முடிப்பதே தோட்டி செய்யும் பூஜையாகும்.'

சமையல் செய்பவர் தனது வேலைகளைச் சரியாகச் செய்யாவிட்டால், மற்றவர் பட்டினியிருக்க வேண்டியதுதான் அதனால், 'அவருடைய கடமைகளையும், வேலைகளையும், இறைவனைத் தியானித்துக்கொண்டே நன்றாகவும், ஒழுங்காகவும் செய்வதே அவர் செய்யும் பூஜையாகும்'

மின்சார ஊழியர் தனது வேலைகளைச் சரியாகச் செய்யாவிட்டால், ஊரெல்லாம் இருளாகிவிடும் அதனால், 'அவருடைய கடவுளை மனதில் நினைத்துத் தியானித்துக்கொண்டே அவருடைய கடமைகளைச் சரியாகச் செய்வதே அவரது கடவுளுக்குச் செய்யும் பூஜையாகும்'

மோட்டார் ஓட்டுபவர் தனது வேலையைச் சரியாகச் செய்யாவிட்டால் மோட்டாரில் உள்ளோர் அனைவரும் மடிய வேண்டியதுதான் அதனால், 'அவரது இறைவனை மனதில் நினைத்துத் தியானித்துக்கொண்டே அவரது வேலைகளைச் சரியாகச் செய்வதே அவரது கடவுளுக்கு அவர் செய்யும் பூஜையாகும்.'

இதுபோல், 'நமது கடமைகளைச் சரியாகச் செய்

வதிலேதான் மற்றவர்களின் நல்வாழ்வு அடங்கியிருக்கிறது. நமது நல்வாழ்வும் அடங்கியிருக்கிறது.'

அதனால் நாம் எந்த வேலை செய்தாலும், எந்தத் தொழில் செய்தாலும், நீதி, நேர்மை, அன்பு, அஹிம்சை பண்பு, பக்தி, உண்மை, ஒழுக்கம், ஒற்றுமை, சகோதரத்துவ நெறிமுறைகள் தவறாமல் செய்து வநதால், எந்த வேலையும் கேவலமானதோ மட்டமானதோ அல்ல. 'அவரவர் செய்யும் வேலையே அவரது இறைவனை உடலால் பூஜிக்கும பூஜை ஆகும்' மலர்களால் அர்ச்சிப்பது மட்டும் பூஜை அல்ல; இவ்விதம் தவறாமல் தினமும் செய்து வந்தால், நமது உயிர்ச் சக்தி மின் அலைகள் மிக மிகப் பிரம்மாண்டமானதாக வளர்ந்து நமது மரணத்திற்குப் பினனும வானத்தில் என்றென்றும் நட்சத்திரமாக பிரகாசித்துக் கொண்டிருக்கும்.

## 43. தீமைசெய்ய உரிமையில்லை

**கேள்வி:** நமக்குத் தீமை செய்தவர்களுக்கு நாம் ஏன் பதிலுக்குத் தீமை செய்யக்கூடாது? பழிக்குப் பழிவாங்கி வெற்றி கொண்டவர்களை 'வீரர்கள்' என்று சரித்திரங்கள் போற்றுகின்றனவே

பதில்: நாம் பெற்றெடுத்து வளர்த்த குழந்தையை, நாம கட்டிய மனைவியையோ நாம் கொடுமை செய்தால், உடனே அரசாங்கச் சட்டப்படி நமக்கு ஜெயில தண்டனை கிடைக்கும நாம பெற்றெடுத்து வளர்த்த குழந்தைதானே. நாம் கட்டிய மனைவிதானே. நமக்கு உரிமையுள்ளவர்கள் தானே என்று நம குழந்தையையோ, மனைவியையோ கொலை செய்தால், உடனே அரசாங்கம் நமக்குத் தூக்குத் தண்டனை விதிக்கும்.

இதிலிருந்து என்ன ஏற்படுகிறது? நாம் பெற்றெடுதது வளர்த்த குழந்தைக்குக் கூட கொடுமை

செய்யவோ, அநீதி செய்யவோ நமக்கு உரிமை இல்லே. "நன்மைகள் செய்ய மட்டும நமக்கு உரிமை உண்டு"

நமக்கு உரிமையுள்ள, நாம் பெற்றெடுத்து வுளர்த்த குழந்தைக்கும், கட்டிய மனேவிக்குமே தீமையோ, கொடுமையோ, அநீதியோ செய்ய நமக்கு உரிமை இல்லாதபோது, மற்றவர்களுக்குத் தீமையும், கொடுமையும், அநீதியும் செய்ய எப்படி உரிமை உண்டாக முடியும்?

அதனுல் நாம் கட்டிய மனேவியாய் இருந்தாலும் பெற்றெடுத்து வளர்த்த பிள்ளேயாய் இருந்தாலும், மற்ற யாராயிருந்தாலும் "நனமைகள் செய்ய மட்டுமே நமக்கு நமக்கு உரிமை உண்டு" தீமை கொடுமை. அநீதி செய்ய உரிமை இல்லே செய்தால் அரசாங்கச் சட்டப்படி சிறைத் தண்டனேயும், தூக்குத் தண்டனேயும் கிடைக்கும். அரசாங்கச் சட்டத்திற்குத் தப்பினுலும் தெய்வ தண்டனே நிச்சயமாகக் கிடைக்கும்,

பழிக்குப் பழி வாங்கி வெற்றிகொண்டவர்கள், தமது "சொந்த விருப்பத்தை" நிறைவேற்றிக்கொள்வதிலேயே வெற்றி கொண்டிருக்கிருர்கள். அவர்களது வெற்றியால் பொது நன்மை எதுவுமே இல்லே அதனுல் எவ்விதப் பொதுப்பயனும் உண்டாகவில்லே

அதனுல் நமக்குத் தீமை செய்பவர்களேயும் மன்னித்து அவர்களின் நல்வாழ்வுக்குப் பணி செய்வதே அவசியமும், நீதியும், கடமையும் ஆகும்,

## 44. தெய்வ தண்டனே.

கேள்வி: "நாம் செய்யும் தீமைகளுக்கு நமது மரத்திற்குப் பின் கடவுளால் தண்டிக்கப்படுகிருேம்" என்று ஹிந்து மத வேத சாஸ்த்திரங்கள் கூறுகின்றன நமது மரணத்திற்குப் பின் "உடல் அழிந்த பின்" நம்மை எவ்வாறு தண்டிக்க முடியும்? "விஞ்ஞான முறையில் நிருபித்து" விளக்கிச் சொல்ல வேண்டும்.

பதில்: இந்த உலகிலுள்ள சர்க்கார்களுக்கெல்லாம் மேலாகத், தலைமையாக நமது கடவுளின் தெய்வ சர்க்கார் ஒன்று உள்ளது.

எமதர்மர் என்பவர்தான் இந்த தெய்வ சர்க்காரின் பிரதம நீதிபதி ஆவார்.

ரேடியோ ஒலி அலைப் பதிவுக் கருவிகளை மிகச்சிறிய அளவில் ஒரு அங்குலம், அரை அங்குலம், கால் அங்குலம் சதுர அளவுகளில் தயாரித்து, மேஜைகளிலும், கதவுகளிலும், ஜன்னல்களிலும், சுவர்களிலும், படுக்கைகளிலும் மறைத்து வைத்து, இரகசியப் பேச்சுக்களையும், ரகசிய எண்ணங்களையும், ரகசியச் செயல்களையும் பதிவுசெய்து கண்டுபிடிக்கும் முறை எல்லா மேல்நாடுகளிலும் பெரும் பாலோரிடம் நடைமுறையில் பழக்கத்தில் இருந்து வருகிறது.

அதுபோல்,நாம் ரகசியமாய்ச்செய்யும் தீமையான செயல்களையும், எண்ணும் எண்ணங்களையும், உடனுக்குடன் "ரேடியோ அலைகள் மூலமாகவே" எமதர்மர் நம் கணக்கில் பதிவுசெய்துகொண்டு அதற்குத்தக்கவாறு நமது மரணத்திற்குப்பின் தண்டனை அளிக்கிறார். நாம் இந்தத் தண்டனையிலிருந்து தப்பவே முடியாது எமதர்மரை ஒருபோதும் ஏமாற்றவே முடியாது

நமது உடல் வேறு உயிராகிய ஆத்மா வேறு. இதை நமது மரணத்தறுவாயில் நேரிடையாகக் காண்கிறோம்.

நமது மரணத்தினால் நமது ஆத்மாவாகிய உயிர் உடலை விட்டு வெளியேறியதும், நமது பாவ புண்ணியச் செயல்களுக்கேற்றவாறு மறு ஜீவன்களாகப் பிறந்து, நமது தண்டனைகளை அனுபவிக்கும்படி, அந்தந்த ஜீவன்களின கர்ப்பங்களிலுள்ள விந்து அணுக்களில் – கருவில் எமதர்மர் "ரேடியே அலைகள் மூலமாகவே" சேர்ப்பித்து

பதிய வைக்கிறார். இவ்வாறு சேர்ப்பித்ததும் அந்தந்த கர்ப்பங்களிலுள்ள கருவுக்கு உயிர் உண்டாகிறது.

உதாரணமாக:- பிறருக்குத் துன்பம் செய்து அதனால் அவர்கள் மரணமடையும்படி செய்தவர்களின ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளை, அவர்களது மரணத்திற்குப் பின், நம் ஒவ்வொருவர் ஊரிலும் உள்ள மட்டன் ஸ்டால்களில் தினசரி வெட்டப்பட்டுத் துண்டு துண்டாகச் சிதைக்கப்படுகிற ஆடுகளாகப் பிறக்கும்படி ஆடுகளின் கர்ப்பங்களிலுள்ள கருவில் ரேடியோ அலைகள் மூலம் சேர்ப்பிக்கிறார்.

தினமும் நாம் ஒவ்வொரு ஊரிலும் காண்கிற ஆடுகள் யாவும், இவ்விதம் பாபம் செய்தவர்களின் ஆத்மாக்களால், உயிர்ச் சக்தி மின் அலைகளால் இயங்குபவையே ஆகும்

பிறரை ஏமாற்றி மோசம் செய்து, வஞ்சித்துப் பொருள் சேர்ப்பவர்களின் ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளை, அவர்களது மரணத்திற்குப் பின், மலம் தின்னும் பன்றிகளாகப் பிறந்து, பலருடைய மலங்களைத் தின்று கொண்டிருக்கும்படியான தண்டனையை அனுபவித்துக்கொண்டிருக்கும்படி, பன்றிகளின கர்ப்பங்களிலுள்ள, கருவில் ரேடியோ அலைகள் மூலம் சேர்ப்பித்துப் பதிய வைக்கிறார். நாம் ஒவ்வொரு ஊரிலும் தினமும் காண்கிற பன்றிகள் யாவும் இவ்விதம் பாவம் செய்ததற்காக கடவுளால் தண்டிக்கப்பட்டுத் தண்டனையை அனுபவிக்கும் ஆத்மாக்களே ஆவார்கள்.

இதுபோலவே, நமது கடவுள் நாம் செய்கிற பாவங்களுக்கேற்றவாறு நமது மரணத்திற்குப் பின் தண்டனை அளித்து, நாம் அனுபவிக்கும்படி செய்கிறார். அதனால், இந்தத் தண்டனையிலிருந்து ஒருபோதும் தப்பவே முடியாது. கடவுளை ஒருபோதும் ஏமாற்றவே முடியாது.

இவ்வுலகில் நாம் காண்கிற, கால்நடைகள், விலங்குகள், பிராணிகள், பறவைகள், மற்ற உயிரினங்கள்யாவும், இவ்விதம் பலவிதமான பாவங்களைச் செய்ததற்காகத் தண்டிக்கப்பட்டுத் தண்டனையை அனுபவிக்கும் மனித ஆத்மாக்களே-மனிதரின் உயிர் சக்தி மின் அலைகளேயாகும்.

"இவைகளைப் பார்த்தாவது நாம் திருந்தி, குற்றமும், தீமையும், பாபமும், கொடுமையும், அநீதியும் செய்யாமல், சத்தியம், நீதி, நேர்மை, அன்பு, அஹிம்சை, உண்மை, ஒழுக்கம், ஒற்றுமை, சகோதரத்துவ நெறிமுறைகள் தவருமல் நடந்து, பேரின்ப வாழ்வைப் பெறவேண்டும்" என்பதற்காகவே, இவைகளையெல்லாம் நம் கண் முன்பாக நாம் பார்க்கும்படி நமது கடவுள நடமாடவிட்டிருக்கிருர்.

ஆகையால், நமது பாவங்களுக்காக, நாம் தண்டனை அனுபவிக்கும் தெய்வ சர்க்காரின் சிறைச்சாலையானது, நாம் காணுமல் 'நாகலோகம்' என்று எங்கோ இருக்கவில்லை. நம் கண்முன்பாகவே, பிராணிகளாக விலங்குகளாக இருக்கிறது.

நாம் எவ்வளவு அதிகமான பாபங்களும் குற்றங்களும் செய்திருந்த போதிலும்கூட, நமது-"மரணத் தறுவாயிலாவது" நமது பாவச் செயல்களுக்கு வருந்தி, திருந்தி, நமது கடவுளிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டால், அவர் நமது தண்டனைகள் யாவற்றையும் ரத்துச் செய்து விடுகிருர். இதைப் "பாவ விமோசனம்" என்று ஹிந்து சாஸ்திரங்கள் கூறுகின்றன.

"இவ்விதம் திருந்துபவர்களுக்கு மன்னிப்பளித்துத் தண்டனைகளை ரத்துச் செய்யவேண்டும்" என்பதற்காக நம்மை 'உயிரோடிருக்கும்போது' தண்டிக்காமல், 'மரணத்திற்குப் பின்' தண்டிக்கும் முறையை மேற்கொண்டு அமுல் நடத்தி வருகிருர்.

எவ்விதக் குற்றமும் பாவமும் செய்யாமல் நீதி, நேர்மை, சத்தியம், சாந்தம், அன்பு, அஹிம்சை, பண்பு, பக்தி, பொறுமை, உண்மை, ஒற்றுமை, ஒழுக்கம், சகோதரத்துவ நெறிமுறைகள் தவருமல் எப்போதும் தமது கடவுளை மனதில் நினைத்துத் தியானித்துக்கொண்டே, சகல கடமைகளையும் செய்பவர்களின் ஆத்மாவை, உயிர்ச் சக்தி மின் அலைகளை, மிகமிகப் பிரம்மாண்டமான சக்தியுடையதாக வளர்த்து, அவர்களது மரணத்திற்குப் பின் வானத்தில் என்றென்றும், நட்சத்திரமாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கும்படி வானமண்டலத்தில் ரேடியோ அலைகள் மூலம் நமது கடவுள் சேர்ப்பிக்கிருர்.

இந்த விஞ்ஞான சாஸ்திர முறைப்படியே, நாம் செய்கிற பாவங்களுக்கு நமது கடவுள், நமது மரணத்திற்குப்பின் நமது உடலிலிருநது வெளியேறுகிற ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளை இயக்கி அவரவர் செய்கைகளுக் கேற்றபடி, மறு பிறவியடையச் செய்து தண்டனைகளை அனுபவிக்கச் செய்கிருர்.

இந்த விஞ்ஞான உண்மைகளை மேல்நாட்டு விஞ்ஞானிகளும், மேலும் மேலும் ஆராய்ச்சிகள் செய்து, நாளடைவில் ஒப்புக்கொள்வார்கள் என்பது நிச்சயம், நமது மரணத்திற்குப் பின் உடலை அழித்துவிடுவதால், உடலே உண்மையான மனிதன் அல்ல உடலிலிருந்து வெளியேறி என்றும் அழியாமல் இருக்கிற ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளே உண்மையான மனிதன் ஆவான்.

ஆதாயத்தை நாடிப் பாவங்கள் செய்வதுகூடாது.
பணத்தை நாடிக் குணத்தைக் கெடுப்பதுகூடாது.
ஜெபம் ஓங்க, ஜெயம் ஓங்கும்.

## 45. சிற்றின்பம் என்ருல் என்ன ?

கேள்வி: சிற்றின்பம், பேரின்பம், என்று சகல வேத சாஸ்திரங்களும் கூறுகின்றன. இதில் சிற்றின்பம் என்ருல் என்ன?

பதில்: இனிய சுவையான உணவுகளையும், பலகாரங்களையும், பலவிதமான திண்பண்டங்களையும் சாப்பிடும் போது மிகமிக, இன்பமாய் இருக்கிறது. ஆனால், இந்தப் பண்டங்கள் யாவும் நாவைவிட்டுத் தொண்டைக்குள் சென்றபின் இந்த இன்பம் நீங்கிவிடுகிறது.

இனிய, இதமான, அன்பான ஆதரவான வார்த்தைகளைக் கேட்டால் காதுகளுக்கும், மனதுக்கும் இன்பமாய் இருக்கிறது ஆனால், இந்தக் கேள்விகள் முடிந்தவுடன் இந்த இன்பம் மாறிவிடுகிறது.

அழகான, உணர்ச்சிகளைத் தூண்டும் படங்களையும், காட்சிகளையும் கண்டால் கண்களுக்கு மிக இன்பமாய் இருக்கிறது இந்தக் காட்சிகள் மாறியதும் நமது இன்பமும் மாறிவிடுகிறது.

சிறந்த வாசனையுள்ள பொருள்களை நுகரும்போது மூக்கிற்கும் மனதிற்கும மிகவும் இன்பமாக இருக்கிறது: ஆனால், இந்த நுகர்ச்சி முடிந்தவுடன இந்த இன்பம் மாறி நீங்கிவிடுகிறது

செண்ட்டுகள், அத்தர்கள், பன்னீர் கலந்த சந்தனம் முதலியவைகளை உடலில் பூசிக்கொண்டால் உடலும் உள்ளமும் மிகமிக இன்பமாய் இருக்கிறது. ஆனால் சற்று நேரத்தில் இந்த மணம் மாறியதும் இந்த இன்பமும் மாறி விடுகிறது.

நமது மனைவியோடு கூடி உடலுறவு கொள்ளும் போது, மிகவும் இன்பமாய் இருக்கிறது. ஆனால் இந்த இன்பமானது, சில நிமிஷங்களுக்கு மேல் நீடிப்பதில்லை, மாறிவிடுகிறது.

அதனால் இந்த இன்பங்கள் எல்லாம் நிலையாக இல்லாமல் சற்று நேரமே இருப்பதால், இவைகள் 'சிற்றின்பம்' என்றும் அதனால், இவைகளைப் பெறுவதி

லேயே நமது கல்வி, அறிவு, ஞானம், சக்தி, உழைப்பு, செல்வம், இவைகளைப் பயன்படுத்தி வீணாக்கக்கூடாது என்றும் சகல மத வேத சாஸ்திரங்கள் யாவும் கூறுகின்றன.

## 46. சிற்றின்பங்களால் வரும் தீமைகள்

கேள்வி: சிற்றின்பங்களால் உடலுக்கும் உள்ளத்திற்கும் இன்பம் அதிகமா? துன்பம் அதிகமா?

பதில்: உணவுப் பொருள்கள் மிகவும் ருசியாக இருக்கின்றன என்று அளவுக்குமேல் சாப்பிட்டால், உடனே வாந்தி, வயிற்றுவலி, தலைவலி வயிற்றுப்போக்கு முதலிய நோய்கள் உண்டாகிக் கஷ்டப்படுவதை நாம் கண் கூடாகக் காண்கிறோம்.

நாம் உண்ணும் உணவுப் பொருள்கள் உண்ணும் போது மிகவும் சுவையாக இருக்கின்றன ஆனால் குடலுக்குள் சென்று ஐந்து மணி நேரத்தில் ஜீரணமானபின் மீதமிருப்பவை யாவும் மலமாகி, விஷப் பொருளாகிச் சகிக்க முடியாத நாற்றத்துடன் விளங்குகின்றன.

அதாவது சுவையான உணவுப் பொருள்கள் யாவும் ஐந்து மணி நேரத்திற்குப் பின் கெட்டுப்போய் விஷக் கிருமிகளாகி அதனால் நாற்றமெடுக்கின்றன.

அதுபோல், நமது விந்து அணுக்களும், தகாத முறையிலும், அளவுக்கு மிஞ்சியும் பயன்படுத்தப்பட்டால் உடனே விஷத்தன்மையடைந்து 'விஷக் கிருமிகளாகி உடல் பூராவும் பரவி, ஆண்-பெண் இருபாலார்க்கும் கிரந்தி நோய் என்னும் பலவிதமான நோய்கள் உண்டாகி உடலையும் வாழ்வையும் அழிக்கின்றன.

அதனால், பெண்ணின்பம் பெறுவதில் நமது மனைவியைத் தவிர, மற்ற ஒவ்வொரு பெண்ணையும் உண்மையான சகோதரியாகவே கருதி அன்பு செய்யவேண்டும்

அதுபோல், ஒவ்வொரு பெண்ணும் தனது கணவரைத் தவிர மற்ற ஒவ்வொருவரையும் தமது உண்மையான சகோதரராகவே கருதி அன்பு செய்யவேண்டும்.

நம் தேசத்திலும், மற்ற ஒவ்வொரு தேசத்திலும் நாம் தினமும் காண்கிற லெட்சக்கணக்கான இப்படிப்பட்ட நோயாளிகள் யாவரும், இவ்விதத் "தகாத முறைச் சேர்க்கையால், அவர்கள் பெற்ற இனபமே" அவர்களுக்கு கொடுத்துள்ள தண்டனைகளை அனுபவிப்பவர்களே ஆவார்கள்.

அதனால், தகாத முறைகளில் நாம் இன்பம் பெற்று அதனால் உண்டாகும் பல அல்லல்களுக்கும் ஆளாகி, நமது உடலையும் வாழ்வையும், அழித்துக் கொள்கிற தற்கொலை முயற்சி போன்ற இந்தத் தகாத செயல்களை அறவே விலக்கிவிடவேண்டும்

"நாம் எண்ணும் எண்ணங்கள் யாவும் நமது இறைவனை நமது இதயத்தால் மனதால் பூஜிக்கும் பூஜையாகும்." அதனால், நமது கடவுளுடைய அன்பு, அஹிம்சை, நீதி, நேர்மை, பண்பு, பக்தி, உண்மை, ஒழுக்கம், சத்தியம், சாந்தம், சகோதரத்துவதக்ற்கு விரோதமான எண்ணங்களை ஒருபோதும் மனதால் எண்ணக்கூடாது

"நாம் பேசும் பேச்சுக்கள் யாவும் நமது இறைவனை நமது வாயால், நாவால் பூஜிக்கும் பூஜை" ஆகும், அதனால் நமது இறைவனுக்கும் இறைவனின் நீதி, நேர்மை, அன்பு, அஹிம்சை, உண்மை, ஒழுக்கம், ஒற்றுமை, சத்தியம், சகோதரத்துவ நெறிகளுக்கு விரோதமான பேச்சுக்களை ஒருபோதும் நமது வாயால் பேசவே கூடாது.

"நாம் செய்யும் செயல்கள் யாவும் நமது இறைவனை உடலால் பூஜிக்கும் பூஜையாகும்". அதனால் நமது இறைவனுக்கும், இறைவனின் நீதி, நேர்மை, அன்பு,

அஹிம்சை, பண்பு, பக்தி, உண்மை, ஒழுக்கம், சத்தியம், சகோதரத்துவ நெறிகளுக்கு விரோதமான காரியங்களை ஒருபோதும் நமது உடலால் செய்யவே கூடாது.

"கணவன்-மனைவி உடலுறவு கொள்ளும் செய்கையானது, நமக்குக் குழந்தைச் செல்வங்களைக் கொடுக்க வேண்டும் என்பதற்காக, நமது கடவுளை உணர்ச்சியால் பூஜிக்கும் பூஜையாகும்" அதனால் கணவனும் மனைவியும் ஒருபோதும் தகாதமுறையில் உடலுறவு கொள்ளவே கூடாது

இவ்விதம் தவருமல் செய்து வந்தால், நமது ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகள், நமது மரணத்திற்குப் பின்னும் என்றென்றும் வான மண்டலத்தில் நட்சத்திரமாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் நிலை உண்டாகும்.

சாக்கடையில் மூழ்கி உழல்வதே பன்றிக்கு இன்பம். மலங்களை உண்பதே பன்றிக்கு இன்பம். அதனல் மனிதன பன்றியாக வாழக்கூடாது கடவுளை அடைவதே மனிதனுக்கு இன்பம்.

## 47. பேரின்பம் என்ருல் என்ன ?

கேள்வி: "நாம் எப்போதும் இறைவனைத் தியானித்துப் பேரின்பம் பெறவேண்டும" என்று நமது மத வேத சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது. இந்தப் பேரின்பம் என்ருல் என்ன ?

பதில்: சர்க்கரையை நமது வாயில் போட்டுச் சுவைக்கும்போது நமது நாக்கு எப்படிப்பட்ட இனிமையான உணர்ச்சியை அடைந்து அனுபவிக்கிறதோ அதே போலவும் —

கணவன்-மனைவி உடலுறவு கொள்ளும்போது இருவருக்கும் எப்படிப்பட்ட இனிமையான உணர்ச்சி உண்டாகிறதோ அதே போலவும், நமது உடலிலுள்ள எழுபத்தி

இரண்டாயிரம் நரம்புகளும் இனிமையான உணர்ச்சியை வாயில் சர்க்கரை போடாமலும் – கணவன் மனைவி உடலுறவு இல்லாமலும் அடைந்து, அல்லும் பகலும், என்றென்றும் ஒரு நிமிஷமும் தவறாமல் மாறாமல் நீடித்து நிலைபெற்றிருக்க வேண்டும் இப்படி நிலைபெற்றிருப்பது தான் பேரின்பம். இந்தப் பேரின்பத்தைப் பெறுவதற் காகவே நாம் பிறந்து வாழ்கிறோம்.

## 48. பேரின்பம் பெறுவது எப்படி ?

கேள்வி : இந்தப் பேரின்பத்தைப் பெறுவது எப்படி? எப்போதும் கடவுளைத் தியானிப்பதன் மூலம் இந்தப் பேரின்பம் எப்படி உண்டாகும் ?

பதில் : நமது உடலில் பலவிதமான வேலைகளைச் செய்யக்கூடிய பலவிதமான நரம்புகள் இருப்பதுபோலவே, இப்படி அல்லும் பகலும் பேரின்பம் நிலைபெறச் செய்யும் நரம்புகள் நமது தலையில் மூளைக்குமேல் இருக்கிறது. இதற்கு 'சஹஸ்ரார நரம்புகள்' என்று பெயர்.

சூரியனிடமிருந்து வருகிற உயிர்ச் சக்தி மின் அலைகளை இந்த சஹஸ்ரார நரம்புகள் ஏராளமாக இழுத்துச் சேமித்து வைத்துக்கொண்டு, உடலிலுள்ள எழுபத்தி இரண்டாயிரம் நரம்புகளுக்கும் பாய்ச்சி இந்தப் பேரின்பத்தை நிலைபெறச் செய்கிறது.

நாம் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக நமது கடவுளைத் தியானிக்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு இந்த சஹஸ்ரார நரம்புகள் அதிகமான சக்தியைச் சேமித்து வைத்துக்கொண்டு அதிகமான இன்பத்தை அளிக்கிறது.

இந்த சஹஸ்ரார நரம்பிலிருந்து உடல் பூராவுக்கும் பேரின்பத்தைப் பாய்ச்சும் முக்கிய இணைப்பு வழி நெற்றியின் முன்புறம் புருவங்களுக்கு மத்தியில் இருக்கிறது. இதைக் காட்டவே நெற்றியில் விபூதி பூசுகிறோம். பொட்டு வைத்துக் கொள்கிறோம்.

இந்த இணைப்பு வழி மூடப்பட்டிருக்கும் இதை நமது முயற்சியால் நாமாகவே திறக்கவேண்டும்.

நமது உடலில், ஆண்-பெண் இருபாலார்க்கும் தினமும் உண்டாகிற விந்து அணுக்களே இதைத் திறக்கக் கூடியவை.

அதனால், நமது விந்து அணுக்களைத் தினமும் வெளியாக்காமல், சேமித்துவைத்து, நெற்றியிலுள்ள முன் இணைப்பைத் திறக்கவேணடும திறந்தவுடன ஏராளமான சக்தி உடலில் பாய்ந்து பேரின்பம நீடித்து நிலைபெறும்

இப்படிப் பேரின்பம் பெறுவதற்காக, நமது விந்து அணுக்களைத் தினமும் சேமித்து வளர்க்கவேண்டும் என பதற்காகவே ஆண்கள், 'பிரமசரிய நெறி தவருமல்' இருக்கவேண்டும் என்றும் பெண்கள் கற்பு நெறி தவருமல் இருக்கவேண்டும் என்றும் பெரியோர்கள் கூறியிருக் கிருர்கள்

இந்தப் பேரின்ப நிலையை அடைவதற்காகவே நாம் பிறந்திருக்கிறேம்-வாழ்கிறேம் வேறு எதற்கும் அல்ல.

## 49. தீ வளர்த்தல் எதற்கு?

கேள்வி: ஹோமம் செய்தல், யாகம் செய்தல் என்ற பெயரில் தீயை வளர்த்து அதில் நெய்யையும், மற்ற உப யோகமுள்ள பொருள்களையும் போட்டு எரித்து வீணுக்கு கிருர்களே இதனுல் எப்படி என்ன பயன் உண்டாகிறது?

பதில்: "இந்தப் பூமியின் மீதுள்ள, ஏழு உலகங் களிலும் சேர்ந்துள்ள 'இருள்' பூருவும் ஒன்று சேர்ந்து எதிர்த்தாலும்கூட, ஒரு சிறு ஒளியை ஒருபோதும் அழிக்கவே முடியாது-மாற்றவே முடியாது.

"அதைப்போலவே, நமது ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின அலைகளாக உள்ள ஒளியையும், இந்தப் பூமி

பூருவும் உள்ள ‘ இருள் ’ பூருவும் ஒன்று சேர்ந்து எதிர்த் தாலும்கூட ஒருபோதும் அழிககவே முடியாது மாற்றவே முடியாது ’’

“ இவ்வளவு பிரம்மாண்டமான சக்தி நம் ஒவ்வொரு வரிடமும் இருக்கிறது ’’ - என்ற இந்த மகத்தான உண் மையை ஒவ்வொருவருக்கும் விளக்கிக் காட்டி, அவரவர் இதயத்தில் நிலைநாட்டவே தீ வளர்க்கப்படுகிறது.

இருள் என்பது துன்பங்களையும், தீமைகளையும் குறிக்கும் இந்தப் பூமி பூருவும் உள்ள தீமைகளும், துன்பங்களும் ஒன்று சேர்ந்தாலும்கூட, நமது ஆத்மா வாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளை ஒருபோதும் அழிக் கவோ, மாற்றவோ முடியவே முடியாது. இவ்வளவு பிரம் மாண்டமான சக்தி நம் ஒவ்வொருவர் உடலிலும் இருக் கிறது என்றும் பொருள் உண்டு

இந்த மகத்தான உண்மையை விளக்கிக் காட்டி ஒவ்வொருவர் இதயத்திலும் நிலைநாட்டவே-ஹிந்துக்கள் “ ஹோமம் வளர்த்தல் என்னும் தீ வளர்க்கும் ’’ முறையை அனுஷ்டிக்கிறார்கள்.

இந்த மகத்தான உண்மையை விளக்கிக் காட்டி ஒவ் வொருவர் இதயத்திலும் நிலைநாட்டவே, கிறிஸ்தவர்கள் ‘ மெழுகுவத்தியை ஏற்றித் தீவளர்த்து ’ வணங்கிப் பிரார்த்தனை செய்யும் முறையை அனுஷ்டிக்கிறார்கள்.

இந்த மகத்தான உண்மையை விளக்கிக் காட்டி ஒவ் வொருவர் இதயத்திலும நிலைநாட்டவே, முஸ்லிமகள் ‘ மூன்றும் பிறைச் சந்திரனின ஒளியை ’ வணங்குகிறார்கள்.

“ இருட்டுக்குப் பின் வெளிச்சம், புயலுக்குப் பின அமைதி, துனபத்திற்குப் பின் இன்பம வருவது நிச்சய மானது-சத்தியமானது. எவராலும் ஒருபோதும் அழிக் கவோ மாற்றவோ முடியவே முடியாதது’’. —

என்ற இந்த மகத்தான உண்மையை விளக்கிக் காட்டி ஒவ்வொருவர் இதயத்திலும் நிலை நாட்டவே, முஸ்லிம்கள் அமாவாசை இருளுக்குப் பின் முதன் முதலாகத் தோன்றும் மூன்றாம் பிறைச் சந்திரனின் ஒளியையே தெய்வமாக வணங்குகிறார்கள்

தமது கொடிகளில் முஸ்லிம்கள் இந்த மூன்றாம் பிறைச் சந்திர ஒளியையும் அதன் நடுவில் நமது ஆத்மாவின் ஒளியாகிய நட்சத்திர ஒளியையும் அமைத்தே அதை வணங்கி வருகிறார்கள், மற்றும் பல மதத்தினரும பலவித மாக ஒளி வணக்கம் செய்து வருகிறார்கள்.

நவீன விஞ்ஞான முறைப்படியும் இந்த உலகம் பூராவும் உள்ள சகல இயக்கங்களுக்கும் அடிப்படையானது எலக்ட்ரான், நியூட்ரான், புரோட்டான், என்னும் மின் சக்தி அணுக்களே யாகும் இந்த உயிர்ச் சக்தி மின் அணுக்கள் இல்லாவிட்டால் உலகில் எதுவுமே நடைபெறாது. யாவும் அழியும் இப்படிப்பட்ட, உலகையே இயக்கும் மின் சக்தி உயிரலைகள், நம் இதயத்திலும் இருந்து கொண்டு மிகமிகப் பிரம்மாண்டமான சக்தியாக விளங்குகிறது. என்பதையும் இந்தத்தீவளர்த்தல் மூலம் ஒவ்வொருவர் இதயத்திலும் நிலை நாட்டப்படுகிறது.

அதனால் இந்தத் தீவளர்க்கும் முறை, மூட நம்பிக்கை யானதோ வீணானதோ. அல்லவே அல்ல.

## 50 இறப்பு இல்லாத கடவுள் ?

கேள்வி: ' கடவுள் இறப்பு இல்லாதவர்'' என்று நமது வேத, சாஸ்த்திரங்கள் கூறுகின்றன, ஒருவர் மரணம இல்லாமல் எப்படி உயிர் வாழமுடியும்? ''விஞ்ஞான முறை யில் நிரூபித்து'' விளக்கிச் சொல்ல வேண்டும்

பதில்: ''மரணமானது மனிதனுக்கு அவசியமாக நேரிட வேண்டிய ஒரு காரியம் அல்ல. இதைக் கூடியவரை

ஒத்திவைக்கலாம்" என்று உலக விஞ்ஞானிகள் இப்போது உணர்ந்து கொண்டு அதற்கான ஆராய்ச்சிகளைச் செய்து வருகிறுர்கள்

சுகாதார முறைகளையும் நோய்த் தடுப்பு முறைகளையும் நாம் இப்போது கையாள்வதாலும், நவீன விஞ்ஞான முறைச் சிகித்ஸைகளாலும் உலகெங்கிலும், மனிதரின் மரண விகிதர் குறைந்துள்ளது. சராசரி ஆயுள் அளவும் அதிகரித்திருக்கிறது. இதை நாம் நேரில் கண் கூடாகப் பார்க்கிறோம்.

நமது உடலிலுள்ள சில பாகங்கள் கெட்டுப் போவதாலும் மரணம் உண்டாகிறது அதனுல் கெட்டுப்போன பாகங்களை எடுத்து விட்டு அதற்குப் பதிலாகப் பிளாஸ்டிக் உருப்புக்களையும், மற்றவர்களுடைய உடலின பாகங்களையும் பொருத்தி. நன்கு இயங்கச்செய்யும் முறைகளையும் பின்பற்றி நமது ஆயுளை நீடிக்கும் முறைகளைக் கையாண்டு வெற்றி பெறுகிறுர்கள்

அமெரிக்காவிலும், ரஷ்யாவிலும் மற்றும் எல்லா மேல் நாடுகளிலும் Long Life Society, என்னும் ஆயுள் நீடிப்பு, சங்கங்கள் பல ஏற்படுத்தி. மனிதரின் ஆயுளை, மேலும் பல ஆண்டுகளுக்கு நீடிக்கச் செய்யும் வழி முறைகளையும், ஆராய்ச்சிகளையும் செய்து வருகிறுர்கள்

விஞ்ஞானததின் மூலம் மனிதன் இயற்கையை வென்று பல சாதனைகள் புரிந்திருப்பது போல்.

மெய்ஞ்ஞானத்தின் மூலம் மரணத்தையும் வென்று ஆயுளை நீடித்துப் பல ஆயிரம் வருஷங்கள் உயிர் வாழ முடியும்

ஆனலும இதற்குச் செயற்கை. முறைகளைவிட "இயற்கை முறைகளே சரியான பூரணமான பலனளித்து வெற்றி தரக் கூடியவை"

அவரவர் மதக்கோட்பாடுகளின்படி அவரவர் நம்பும் கடவுளை எப்போதும் தியானிப்பதால், சூரியனிடமிருந்து வரும் ரேடியோ சக்தி மின் அலைகள் நமது மயிர்க்கால் துவாரங்கள் மூலமாக உடலின் உள்ளே சென்று தலையின் மேல் உச்சியில் உள்ள சஹஸ்ரார நரம்புகளில் பதிவாகி ஏராளமான சக்தி சேமிக்கப்படுகிறது.

நமது விந்து அணுக்கள் மூலம், நெற்றியிலுள்ள முன் இணைப்பைத் திறந்ததும் அதன் மூலம், ஏராளமான மின் சக்தி உடல் பூராவும் உள்ள எழுபத்தி இரண்டாயிரம் நரம்புகளுக்கும் பாய்ந்து, பிரம்மாண்டமான சக்தியைப் பெறுகின்றன

இதனால் நமது உடலிலுள்ள நரம்புகளும், மற்ற பாகங்களும், பல நூறு ஆண்டுகள் செயல் புரிந்தாலும் கொஞ்சமும் சோர்வும் தளர்ச்சியும் அடையாமலும், எந்த உறுப்பும் எவ்விதக் கெடுதலும் உண்டாகாமலும் தடுக்கப் பட்டுப் பல ஆயிரம் வருஷங்கள் நீடித்து மரணமின்றி செயலாற்றும் வலிமையைப் பெறுகின்றன.

இந்த முறைப்படியே நமது இந்தியாவில் முன் காலத்தில், பல ரிஷிகள், முனிவர்கள், யோகிகள் பல ஆயிரம் ஆண்டுகள் உயிருடன் வாழ்ந்திருக்கிறார்கள்,

சமீபகாலத்தில் வட இந்தியாவில் உள்ள உஜ்ஜயினி நகரத்தில் விக்கிரமாதித்தன் என்னும் அரசன் அவருடைய மந்திரி பட்டியுடன் நாடாறு மாதம, காடாறு மாதம் விதம் இரண்டாயிரம் ஆண்டுகள் வாழ்ந்துள்ள வரலாறுகள் இன்றும் இருக்கின்றன.

தமிழ் நாட்டில் தஞ்சை ஜில்லாவில் திருவாவடுதுறை என்னும ஊரில், திருமூலர் என்னும் முனிவர் மூவாயிரம் வருஷங்கள் உயிருடனும், உடலுடனும் வாழ்ந்து, ஆண்டுக்கு ஒரு கவி விதம் மூவாயிரம் கவிகள் இயற்றித்

'திருமந்திரம்' என்னும் காவிய நூலை அமைத்துள்ள வரலாறுகள் இன்றும் இருக்கின்றன. இந்தப் புத்தகமும் இன்றும நம்மிடம் இருக்கிறது

ரஷ்யாவிலும், எகிப்து தேசத்தில் உள்ள பிரமிட் என்னும் குளறுகளிலும், பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இறந்தவர்களின் உடல்களை-பிணங்களை இன்றும் கெடாமல் அப்படியே ஆல்கஹால் என்னும் திரவங்களிலும் மற்றும் பல ரஸாயனத் தைலங்களிலும் போட்டு வைத்திருக்கிறார்கள் இவைகளை இன்றும் நாம் நேரில் காணலாம்.

இதுபோல், 'இரண்டு மூன்று நாளில் அழுகிக் கெட்டு விடக்கூடிய பிணம், பல ஆயிரம் வருஷங்கள் கெடாமல் இருக்க - விஞ்ஞான வழிமுறைகள் இருப்பதுபோலவே, "உயிருள்ள நமது உடலும் பல ஆயிரம் வருஷங்கள் நீடித்து இயங்குவதற்கான மெய்ஞ்ஞான வழிமுறைகள் உள்ளன".

இநத வழிமுறைகளுக்கு 'காயகல்பப் பயிற்சி முறை' என்று தெய்விக மதவேத தததுவ சாஸ்திரங்கள் கூறுகின்றன.

" இந்த முறையிலேயே தமது சஹஸ்ரார நரம்புகளை இயக்கி, நமது கடவுள் இறப்பு இல்லாமல் சுமார் அறுநூத்தி முப்பது கோடி ஆண்டுகளாக உயிருடனும் உடலுடனும் வாழ்ந்துகொண்டு, இந்தப் பூமி, சூரியன, சந்திரன, மற்ற கிரஹங்கள், கடல், காற்று, யாவற்றையும், 'ரேடியோ அலைகள் மூலமாகவே' இயக்கிக்கொண்டிருக்கிறார். இன்னும் பல ஆயிரம் கோடி ஆண்டுகள் இவ்விதம் யாவற்றையும இயக்கிககொண்டிருப்பார் அதனலேயே நமது கடவுள் இறப்பு இல்லாதவர் ஆவார்.

## 51 சிருஷ்டி தத்துவம்

கேள்வி: சிருஷ்டிக்கும் சக்தி கடவுளிடம் மட்டும் தான் உண்டா? மனிதரிடம் இல்லையா?

பதில்: "கடவுளிடமிருந்தே நாமும் வம்ச பரம்பரையாகத் தோன்றி வந்திருப்பதால், நமது கடவுளுக்கு உள்ள சக்திகள் யாவும் நம் ஒவ்வொருவருக்கும் உண்டு."

இயற்கையாகக் கடவுள் சிருஷ்டித்துள்ளதுபோலவே நாமும் மகத்தான சிருஷ்டிகளையும், சாதனைகளையும் செய்ய முடியும்.

இந்தத் தத்துவப்படியே, 'இரும்புக்கு உயிர் கொடுத்து' விமானமாகவும், கப்பலாகவும், மோட்டாராகவும், ரயிலாகவும் ஓடச் செய்திருக்கிறார்கள். மற்றும் பலபல விதமான இயந்திரங்களாகவும், கம்யூடர்களாகவும், டெலிபோன்களாகவும், டெலிவிஷன்களாகவும் செய்து பலவிதமான அற்புதமான சிருஷ்டிகளை சிருஷ்டித்திருக்கிறார்கள்.

'அரக்குக்கு உயிர்கொடுத்து' கிராமபோன் பிளேட்டாகப் பாடவும் பேசவும் செய்திருக்கிறார்கள்.

'அப்ரேக் தகட்டிற்கு உயிர் கொடுத்து' டேப் ரிக்கார்டராகவும், சினிமா பிலிமாகவும் சிருஷ்டித்து பேசவும், பாடவும், ஆடவும் செய்திருக்கிறார்கள்.

இயற்கையையும், வான மண்டலத்தையும், காற்று மண்டலத்தையும் வென்று சந்திரனுக்குச் சென்று வந்திருக்கிறார்கள்.

'இதெல்லாம் கடவுளைப்போல் ஜடப் பொருள்களுக்கும் உயிர் கொடுத்து இயங்கும்படி மனிதனுக்கும் சிருஷ்டிக்கும் சக்தி உண்டு என்பதை நிரூபிப்பதேயாகும்.'

நெல், கோதுமை, முதலிய தானிய வகைகளிலும் பலபல புதிய இனங்களையும், ரகங்களையும் சிருஷ்டித்திருக்கிறார்கள்.

அதனால், மனிதர் தமது கடவுளைத் தியானித்துக் கொண்டே மேலும் மேலும் முயற்சி செய்தால், மேலும் பலவிதமான அற்புத சாதனைகளைச் செய்யும் சக்தியும்,

பூமி, மற்றக் கிரஹங்கள்போன்ற பிரம்மாண்டமானவை களையும் இயக்கும் சக்தியும் ஒவ்வொரு மனிதருக்கும் உண்டு. இச்சக்தியை நம் ஒவ்வொருவர் உடலிலும், உயிரிலும் நமது கடவுள் படைத்து அமைத்திருக்கிருர்.

இதனுல்தான் 'மனிதர் அனைவரும் கடவுளின் குழந்தைகள், ஒரே சகோதரர்கள். கடவுளைப்போலவே நம்மிடமும் ஒவ்வொருவரிடமும் மகத்தான, பிரம்மாண்ட மான சக்தி இருக்கிறது.'' - என்று சகல மதங்களும் வேதங் களும் கூறுகின்றன.

இவைகளைச் சரியாக உணர்ந்து பயன்படுத்திக் கொள்ளவேண்டியது நம் ஒவ்வொருவருடைய கடமை யாகும்

## 52. சடங்குகள் எதற்காக?

கேள்வி: நாம் பலசமயங்களில் செய்யும் சடங்குகள் எதற்காக? அவைகளின் பயன் பிராமணருக்கு வருமானம் கொடுப்பதைவிட வேறு என்ன? நாம் தெவசம் செய்யும் போது நாம சொல்லுகிற மந்திரம் இறந்தவர்களை எப்படிப் போய் அடைகிறது? விஞ்ஞான முறையில் விளக்க வேண்டும்.

பதில்: ஒவ்வொரு சமயத்திலும் நாம் செய்யும் சடங்குகள் யாவும் விழாக்களேயாகும் 'பிறந்த விழா, பெயர் சூட்டு விழா, காதுகுத்து விழா, திருமண விழா, இறந்த நாள் விழா, இறந்த நாள் நினைவு விழா'' - என் றெல்லாம் பகுத்தறிவாளர்கள் ஏன் விழாக் கொண்டாடு கிருர்களோ அதேபோலவே, ஹிந்துக்கள் ஒவ்வொரு சமயத்திலும் சடங்குகள் என்ற பெயரில் விழாக்கள் கொண்டாடுகிருர்கள்,

இந்தச் சடங்குகளின்போது சொல்லப்படும் மந்திரங்கள யாவும், அந்தந்த நிகழ்ச்சிகளின மூலம் நமக்கு எல்லா நன்மைகளையும் அருளும்படி இறைவனுக்கு செய்துகொள்ளும பிரார்த்தனைகளேயாகும் - ரேடியோத் தொடர்புகளேயாகும்.

குழந்தை பிறந்ததும், பத்து தினங்களுக்குமேல் பதினறு தினங்களுக்குள், 'தீட்டுக் கழித்தல் அல்லது புண்ணியதானம்' என்னும் சடங்கைச் செய்கிருர்கள்.

தீட்டு என்பது தீமைகள் என்றும் பொருள்படும்.

அதனல், "எங்களுக்குப் பிறந்துள்ள இந்தக் குழந்தையானது முன் பிறவிகளில் பல தீமைகள் செய்திருந்த போதிலும், அவற்றை மன்னிக்கவேண்டும், தீர்க்க ஆயுளுடன் சகல செல்வங்களையும் பெற்று மிகமிக மேலான நிலையை அடையவேண்டும, இவனை அல்லது இவளை வருங்காலத்தில் எங்களுக்கும் உலகினருக்கும் சர்வ மங்களங்களும் உண்டாகும்படி பணி செய்வதற்காக அர்ப்பணம் செய்கிருேம அதனல் அதற்கு வேண்டிய மகத்தான கல்வியையும், ஞானத்தையும், சக்தியையும், வீரத்தையும் இக்குழந்தைக்கு அளித்து அருள் புரிய வேண்டும்"—என்பதே இந்தச் சடங்கினபோது சொல்லும் மந்திரங்களின் பொருள் ஆகும்.

அடுத்தபடியாகப் பெயர் சூட்டுவிழா, காதுகுத்து விழா முதலிய விழாக்கள் செய்கிருர்கள்.

ஏழு வயதுக்குமேல் "பிரம்ம உபதேசம், பூணூல் தரித்தல்" என்ற விழாக்களைச் செய்கிருர்கள்.

"பிரம்ம உபதேசம் என்ருல் அவரவர் கடவுளை எப்போதும் தியானித்துக் கொண்டிருப்பதற்காக அவரது நாமத்தைத் தெரிவித்தல்" – என்று பொருள்.

நமது சர்க்காரில் போலீஸ்காரருக்குப் பிரத்தியேகமான உடையையும் தலைப்பாகையையும் கொடுத்திருக்கிருர்கள் இந்த உடையை அவர்கள் போட்டுக் கொண்டால்தான் போலீஸ்காரர் என்று தெரியும. அதுபோல் கோர்ட்டுகளிலும், ஆபீஸ்களிலும் உள்ள பியூன்களுக்குச் சுமார் ஐந்து அங்குல அகலமுள்ள சிகப்புப் பட்டைத் துணியில் பூணூல்போல் அணியச்

செய்திருக்கிருர்கள். இதை அவர்கள் அணியாவிட்டால் அவர்கள் பியூன்கள் என்று யாருக்கும் தெரியாது. கோர்ட்டுகளில் வக்கீல்கள் கருப்புக் கோட்டும் கவுனும் அணியாவிட்டால், அவர்கள் வக்கீல்கள் என்று யாருக்கும் தெரியாது.

அதுபோல் வேதியர் என்ருல் – வேதம் ஓதுபவர் என்று பொருள் இதைக் காட்டும் சின்னமாகவே பூணூல் அணியப்படுகிறது. "வேத சாஸ்திரங்களையும் அவற்றின் பொருளையும் உலகினருக்குத் தெரிவித்து அனைவரும் நல்வாழ்வு வாழச் செய்ய அருள் புரியவேண்டும்" என்பதே இந்தச் சடங்குகளின்போது சொல்லப்படும் மந்திரங்களின் பொருள் ஆகும்.

இதேபோலவே முஸ்லிம்களும், தமது குழந்தைகளுக்கு ஏழு வயதிற்குமேல் 'மார்க்கப் பிரவேசம்' என்ற சடங்கைச் செய்து அவர்களது வேதமந்திரங்களைச் சொல்லிக் கொடுக்கிருர்கள்.

இதேபோலவே மற்றும் பல பல மதத்தினரும் அவரவர் வேத மந்திரங்களை உபதேசிக்கும் சடங்குகளைப் பல, பல முறைகளில் செய்கின்றனர். அதனுல், இவையெல்லாம் மூடநம்பிக்கைகளோ முட்டாள்தனமானதோ அல்ல

பின்பு திருமணவிழா, "வள்ளுவரும் – வாசுகியும் போலும் ஒவ்வொருவரும் உத்தமர்களாய் சகல செல்வங்களையும் மங்களங்களையும் பெற்று நீடூழி காலம நல்வாழ்வு வாழவேண்டும்" எனபதே இந்தச் சடங்கின்போது சொல்லப்படும மந்திரங்களின் பொருள் ஆகும்.

கடைசியாக மரண விழா:- "இதுவரை எந்த விதமான தவறுகளும், குற்றங்களும் பாவங்களும் செய்திருந்தாலும் அவற்றையெலலாம் இறைவன் மன்னித்து, ஆத்மா சாந்தியும நற்கதியும அடைய அருள்புரிய வேண்டும்" என்பதே இச்சடங்குகளின்போது சொல்லப்படும் மந்திரங்களின் பொருள் ஆகும்.

தெவசம் அல்லது திதி, அல்லது சிரார்த்தம் செய்வது என்பது. 'அண்ணா இறந்த நாள் – நினைவு விழா' 'பெரியார் இறந்த நாள் – நினைவு விழா' என்று பகுத்தறிவாளர் நினைவு நாள் விழாக் கொண்டாடுவதைப் போன்றதேயாகும்.

நமது தாய் தந்தையர் படாத பாடுபட்டு நம்மைப் பெற்றெடுத்து வளர்த்து ஆளாக்கியதற்கு நன்றி தெரிவிக்கும் நினைவு விழாவே தெவசமாகும்

சிரார்த்தத்தில் சொல்லப்படும் மந்திரங்கள் யாவும் ரேடியோ ஒலி அலைகளாகி நமது தாய் தந்தையர் ஆத்மாவிடம் சென்று அடைகின்றன இது விஞ்ஞான பூர்வமான நிச்சயமான - உறுதியான உண்மையாகும் - நிரூபணம் ஆகும்.

## 53. மனித வாழ்வின் நித்திய விதிகள் :

கேள்வி: மதக் கோட்பாடுகளையும் சடங்குகளையும் செய்யும்படி நம்மைக் கட்டாயப்படுத்துவது சரியா?

பதில்: மதக் கோட்பாடுகளையும், பழக்க வழக்கங்களையும் விடாமல் செய்யும்படி நம் வீடுகளில் உள்ள பெரியோர் கட்டாயப்படுத்துவது நமது நன்மைக்காகவே.

"உங்கள் கடையில் சாமான்கள் வாங்குபவர்கள் அதற்குரிய விலையைக் கொடுக்கவேண்டும் இல்லாவிட்டால் சாமான் கிடையாது" என்ற கட்டாயம் இருப்பதால்தான், உங்கள் கடையில் சாமான்கள் வாங்குபவர்கள் அதற்குப் பணம் தருகிறார்கள்.

"உங்கள் கடையில் சாமான்கள் வாங்கினால் அதற்குரிய விலையைக் கொடுக்கவேண்டும் என்ற கட்டாயமில்லை" என்று அறிவித்தால், உடனே அனைவரும் சாமான்களை வாங்கிப் போய்விடுவார்கள். பணம் தரமாட்டார்கள். ஓரிரண்டு மாதங்களிலேயே நீங்கள் ஓட்டாண்டி ஆகவேண்டியதுதான்.

இதேபோலவே "எந்தக் காரியமும் அதற்குரிய முறைப்படி செய்து தீரவேண்டும்" என்று கட்டாயம் இருப்பதால்தான் உலகில் சகல காரியங்களும் நிறைவேறுகின்றன-நடைபெறுகின்றன.

ஒவ்வொரு காரியமும் எப்படி எப்படிச் செய்ய வேண்டும் என்று சர்க்கார் விதிமுறைகள் உள்ளன இந்த விதிமுறைகள் இல்லாவிட்டால் ஒரு காரியமும் நடைபெறாது.

அதேபோலவே, சர்க்கார்கள் யாவற்றிற்கும் மேலான நமது தெய்வ சர்க்காரின் விதிமுறைகளே நமது மதக் கோட்பாடுகள் ஆகும் இந்த மதக் கோட்பாடுகளின்படி நடந்தால் நமது ஆத்மாவாகிய உயிர்ச் சக்தியின் அலைகள் மிகமிகப் பிரம்மாண்டமான சக்தியுடையதாகி நமது மரணத்திற்குப் பின்னும் வானத்தில் என்றென்றும் நட்சத்திரமாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கும்

இவைகளினபடி நடக்காவிட்டால் நமது வாழ்வு பல பல துன்பங்களுக்கும் இடமாகி வீணாகி அழியும்,

"நாம் காலையில் எழுந்தது முதல். இரவு படுக்கப் போகும்வரை ஒவ்வொரு காரியம் செய்யும்போதும், என்னென்ன மந்திரங்களைச் சொல்லிக்கொண்டே செய்ய வேண்டும்" என்று சகல மதங்களிலும் விதிமுறைகள் உள்ளன, அவற்றின் சுருக்கததையும், பொருளையும் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது

(1) காலையில் எழுந்ததும் படுக்கையில் அமர்ந்த படியே, யார் முகத்திலும் முழிக்காமல் – "இன்று நான செய்ய வேண்டிய கடமைகள் யாவற்றையும் எனது இறைவனைத் தியானித்துக்கொண்டே எவ்விதக் குறைவும் இன்றி சிறப்பாகச் செய்து முடிப்பேன். இன்று நான் யாருக்கும் எவ்விதத் தீங்கும் உண்டாகும்படி எந்தக் காரியமும் செய்யமாட்டேன். முடிந்தவரை மற்றவர்களுக்கு

நன்மை உண்டாகும்படியான காரியங்களேயே செய்வேன்'' என்று மூன்று தரத்துக்குக் குறையாமல் அதற்குமேல் இயன்ற அளவு அதிகமான அளவு மனதிற்குள்ளேயே சொல்லிக்கொண்டு உறுதி பெறவேண்டும்.

(2) மலஜலம் கழிக்கும்போதும், பல் துலக்கும் போதும், குளிக்கும்போதும் – "இன்று என் உடலில் உள்ள இந்த அழுக்குகளேப் போக்குவதுபோல், என் உள்ளத்திலுள்ள கெட்ட, அநீதியான, தீமையான, கொடுமையான, தகாத தவருன எண்ணங்களைப் போக்கி என் இதயத்தை எனது இறைவனின் கோவிலாக்குவேன். இந்தக் கோவிலில் எப்போதும் ஒளியாகவும் சக்தியாகவும் ஆத்மாவாகவும் உள்ள எனது இறைவனே எப்போதும் தியானித்துக்கொண்டே சகல காரியங்களையும் கடமைகளையும், தொழிலையும் செய்வேன்'' – என்று மனதிற்குள் சொல்லிக்கொண்டே இந்தக் கடமைகளைச் செய்ய வேண்டும்.

(3) காலையிலும், பகலிலும், இரவிலும் உணவு கொள்ளும்போதெல்லாம், காபி, தண்ணீர், சிற்றுண்டிகள், சாப்பிடும்போதெல்லாம் – " எனது இறைவனின் கருணையால் கிடைத்த இந்த உணவு முற்றிலும், எனது இதயக் கோவிலில் குடிகொண்டுள்ள ஆத்மாவாகிய, ஒளியாகிய, சக்தியாகிய எனது இறைவனுக்கே படைக்கும் அமுதமாக, இந்த சக்திகளேயும், உடலேயும், அறிவையும், ஞானத்தையும், வீரத்தையும் வளர்த்து மகத்தான சாதனைகள் புரிய உதவவேண்டும்'' என்று சொல்லிக் கொண்டே-நினைத்துக்கொண்டே சாப்பிட வேண்டும்.

(4) உணவு முடிந்து மாணவ, மாணவியர் பள்ளிக்குச் செல்லும்போதும்.படிக்கும்போதும், "எனது புனிதமான நல்வாழ்வு சிறந்தோங்கவே நான் கல்வி கற்கிறேன். அதனுல், நான கற்கும கல்வியைச் சிறப்பாக கற்று, கற்றபடி நடந்து, உலகிலேயே சிறந்த ஞானமும்,

அறிவும் சக்தியும் வீரமும் வெற்றியும் பெறுவேன். மற்ற யாருக்கும் எவ்விதத் தீங்கும் செய்ய என் கல்வியையும் அறிவையும் ஒருபோதும் பயன்படுத்த மாட்டேன்'' என்று நினைத்துக்கொண்டே அவரவர் கல்வியைக் கற்று தேர்ச்சி பெறவேண்டும்.

(5) ''இவ்வுலகில் இப்போது சுமார் நானூத்தி ஐம்பது கோடி சகோதரர்கள் உள்ளனர். இவர்களில் ஒருவர் பாக்கியில்லாமல் அனைவரும் எவ்விதக் குறைவும். துன்பமும், இல்லாத பேரின்பம் நிறைந்த மங்கள் நல் வாழ்வைப் பெற்று நீடுழி காலம் நித்திய வாழ்வு வாழ வேண்டும்'' எனபதே நமது கடவுளின் விருப்பமும் பணியும் ஆகும்

இந்தப் பிரம்மாண்டமான பணியைக் கடவுள் என்பவர் ஒருவர் மட்டும் செய்து முடிக்க முடியாது. அதனுல் இந்த நானூத்தி ஐம்பது கோடிப் பேர்களும், அவரவர் இயல்புக் கேற்றவாறு நானூத்தி ஐம்பது கோடி விதமான பணிகளைச் செய்யவேண்டும். இப்படிச் செய்தால்தான் அனைவரும் பேரினபம் நிறைந்த மங்கள வாழ்வு பெறமுடியும், அதனுல்தான் நம் ஒவ்வொரு வருக்கும் அறிவும, ஆற்றலும, திறமையும' சக்தியும், நம் உள்ளத்திலும, உடலிலும் நமது கடவுள் அமைத் திருக்கிறுர்.

அதனுல் உணவு முடிந்ததும், அவரவர்க்கு ஏற்பட்டுள்ள - அமைந்துள்ள தொழில், வேலை, உத்தி யோகக் கடமைகளைச் செய்யப் போகவேண்டும். அவரவர் கடமைகளைச் செய்யும்போதும், உலகிலுள்ள எனது சகோதரர்கள் நானூத்தி ஐம்பது கோடிப் பேர்களும் பேரின்பம் நிறைந்த மங்கள வாழ்வு பெறவே, எனது கடமைகளைச் செய்கிறேன் அதனுல் யாருக்கும் எவ்விதத் தீமையும் உண்டாகாதபடி என் கடமைகளைச் சிறப்பாகச் செவ்வையாகச் செய்து முடிப்பேன். எனது இந்தப் பணி

கடவுளின் பணியாகவே கடவுளுக்கு அர்ப்பணமாக வேண்டும்'' என்று மனதில் நினைத்துக்கொண்டே செய்ய வேண்டும்.

(6) அன்றாடம் செய்யவேண்டிய வேலைகளையும், கடமைகளையும் அன்றாடம் பாக்கியில்லாமல் செய்துமுடித்து விடவேண்டும். 'இன்று' செய்ய வேண்டிய வேலையை, 'நாளைக்குச் செய்யலாம்' என்று ஒத்திப்போடக்கூடாது. அப்படிச் செய்தால் சோம்பேறித்தனம் வளர்ந்து, 'காணிச் சோம்பல் கோடிக் கேடு' என்று பல தீமைகள் உண்டாகும்

(7) ஓய்வு நேரங்களையும். பொழுதுபோக்கு நேரங்களையும், நமது கடமையைச் செவ்வையாகச் செய்வதற்கு வேண்டிய 'அறிவு வளர்ச்சியும், சக்தி வளர்ச்சியும்' பெறவுமே பயன்படுத்த வேண்டும். சிற்றின்பங்களில் நமது அறிவையும், சக்தியையும், உடலையும், செல்வங்களையும் செலவிட்டு நமது மகத்தான புனித வாழ்வைப் பாழாக்கி கொள்ளக்கூடாது.

(8) கார், ரயில், முதலியவைகளில் பிரயாணம் செய்யும்போதும், பஸ் ஸ்டாப்புகள், பார்க்குகள் போன்றவைகளில் இருக்கும்போதும் நமது நேரத்தை வீணாக்காமல் அறிவு வளர்ச்சி நூல்களைப் படித்துக் கொண்டும், தியானம், ஜெபம், தெய்வ சிந்தனை முதலியவைகளில் ஈடுபட்டு நமது சக்தியை மிகமிகப் பிரமமாண்டமானதாக வளர்த்துக் கொண்டும் இருக்கவேண்டும்.

(9) இரவில் அவரவர் மனைவியுடன் உடலுறவு கொள்ளும்போது 'நமது நாட்டிற்கும், உலகிற்கும சிறந்த பணி செய்யும்படி, இயேசுநாதர், முகம்மது நபி. புத்தர் சங்கரர், திருவள்ளுவர், திருமூலர், ராமக்ருஷ்ணர், விவேகானந்தர், நேரு. மகாத்மா காந்தி, பக்தமீரா, ஆண்டாள், காரைக்காலம்மையார் மற்றும பல ரிஷி பத்தினிகளைப்போன்ற வீரப் புதல்வர்களையும், புதல்வி

களையும், ஞானிகளையும், பக்தர்களையும், யோகிகளையும் பெற்றெடுத்துக் கடவுளுக்கு அர்ப்பணமாக கொடுப்பேன்' என்று மனதில் நினைத்துக்கொண்டே வேறு எண்ண மில்லாமல் இக்கடமையைச் செய்யவேண்டும்.

(10) அவரவர் தினமும் தூங்கப் போகும்போது படுக்கையில் அமர்ந்துகொண்டு மௌனமாகவும், அமைதி யாகவும் இருந்துகொண்டு – 'இன்று என் கடமைகளை யெல்லாம் குறைவின்றிச் சிறப்பாகச் செய்து முடித்து விட்டேன் எவ்விதத் தவறும், தீமையும், அநீதியும் செய்யவில்லை. இதுபோல் என்றென்றும் என் கடமைகளை சிறப்பாகச் செய்து பேரின்பப் பெருவாழ்வைப்பெற எனது இறைவன் அருள் புரியவேண்டும்' என்று மூன்று தரத் துக்கு குறையாமல் இயன்றவரை அதிகமான அளவு நினைத்து உறுதி செய்துகொண்டு அதன்பின் தூங்க வேண்டும்.

(11) ஒவ்வொரு பெண்ணும் ஆணும் எந்தக் காரியம் செய்தாலும் – 'எனது வீடு ஒரு கோவில், எனது வீட்டில் இருப்பவர்கள் யாவரும் இறைவனின் குழந்தைகள். அதனால் அவர்களுக்கு உணவு படைப்பது, சமைப்பது, மற்றும் சகல காரியங்களும் செய்வது யாவும் எனது இறைவனுக்கு நிவேதனமாகவும், அர்ப்பணமாகவும் வேண்டும்' – என்று மனதில் நினைத்துக்கொண்டே வேறு எண்ணமில்லாமல் – செய்யவேண்டும்.

(12) 'நமது தாய், தந்தை, மனைவி, மக்கள் முதலிய வர்களிடம் அன்பு செய்வதுபோலவே, நமது கடவுளிடமும் அன்பு செய்யப் பயிற்சி பெறவேண்டும்.' – என்பதற் காகவே, நமது குடும்பக் கோவிலுக்குப் பல பணிகள் செய்யும் கடமையும், உறவினர்களிடம் ஒரு அதீதமான நம்மையறியாத – அன்பும், பாசமும் கடவுளால் நம் ஒவ்வொருவர் உள்ளத்திலும், உடலிலும், உயிரிலும் அமைக்கப்பட்டிருக்கிறது.

“அதனால்தான், நம் குழந்தைகளுக்கு ராமன், கிருஷ்ணன், பரமசிவன், சுப்பிரமணியன், கணபதி, வெங்கடாஜலபதி, முருகன், ஆறுமுகம், நாராயணன், லெட்சுமி, சரஸ்வதி, கௌரி, பார்வதி, உமாதேவி, விசாலாட்சி, காமாட்சி, மீனாட்சி என்று பலபல தெய்வப் பெயர்களை வைத்து, அவர்களுடன் உறவாடும்போது நமது கடவுளிடம், அன்னை தேவியிடம் உறவாடுவது போலவே பாவித்துப் பயிற்சி பெறவேண்டும்” என்னும் வழக்கம இருந்து வருகிறது.

இந்தப் பயிற்சியை தினமும் ஒவ்வொருவரும் ஒரு நிமிஷமும் தவறுமல் தமது ‘குடும்பக் கோவிலில்’ பெற்று நிறைவேற்ற வேண்டும் இது மிகமிக அவசியம் இதற்காகவே நாம் பிறந்து வாழ்கிறோம்.

## 54. மந்திர சக்தி

**கேள்வி:** மந்திர சக்தியால் பலர் பல அற்புதமான காரியங்களைச் செய்வதாகச் சொல்லுகிறார்களே! இது எப்படி உண்மை? விஞ்ஞான முறையில் விளக்கிச் சொல்லவேண்டும்

**பதில்:** நமது உடல் ஒரு ரேடியோப் பெட்டி போலவே அமைக்கப்பட்டிருக்கிறது. ரேடியோவில் ஒலி அலைகளை இழுத்துக் கிரஹிப்பதற்கு எப்படி ‘ஏரியல் கம்பி’ அமைககப்பட்டிருக்கிறதோ, அதேபோலவே சூரியனிடமிருந்து வருகிற உயிர்ச் சக்தி மின் அலைகளை இழுத்து உடலில் பாய்ச்சுவதற்கு ‘ஏரியல்களாக நமது தலையிலும் உடலிலும் மயிர்கள்’ அமைக்கப்பட்டிருக்கின்றன.

ஒலி அலைகளை வெளியிடுவதற்கு ரேடியோப் பெட்டியில் எப்படி ஏராளமான ஒயர்கள் இருக்கிறதோ அதேபோலவே நமது உடல் செயலாற்றுவதற்கு நமது உடலில் எழுபத்தி இரண்டாயிரம் நரம்புகள் உள்ளன.

நமது ஏரியல்களாகிய மயிர்க்கால் துவாரங்கள் மூலமாக வரும் சூரிய உஷ்ண சக்தி மின் அலைகள் நமது உடலில் பல பாகங்களிலும் உள்ள பலவித நரம்புகள் மூலமாகவும் பாய்ந்து பரவி பலவிதமான செயல்கள் புரிந்து நமது உடலையும் வாழ்வையும் இயக்குகிறது.

ரேடியோப் பெட்டி இயங்கிக் கொண்டிருக்கும்போது. அதன் ஒயர்களைத் தொட்டால் அதிலுள்ள மின் சக்தி அலைகள் நமது உடலில் எப்படி ஷாக் அடிககிறதோ அதேபோலவே, நமது உடலிலுள்ள மின் சக்தி அலைகள் தியானத்தின் மூலம் மிகமிகப் பிரம்மாண்டமான சக்தியுடையதாக வளர்ந்தபின். நாமும் மற்றவரைத் தொடுவது, வாயினால் ஊதுவது, வாய்மொழியாகக் கட்டளையிடுவது. முதலிய முறைகள் மூலம் நமது சக்தியை மற்றவருக்கு பாய்ச்சலாம.

இதையே 'மெஸ்மெரிஸ முறை' என்று மேல்நாட்டு ஆராய்ச்சியாளர்கள் கூறியிருக்கிறார்கள்.

நமது முனிவர்களும் ரிஷிகள், யோகிகளும் இச்சக்தயை 'மநதிர சக்தி' எனறு கூறியிருக்கின்றனர். இந்த மந்திர சகதியாலேயே இறந்தவர்களைத தொட்டுத் தமது சக்தியைப் பாய்ச்சி, உயிர் உண்டாக்கியிருக்கின்றனர். மற்றும் பலபல அற்புதமான மகததான சாதனைகள் புரிந்துள்ளனர்.

நாமும் ஒவ்வொருவரும் முயற்சி செய்து, நமது இறைவனை எப்போதும் தியானிப்பதன் மூலம், இப்படிப்பட்ட பிரம்மாண்டமான சக்திகளைப் பெற்று மகத்தான சாதனைகள் புரிவது மிகமிக அவசியம்.

## 55. தியானத்தில் பரீட்சை

கேள்வி:- நாம் தியானம செய்வதில் முன்னேற்றமடைந்திருக்கிறோம் என்பதற்கு என்ன பரீட்சை அல்லது சோதனை?

பதில் :- 'கடவுளது அன்புக்காகவே நான் வாழ்கிறேன். இறைவனின் நினைவு இல்லாமல் ஒரு நிமிஷம் கூட என்னால் இருக்க முடியவில்லை—இறைவனின் தியானமின்றி எந்தக் காரியம் செய்தாலும் அது துக்ககரமாகவும், துன்பமாகவும், தோல்வியாகவும், கஷ்டமாகவும், நஷ்டமாகவுமே இருக்கிறது' என்ற நிலை நமக்கு எப்போது உண்டாகிறதோ அப்போதே நாம் தியானத்தில் ஓரளவு முன்னேற்றமடைந்திருக்கிறோம் என்று சொல்ல முடியும். நமது மகத்தான சாதனைகளையும் நமது முன்னேற்றத்திற்குள்ள பரீட்சையாகக் கொள்ளவேண்டும்,

## 56 பக்தர்களின் கஷ்டம்

கேள்வி :- உண்மையான பக்தி செய்பவருக்கு அதிகமான கஷ்டங்களும், துன்பங்களும் வருகின்றனவே இது எதற்காக?

பதில் :- 'இறைவனின் பணியையே செய்ய வேண்டும்' என்ற நோக்கமில்லாமல், சக்தியைப் பெறவும், கடவுளின் பெயரால் ஏதாவது ஒரு பேராசையைப் பூர்த்தி செய்துகொள்ள முயற்சிக்கும்போதும் சுயநல சுகபோகங்களைத் திருப்தி செய்துகொள்ள முயற்சிக்கும்போதும்தான் அதிகமான கஷ்டங்களும் துன்பங்களும் வருகின்றன.

"இறைவனின் பணியைச் செய்து அவனை அடைய வேண்டும்" என்ற உண்மையான உழைப்புள்ள பக்தர்களுக்கு வரும் கஷ்டங்கள் யாவும் சோதனைகளேயாகும். சோதனையில் தேறி மேலும் முன்னேற்றமடைய ஒரு சந்தர்ப்பமாகவே அவை இருக்கும். அதனால், உண்மையான பக்தர்கள் எவ்வளவு கஷ்டங்களும் துன்பங்களும் வரும்போதும் கொஞ்சமும் அஞ்சமாட்டார்கள். அவைகளை வென்று வாகை சூடுவார்கள்

## 57. குரங்குக் குட்டியும் பூனைக் குட்டியும்

கேள்வி : நமது நம்பிக்கையும் முயற்சியும் சரியானதுதானா என்பதற்குச் சோதனை என்ன ?

பதில்: குரங்குக் குட்டியானது தூக்கிச் செல்லப் படுவதற்காகத் தாயைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால், அதன்பிடி சற்று நழுவினால் அது கீழே விழுவது நிச்சயம்.

அதுபோல் உனது கடவுளின் மீது உனக்குள்ள நம்பிக்கை பூரணமானதாக இல்லாவிட்டால் உனது சொந்த முயற்சியிலேயே சகல காரியங்களும் செய்ய வேண்டியிருக்கும். கடவுளின் ஆதரவு இருக்காது

பூனைக்குட்டியானது தாயைப் பிடித்துக்கொள்வதில்லை. தாயே அதைப் பிடித்துக்கொண்டு தூக்கிச் செல்வதால், குட்டிக்கு எவ்விதப் பயமும் பொறுப்பும் இல்லை. தாய் தன்னைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ள விட்டு விட்டு, 'மியா, மியா' என்று கத்த வேண்டியதைத் தவிர அது வேறொன்றும் செய்ய வேண்டியதில்லை

அதுபோல், நீ பூனைக்குட்டிபோல் உனது கடவுளின் மீது முழு நம்பிக்கை உடையவனாக இருந்தால், அவருடைய அருளால் தானாகவே உனது முயற்சி யில்லாமலேயே சகல காரியங்களும் நிறைவேறும், பூனையைப்போல் உனது கடவுளும் அன்னையும் உன்னைக் கெட்டியாகப் பிடித்துககொண்டு உனக்கு வேண்டிய யாவற்றையும் செய்ய அருள் புரிவார்கள்.

மலர்கள் மலர்ந்ததும் தேனீக்கள் அவற்றை நாடி ஓடி வருகின்றன. அதுபோல், நீ உண்மையான நம்பிக்கையும் முயற்சியும் உடையவனாய் இருந்தால், உனது உள்ளம் மலர்ந்து இருந்தால், தேனீக்களைப்போல் கடவுளும் அன்னையும் ஓடி வந்து உனக்கு அருள் புரிவார்கள். வேண்டிய யாவற்றையும செய்வார்கள்

## 68. சரணமும் பயிற்சியும்

கேள்வி: நாம் பூனைக்குட்டிபோல் நமது இறைவனைச் சரணடைந்துவிட்டால் போதுமா? வேறு எந்தப் பயிற்சியும் செய்ய வேண்டாமா?

பதில்: சரணமடைவது மட்டும் போதாது. இது ஒரு ஆரம்பநிலை. அதன்பின தினமும் உனது சரணததை மேலும் மேலும் அதிகப்படுத்திக் கொண்டே இருக்க வேண்டும். அதனுல் அதற்குப் பயிற்சி தேவை

தெய்வ சக்தி, ஆத்மீக சக்தி என்பது எல்லை யில்லாதது மேலும் மேலும் விரிவடைந்து கொண்டே இருப்பது, அதனுல், நாம் நமது கடவுளை அடையச் செய்யும் முயற்சியையும் பயிற்சியையும் நமது கடைசி மூச்சு உள்ளவரை செய்துகொண்டே இருக்கவேண்டும்.

நமது முயற்சியிலும், பயிற்சியிலும், ஆயிரம் தடவை தோல்வியுற்றுலும்கூட அப்போதும் நிறுத்தாமல் மீண்டும் மீண்டும் முயற்சி செய்துகொணடே இருக்கவேண்டும் நமது வாழ்வு முழுவதுமே தியானமாகவும பூஜையாகவும் பயிற்சியாகவும் செய்துகொண்டே இருக்கவேண்டும்.

## 59. முயற்சி உனது. பயனளிப்பது தெய்வ சக்தி.

கேள்வி: நாம் உண்மையாக முயற்சி செய்யும் காரியங்கள் பல நிறைவேறுவதில்லை. இதற்கு என்ன காரணம்?

பதில்: எப்போதும் நன்மையான காரியங்கள் செய்ய முயற்சிப்பது மட்டுமே நமது கடமை. அதற்குப் பயன் உண்டாவதும் உண்டாகாமல் இருப்பதும் நமது கடவுளின் சித்தத்தையும், விருப்பத்தையும் பொருத்தது.

மது அருந்துபவன், "மது அருந்துவது தனக்கு நன்மையானது" என நினைக்கிறுன ஆனுல், பெரும் பாலோர் அது தவறு என நினைக்கின்றனர்.

அதுபோல், நன்மை என்று நாம் முயற்சி செய்யும் காரியங்கள் நிறைவேறவில்லை என்றுல், அதில் ஏதோ

குறையும், தவறும் இருக்கிறது என்று பொருள்கொள்ள வேண்டும்.

நாம் முயற்சி செய்யும் காரியங்கள் நிறைவேறவில்லை என்றால், அதைவிடப் பெரிய நன்மை உண்டாவதற்கே நமது கடவுளின் திருவுள்ளம் இவ்வாறு அருள் புரிந்திருக்கிறத என்று கொள்ள வேண்டும்.

எல்லாம் நன்மைக்கே என்று நம்பவேண்டும்

தோல்வியே வெற்றிக்கு அஸ்திவாரம்

நமது கடமையைச் செய்ய மட்டுமே நமக்கு உரிமையுண்டு. பயனளிப்பது தெய்வ சக்தியே. இந்தப் பயன் நமக்கு விரோதமாக இருந்தாலும்கூட அதை ஒப்புக்கொள்ளவேண்டும். இதுவே பக்தி.

## 60. கடவுள் என்பவர் யார்?

கேள்வி: கோவில்களில் உள்ள கல் சிலைகள்தான் கடவுளா? கடவுள் என்பவர் யார்?

பதில்: இந்தப் பிரம்மாண்டமான பூமியை ஒரு நிமிஷத்திற்குச் சுமார் நாற்பதாயிரம் கிலோ மீட்டர்கள் வேகத்தில், அதன் அயன கதியில் அணுவளவும் பிசகாது சற்றும் மாறாத, ஒரு நிமிஷமும் தவறாத சுமார் அறுநூற்றி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாக ரேடியோ அலைகள் மூலமாகவே இயக்கிச் சுழற்றிக் கொண்டிருப்பவர் யாரோ அவரே நமது கடவுள்.

இந்தப் பிரம்மாண்டமான பூமியின் மீதுள்ள நாமும், நமது பொருள்களும், மற்ற சகல வஸ்துக்களும் கீழே விழுந்துவிடாமல் இழுத்துப் பிடித்துக் கொள்வதற்காக, 'ஆகர்ஷண சக்தி' என்று விஞ்ஞானிகள் கண்டு பிடித்துள்ள பிரம்மாண்டமான சக்தியை ஆதிமுதலாக இந்தப் பூமியில் பதியவைத்து, அது பூமியிலிருந்து வெளியாகி

விடாமல் சுமார் அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாகக் காத்துக் கொண்டிருப்பவர் யாரோ அவரே நமது கடவுள்.

நீங்கள் காண்கிற பூமியைச் சுற்றியுள்ள பிரம்மாண்ட மான கடலையும் அதிலுள்ள அளவிட முடியாத நீரையும் பூமியுடன் சேர்த்து, அந்தரத்தில் ஒரு சொட்டு நீர்கூடக் கீழே சிந்தாமல், சுமார் அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாகச் சுழற்றி இயக்கிக் கொண்டிருப்பவர் யாரோ அவரே நமது கடவுள்.

நீங்கள் ஒரு நிமிஷம் மூச்சுவிடாவிட்டால், உடனே இறந்துவிடுவீர்கள், அதனால், இந்தப் பிரம்மாண்டமான பூமியின் மீதுள்ள உயிரினங்கள் யாவும் மூச்சு விடுவதற் காகப் பிரம்மாண்டமான காற்று மண்டலத்தை உண்டாக்கி, அதை ரேடியோ அலைகள் மூலமாகவே பூமியுடன் சேர்த்து அந்தரத்தில் சுழற்றிக்கொண்டும், பூமியைவிட்டு இந்தக் காற்று மண்டலம் எங்கும் ஓடி விடாமல் காத்துக்கொண்டும் சுமார் அறுநூத்த் இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாக இயக்கிக் கொண்டிருப்பவர் யாரோ அவரே நமது கடவுள்.

சூரியனின் உஷ்ண சக்தி மின் அலைகள் நம் உடலில் பாய்ந்து, நமது உயிராக இயங்கி, நாம் உயிர் வாழ வேண்டும் எனபதற்காக பிரம்மாண்டமான சூரியனைப் படைதது, அதை ரேடியோ அலைகள் மூலமாகவே' சுமார் அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாக இயக்கி, இந்தப் பிரம்மாண்டமான பூமிக்கும் மற்ற கிரகங் களுக்கும் ஒளிவீசச் செய்து கொண்டிருப்பவர் யாரோ அவரே நமது கடவுள்.

நாம் தினமும வான மண்டலத்தில் காண்கிற சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்ரன், சனி முதலிய பிரம்மாண்டமான கிரஹங்களையெல்லாம் அதன் அயன கதியில் அணுவளவும் பிசகாது-சற்றும் தவறாது ஒரு நிமிஷமும் மாருத, ரேடியோ அலைகள் மூலமாகவே

இயக்கிச் சுமார் அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாகச் சுழலவிட்டுக் கொண்டிருப்பவர் யாரோ அவரே நமது கடவுள்.

## 61. கடவுளின் செயல் என்ன?

கேள்வி: கடவுளின் செயல் என்ன? அவர் இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறார்?

பதில்: நாமும் மற்ற உயிரினங்களும் உயிர் வாழ்வதற்காக இந்தப் பிரம்மாண்டமான பூமியை, ஒரு நிமிஷத்திற்குச் சுமார் நாற்பதாயிரம் கிலோ மீட்டர்கள் வேகத்தில் அதன் அயன கதியில் அணுவளவும் பிசகாது சற்றும் மாருது ஒரு நிமிஷமும் தவருது சுழன்று செல்லும்படி சுமார் அறுநூத்தி இருபத்தி ஒன்பதுகோடி ஆண்டுகளாக ரேடியோ அலைகள் மூலமாகவே இயக்கிக் கொண்டிருக்கிறார்

அவர் இப்படி இயக்கிக் கொண்டிருக்காவிட்டால், இந்தப் பிரம்மாண்டமான பூமியானது தனது சுழற்சியில் இருந்து நின்று கீழே விழுந்து நொறுங்கி அழிந்து நாசமாகிவிடும்,

இன்னும் பல ஆயிரம் கோடி ஆண்டுகளுக்கு இந்தப் பிரம்மாண்டமான பூமியை இவ்விதம் இயக்கிக்கொண் டிருப்பார்.

மற்றும் முன் பக்கத்தில் கண்டபடி பூமியிலுள்ள ஆகர்ஷண சக்தி. கடல். காற்று, சூரியன், சந்திரன், மற்றக் கிரஹங்கள் யாவற்றையும் அதனதன் அயன கதியில் அணுவளவும பிசகாது ஒரு நிமிஷமும் ஓயாது சுழன்று செல்லும்படி ரேடியோ அலைகள் மூலமாகவே சுமார் அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாக இயக்கிக் கொண்டிருக்கிறார்,

இவ்விதம் அவர் இயக்கிக் கொண்டிராவிட்டால், பூமி சுழலாது. பூமியில் ஆகர்ஷண சக்தி இருக்காது, கடல் இருக்காது நாம் மூச்சுவிடக் காற்றும், காற்று மண்டலமும் இருக்காது. சூரியன் ஒளி வீசாது கிரஹங்கள் சுழலாது. மற்ற எதுவுமே நடைபெருது.

இவ்விதம் இன்னும் பல ஆயிரம் கோடி ஆண்டு களுக்கு இவைகளை இயக்கிக் கொண்டிருப்பார்.

இதுதான் நமது கடவுளின் வேலை. இவற்றை அறிந்து, பணிந்து போற்றிப் பயனடைவதே உன்னுடைய வேலை

## 62. கடவுளைப் படைத்தது யார்?

கேள்வி: உலகையும் பூமியையும், மற்றவைகளையும் கடவுள் படைத்திருக்கிருர் என்ருல், அந்தக் கடவுளைப் படைத்தது யார்?

பதில்: கணவன்-மனைவியின் விந்து அணுக்களில் இருந்து கர்ப்பம் உண்டாகி மனிதன் தோன்றுகிருன் என்பது நீங்கள் அறிந்ததே, நமது விந்து அணுக்களில் ஒரு துளியில் சுமார் ஐந்து லெக்ஷம் உயிரணுக்கள் உள்ளன. இந்த ஐந்து லக்ஷம் உயிரணுக்களில் ஒரே ஒரு அணுவிலிருந்து கர்ப்பம் உண்டாகி மனிதன் தோன்றுகிருன்.

இதிலிருந்து என்ன ஏற்படுகிறது? ஒரு துளியில் ஐந்து லெக்ஷத்தில் ஒரு பாகமாகிய 'ஒரு அணுவிலிருந்து மனிதன் தோன்றுகிருன்' என்ற தத்துவமும் விஞ்ஞான உண்மையும் தோன்றி நிருபணமாகிறது.

இந்த உயிரணுவானது கர்ப்பப் பையில் இருப்பது போன்ற ஒரு ரஸாயன முறைச் சேர்க்கையிலும், சூழ்நிலை யிலும் தாளுகவே தோன்றி வளர்ந்து முதல் மனிதன் தோன்றியிருக்கிருன். விஞ்ஞானிகள் கண்ணுடிக் குழாயில்

கருவை வளர்ப்பது போலவே — விஞ்ஞானிகள் அணுக்களையும், ரஸாயனப் பொருள்களையும், மின் அலைகளையும் பலவிதமான பாகுபாடுகளில் கலந்து பலவிதமான பரிசோதனைகள் செய்யும்போது எதிர்பாராதவிதமாகப் பலப்பல புதுப்பொருள்கள் தோன்றுவது போலவே, மனிதனின் உயிரணுவும், ரஸாயனப் பொருள்களும், வாயுப் பொருள்களும் எதிர்பாராத ஒரு சூழ்நிலையில் தானாக ஒன்று சேர்ந்து வளர்ந்து முதல் மனிதர் தோன்றியிருக்கிறார்.

இந்த முதல் மனிதரையே கடவுள் என்று ஹிந்து மதம் கூறுகிறது. கடவுள் இப்படித் தாய் தந்தை இல்லாமல் பிறவியில்லாமல் தானாகத் தோன்றியதாலேயே- "கடவுள் பிறவியில்லாதவர், தாய் தந்தை இல்லாதவர்" என்று சகல மத வேத சாஸ்த்திரங்களும் கூறுகின்றன.

முதன் முதலாக மனிதன் தோன்றிய உண்மையான விஞ்ஞான பூர்வமான வரலாறு இதுதான்

புழு பூச்சியிலிருந்து பரிணாம முறையில் வளர்ச்சியடைந்து எலி-பூனைபோல் ஆகி அதன்பின் பரிணாம முறையில் வளர்ச்சியடைந்து, குரங்குபோல் ஆகி, பின்பு குரங்கிலிருந்து பரிணாம முறையில் வளர்ச்சியடைந்து மனிதன் தோன்றினான் என்று சில மேல் நாட்டு விஞ்ஞானிகள் கூறியிருப்பது உண்மை அல்லவே அல்ல.

## 63. புண்ணியம் என்றால் என்ன ?

கேள்வி: தானம் கொடுத்தால் புண்ணியம் வரும் என்றால் கடவுளுக்கு இங்கு என்ன வேலை?

பதில்: தானம் என்பது பிரதிப் பயனை எதிர்பாராமல் இனமாகக் கொடுப்பது என்பது பொருள். கஷ்டப்படுபவர்களுக்கு இவ்விதம் உதவி செய்தால், அதனால், நம்முடைய ஆத்மாவாகிய உயிர்ச் சக்தியின்

அலைகள் மிக மிகப் பிரம்மாண்டமான சக்தியுடையதாக வளர்கிறது

"இவ்விதம் வளருகிற சக்திக்குத்தான் புண்ணியம் அல்லது புண்ணிய சக்தி என்பது பொருள்"

இவ்விதம் ஒவ்வொருவருடைய சக்தியையும் மிக மிகப் பிரம்மாண்டமானதாக வளர்த்து, அவர்களுடைய மரணத்திற்குப் பின்னும் இந்த உயிர்ச் சக்தி மின் அலைகள் வானத்தில் என்றென்றும் நட்சத்திரமாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கும்படி செய்வதே கடவுளுக்கு இங்குள்ள வேலை. இவற்றை அறிந்து உணர்ந்து பயன் பெற்று முன்னேறி இந்த நிலையை அடைவதே உன்னுடைய வேலை

## 64 தீமை செய்யாதே

கேள்வி: கொள்ளைக்காரன் திருடிய பணத்தில் பாதியைத் தானம் செய்தால் பாவம் தீர்ந்து போகுமா?

பதில்: அறியாமையாலும், தவறுதலாகவும் நாம் ஏதாவது களவு போன்ற தீமைகள் செய்து, பின்பு உண்மையை உணர்ந்து, மனம் திருந்தி, வருந்தி நமது இறைவனிடம் மன்னிப்புக் கோரினால் நிச்சயமாக நமது கடவுள் நம்மை மன்னிப்பார். நமது பாவங்களைத் தீர்த்து விடுவார்.

ஆனால், கடவுள் நம்மை மன்னிப்பார். அதனால் எவ்வளவு தீமைகளும பாவங்களும் செய்தாலும் கடவுளிடம் மன்னிப்பு பெற்று விடலாம்" என்று 'வேண்டுமென்றே தீமைகளும் களவுளும் செய்தால்" நம்மை நமது கடவுள் ஒருபோதும் மன்னிக்கவேமாட்டார். நமது பாவங்களுக்குரிய தண்டனைகளைக் கட்டாயம் கொடுத்தே தீருவார்.

மனிதர்களை ஏமாற்றி மோசம் செய்வதுபோல் கடவுளை ஒருபோதும் ஏமாற்றவோ, மோசம் செய்யவோ, வஞ்சிக்கவோ ஒருபோதும் முடியவே முடியாது. நாம் இறந்த பின்னும் இதற்குறிய தண்டனை கட்டாயம் கிடைத்தே தீரும். இதன் விபரங்கள் 44–வது கேள்வியாகவும் பதிலாகவும் இதில் விளக்கப்பட்டுள்ளது

## 65. மனநோய்க்கு மருந்து

கேள்வி: பலபேரைக் கொலை செய்தவன் ராம ஜெபம் செய்தால் புண்ணியவானாகி விடுவானா?

பதில்: "கொலை" என்பது பல சந்தர்ப்பங்களுக்கு ஏற்றபடி மதிக்கப்படுகிறது.

நாம் ஒருவரைக் கொலை செய்தால் அது "கொலைக் குற்றமாகக்" கருதப்பட்டு நமக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்படுகிறது.

கோர்ட்டில் உள்ள நீதிபதி, ஒரு குற்றவாளிக்குத் தூக்குத் தண்டனை விதித்து அவரைக் கொலை செய்தால் அது "நீதி" என்று கருதப்படுகிறது,

யுத்தத்தின் பேரால் ஒருவர் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமானபேரைக் கொலை செய்கிறாரோ அவரே பெரிய "வீரர்" என்று மதிக்கப்படுகிறது.

நெப்போலியன் பெரும்படை திரட்டி உலகெலாம் சென்று ஏராளமானவர்களைக் கொன்று பல பகுதிகளை வென்றதால் அவன் ஒரு "மகத்தான வீரன்" என்று சரித்திரம் கூறுகிறது.

ஆனாலும் அவன் வெற்றி கிடைக்கும் வரை உண்மையை உணரவில்லை. தோல்வி கிடைத்த பின்புதான் உண்மையை உணர்ந்தான். அவன் உண்மையை உணர்ந்த பின் யுத்தமே செய்யவில்லை. ஒருவரைக்கூட கொலை செய்யவில்லை

தான்செய்த ஏராளமான படுகொலைக்காக மிகவும் வருந்தி, திருந்தி, ஆண்டவனிடம் மன்னிப்பு கோரினான்

"நான் இறந்தபின் எனது சவப் பெட்டியில் இரண்டு பக்கங்களிலும் இரண்டு பெரிய துவாரங்கள் செய்து வைக்கவேண்டும். இந்தத் துவாரங்கள் வழியே எனது இரண்டு கைகளையும் வெளியே நீட்டி வைக்க வேண்டும். "உலகில் பெரும் பகுதியைப் படையெடுத்து வென்ற வீரன், கடைசியில் சவக்குழிக்குப் போகும்போது வெறும்

கையுடன்தான் போகிறான். அதனால் அன்பர்களே யாரும் தீமை செய்யாதீர்கள், மற்றவர்களைக் கொலை செய்யாதீர்கள்" என்று சவப்பெட்டியில் எழுதிவைக்கவேண்டும்'' ''எனது கல்லறையிலும் ''உலகின் பெரும்பகுதியைப் படையெடுத்து வென்ற வீரனுக்குக் கடைசியில் எட்டடி நிலம் தான் சொந்தமாக இருக்கிறது அதனால் அன்பர்களே யாரும் தீமை செய்யாதீர்கள்'' என்று எழுதி வைக்கச் சொன்னான்.''

அவனது நண்பர்கள் அவன் இறந்த பின் அவ்வாறே செய்தார்கள்.

ஹிட்லரும் பெரும்படை திரட்டி யுத்தம் செய்து வெற்றி மேல் வெற்றி கொண்டான், இந்த யுத்தங்களில் ஏராளமான பேர்களைக் கொன்றான், கடைசியில் ரஷ்யாவிடம் தோல்விகண்டவுடன் உண்மையை உணர்ந்து, யாருடைய முகத்திலும் விழிக்க மனமின்றி, விஷ மாத்திரையை சாப்பிட்டுத் தற்கொலை செய்துகொண்டு மடிந்தான்.

சமீபகாலத்தில் பாகிஸ்தான் ஜனாதிபதி யாஹ்யாகான பங்களா தேசத்தில் லக்ஷக்கணக்கானவர்களைக் கொன்று குவித்து, உயிரோடிருப்பவர்களுக்கும் பல துன்பங்களைச் செய்தான். கடைசியில் அவருக்குத் தோல்வி ஏற்பட்டதும் சிறைச்சாலையில் அடைபட்டு இறைவனை அல்லாவை அல்லும் பகலும தொழுது தனது தவறுகளுக்கும் குற்றங்களுக்கும் தீமைகளுக்கும் மன்னிக்கும்படி இறைவனை வேண்டிக்கொண்டே இருக்கிறார்

என்றாலும், இவ்விதக்குற்றவாளிகளைக், 'குற்றவாளிகள்' என்று சொல்லித் தண்டிக்காமல்– ''மன நோய் கொண்டவர்கள்'' – 'ஒருவிதமான மன நோயினால் தவறான எண்ணங்களைக் கொண்டு இவ்விதக் குற்றங்களைச் செய்கிறார்கள்'' என்றே மதித்து அன்பு செய்து அவர்களது நல்வாழ்வுக்கு உதவி செய்ய வேண்டும்'' – என்று ஹிந்து மத சாஸ்திரங்களும், மற்றும் கிறிஸ்த்துவ, இஸலாமிய மத சாஸ்திரங்களும் கூறுகின்றன.

அதனுல் குற்றவாளிக்குச் "சிறைத் தண்டனை விதிப்பது" அவர்களைத் தண்டிப்பதற்காக அல்ல.

சிறையில் அவர்களுக்குக் கல்வியும், தொழிலும், வேலையும் கற்பித்து, அவர்கள் நல்வாழ்வு பெறவே முயற்சி செய்கிருர்கள், மன நோய் போக்கவே முயற்சிக்கிருர்கள்.

அதனுல், கொலை, களவு கொடுமை, துன்பம், மற்றும் எல்லாவிதத் தீமைகளையும் செய்யும் மன நோயாளிகளுக்கு சரியான நிச்சயமான, நம்பிக்கையான, பரிபூரணமான மருந்து "ராம ஜெபம், தெய்வ ஜெபம், முருக ஜெபம், சிவ ஜெபம், அன்னை பராசக்தி ஜெபமேயாகும்"

இவ்வித ஜெபம் உண்மையாகச் செய்தால் கட்டாயம் புண்ணியவாளுகி அடைவார். சந்தேகமே இல்லை

## 66. ஒளியின் ஒப்பற்ற சக்தி.

**கேள்வி:** தீ மிதி செய்யும் பக்தர்களே! உங்களால் உச்சி வெய்யிலில் தார் ரோட்டில் செருப்பில்லாமல் நடக்க முடியுமா? எரிகிற அடுப்பில் ஏறி நிற்க முடியுமா? தீயே கடவுள் என்கிறீரே நெருப்பைத் தொட்டுக் கும்பிட்டால் உங்கள் கை வேகாமல் இருக்குமா?

**பதில்:** "இந்தப் பிரம்மாண்டமான பூமியின் மீதுள்ள "இருள்" பூருவும் ஒன்று சேர்ந்து எதிர்த்தாலும் கூட, ஒரே ஒரு சிறு ஒளியை அழிக்கவோ, அணைக்கவோ, மாற்றவோ ஒருபோதும் முடியவே முடியாது" – என்ற இந்த மகத்தான உண்மையை ஒவ்வொருவர் உள்ளத்திலும், இதயத்திலும் நிலை நாட்டுவதற்காகவே, தீ வளர்த்தல், தீ மிதி விழாச் செய்தல் போன்ற விழாக்கள் செய்யப்படுகின்றன.

"இருள் என்பது தீமைகள், கொடுமைகள், அநீதிகள் துன்பங்கள் என்றும் பொருள்படும்"

அதனுல் இந்தப் பூமி பூருவும் உள்ள தீமைகளும், கொடுமைகளும், துன்பங்களும் ஒன்று சேர்ந்து எதிர்த்தாலும் கூட, நீதி, தர்மம், சத்தியம், அன்பு, அஹிம்சை,

பண்பு, பக்தி உண்மை, ஒழுக்கம், சாந்தப், சகோதரத்துவ நெறிகளாகிய ஒளியை ஒருபோதும் அழிக்கவோ, அணைக்கவோ, மாற்றவோ முடியவே முடியாது. இப்படிப் பட்ட மகத்தான ஒளியானது, சக்தியானது நம் ஒவ்வொரு வர் உள்ளத்திலும், இதயத்திலும் இருக்கிறது'' - என்ற இந்த மகத்தான உண்மையை ஒவ்வொருவர் உள்ளத் திலும், இதயத்திலும் நிலை நாட்டுவதற்காகவே தீ வளர்த்தல் தீ மிதி விழாச் செய்தல், ஒளி வளர்த்தல் போன்ற நிகழ்ச்சி கள் நடைபெறுகின்றன.

கிறிஸ்த்தவர்கள் மெழுகுவத்தியை ஏற்றி வைத்து இந்த ஒளியை வளர்த்து ஒளி வணக்கம் செய்கிறார்கள்.

முஸ்லிம்கள் மூன்றும் பிறைச் சந்திரனின் ஒளியை வணங்கி ஒளி வணக்கம் செய்கிறார்கள்.

தமது கொடிகளில் இந்த மூன்றும் பிறைச் சந்திரனின் ஒளியையும், அதன் நடுவில் நமது ஆத்மாவாகிய நட்சத் திரத்தின் ஒளியையும் அமைத்து ஒளி வணக்கம் செய்கிறார்கள்.

இருட்டுக்குப் பின் வெளிச்சம், புயலுக்குப் பின் அமைதி, துன்பத்திற்குப் பின் இன்பம் வருவது நிச்சய மானது, நீதியானது சத்தியமானது, என்பதற்காக, அமாவாசை இருட்டுக்குப் பின் முதல் முதலாக வருகிற மூன்றும் பிறைச் சந்திரனின் ஒளியை வணங்குகிறார்கள். இந்த மூன்றும் பிறையின் தொடக்கத்திலிருந்தே மாதம், தேதி, வருஷம் முதலியவைகளைக் கணக்கிடுகிறார்கள். மற்றும் பல மதத்தினரும் பலவிதமாக ஒளி வணக்கம் செய்கிறார்கள்,

அதனால், தீ வளர்த்தல், ஒளி வளர்த்தல், தீ மிதி விழாச் செய்தல் முதலியவைகளை ஒளியினுடைய இந்த மகத்தான உண்மைகளை விளக்கிக் காட்டுவதற்கே செய்யப் படுகிறதே தவிர. "நெருப்பு சுடாது" என்று காட்டு வதற்காக அல்ல.

அதனால், உச்சி வெயிலில் தார் ரோட்டில் செருப்பு

இல்லாமல் நடக்கவும், எரிகிற அடுப்பில் ஏறி நிற்கவும், நெருப்பைத் தொடவும் எவராலும் இயலாது.

## 67. பொருளை அறிந்து பேசு.

கேள்வி: "திருப்புகழைப் பாடப் பாட வாய் மணக்கும்" என்று கூறும் பக்தரே தினமும் ஏன் பல் துலக்குகிறீர்?

பதில்: வார்த்தை ஒன்றாக இருந்தாலும், அந்த வார்த்தையை எழுதும் பேசும், இடம், சூழ்நிலை, பக்கத்தில் உள்ள வார்த்தைகள் வாக்கியம் இவற்றைப் பொறுத்து அந்த வார்த்தையின் பொருள் மாறுபடும்

"வாய் மணக்கும்" என்றால் இந்த இடத்தில் வாய் வாசனையாக இருக்கும் என்று பொருள்.

"கண்ணன் தன் காதலியை மணம் செய்து கொண்டான" என்றால் இந்த இடத்தில் மணம் என்பதற்கு கல்யாணம், விவாகம என்று பொருள்.

இதே போலவே ஒரே வார்த்தைக்குப் பல பொருளும் அர்த்தமும் உண்டாகும்.

வாய் மணக்கும் என்றால் வாயிலிருந்து நல்ல பேச்சுகளே வெளியாகும் என்று ஒரு அர்த்தமும் உண்டு.

வாய் நாறும என்றால், வாயிலிருந்து கெட்ட பேச்சுக்களே. வரும் என்றும் பொருள் உண்டு.

அதனால், திருப்புகழைப் பாடப் பாட வாய் மணக்கும் என்றால், திருப்புகழைப் பாடுபவர்கள் வாயிலிருந்து, அன்பு, அஹிம்சை, நீதி, நேர்மை, பண்பு, பக்தி, உண்மை ஒழுக்கம, சத்தியம், சாந்தம், சகோதரத்துவ நெறி முறைகள் தவறாத நல்ல பேச்சுக்களே வரும். இவற்றிற்கு விரோதமான தீமையான கெட்ட பேச்சுக்கள் எதுவுமே வராது என்பது பொருள்.

அதனுல், திருப்புகழைப் பாடுபவர்கள் பல் துலக்காமல் இருக்க வேண்டும் என்பது பொருள் அல்ல.

அதனுல், எந்த வார்த்தை பேசினுலும் அதனுடைய சரியான பொருளை அறிந்து அதன் பின் பேசுவதே அறிவுடைமை ஆகும். பல பலவிதமாக உண்மைகளைப் பழிப்பது பகுத்தறிவு அல்ல.

## 68. நன்றிக் கடன்

கேள்வி : சர்வ சக்தியும் பெற்று, உலகத்தையே காக்கின்ற கடவுளின் கோவிலுக்குக் கதவு ஏன்? பூட்டு ஏன்? காவலும் ஏன்? தன்னையே காப்பாற்றிக்கொள்ள முடியாமல், காவலர்கள் காவல் நிற்கும் கடவுளா? உங்களைக் காப்பாற்றப் போகிறுர்?

பதில்; சர்வ சக்தியும் பெற்ற எங்கள் கடவுள்தான் இந்தப் பிரம்மாண்டமான பூமியை ஒரு நிமிஷத்திற்கு நாற்பதாயிரம் கிலோ மீட்டர்கள் வேகத்தில் சுழற்றி இயக்கிக்கொண்டு காத்து வருகிறுர். இவ்விதம் இந்தப் பிரம்மாண்டமான பூமியைச் சுழற்றுவது எந்த விஞ்ஞானியோ அல்லது எந்தப் பகுத்தறிவாளரோ அல்லவே அல்ல.

சர்வ சக்தியும் பெற்ற எங்கள் கடவுள்தான் இந்தப் பிரம்மாண்டமான பூமியில் "ஆகர்ஷண சக்தி" என்னும் அற்புத சக்தியைப் பதிவு செய்து வைத்து இந்தப் பூமியின் மீதுள்ள பொருள்கள் யாவற்றையும், கீழே விழாமல அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாய் காத்துக் கொண்டிருக்கிறுர் இவ்விதம் பூமியின் மீதுள்ள பொருள்களைக் காக்கப் பூமியில் ஆகர்ஷண சக்தியைப் பதிவு செய்து வைத்திருப்பது எந்த விஞ்ஞானியோ அல்லது எந்தப் பகுத்தறிவாளரோ அல்லவே அல்ல.

சர்வ சக்தியும் பெற்ற எங்கள் கடவுள்தான், நீங்கள் காண்கிற பிரமமாண்டமான கடலைப் பூமியுடன் சேர்த்து அந்தரத்தில் அதன் அயன கதியில் அணுவளவும் தவருமல்

ஒரு நிமிஷமும் ஓயாமல், மாறாமல் அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாக இயக்கிச் சுழல விட்டுக் கொண்டிருக்கிறார் இவ்விதம் இந்தப் பிரம்மாண்டமான கடலைப் பூமியுடன் சேர்த்து அந்தரத்தில் சுழற்றிக் கொண்டிருப்பது எந்த விஞ்ஞானியோ அல்லது எந்தப் பகுத்தறிவாளரோ அல்லவே அல்ல

சர்வ சக்தியும் பெற்ற எங்கள் கடவுள்தான் ஒவ்வொரு உயிரும் மூச்சு விட்டு உயிர் வாழ்வதற்காக பிரம்மாண்டமான காற்று மண்டலத்தைப் பூமியைச் சுற்றிலும் அமைத்து இக்காற்று மண்டலம் பூமியை விட்டு எங்கும் ஓடிச் சென்று விடாதபடி ரேடியோ அலைகள் மூலமாகவே அறுநூத்தி இருபத்திஒன்பது கோடி ஆண்டுகளாகக்காத்துக்கொண்டிருக்கிறார். இவ்விதம் ஒவ்வொரு உயிரின் மூச்சுக்காற்றையும் காத்துக் கொண்டு சகல ஜீவன்களும் உயிர் வாழச் செய்து கொண்டிருப்பது எந்த விஞ்ஞானியோ அல்லது எந்தப் பகுத்தறிவாளரோ அல்லவே அல்ல.

சர்வ சக்தியும் பெற்ற எங்கள் கடவுள்தான் இந்தப் பூமிக்கும் மற்ற கிரஹங்களுக்கும் சூரியன் மூலம் ஒளியையும், உஷ்ணத்தையும் கொடுத்துக்கொண்டிருக்கிறார். இவ்விதம் சகல கிரஹங்களுக்கும் ஒளியும் உஷ்ணமும் கொடுக்கச் சூரியனை இயக்கிக் கொண்டிருப்பது எந்த விஞ்ஞானியோ அல்லது எந்தப் பகுத்தறிவாளரோ அல்லவே அல்ல.

சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி முதலிய சகல கிரஹங்களையும் சர்வ சக்தியும் பெற்ற எங்கள் கடவுள்தான் அதனதன் அயன கதியில் அணுவளவும் பிசகாது ஒரு நிமிஷமும் தவறாது ஓயாது அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாக இயக்கிச் சுழல விட்டுக்கொண்டிருக்கிறார். இவ்விதம் சகல கிரஹங்களையும் இயக்கிச் சுழல விட்டுக்கொண்டிருப்பது எந்த விஞ்ஞானியோ அல்லது எந்தப் பகுத்தறிவாளரோ அல்லவே அல்ல.

அதனால், இப்படிப்பட்ட மகத்தான சாதனைகள் புரிந்து கொண்டிருக்கிற, பிரம்மாண்டமான ஆற்றலையும் அற்புத வீரத்தையும் போற்றிப் புகழ்வதற்காகவே அவருக்கு கோவில்களைக் கட்டி வைத்து. அதில் அவருடைய உருவச் சிலைகளை அமைத்து அவற்றிற்குப் பல லட்சக் கணக்கான ரூபாய்கள் மதிப்புள்ள ஆபரணங்களை அணிவித்து அழகு பார்த்து வணங்கிப் பூசிக்கிறோம்.

அதனால், கோவில்களுக்குக் கதவும், பூட்டும், காவல்களும் கோவிலில் உள்ள ஆபரணங்களுக்கும் சொத்துக்களுக்கும்தான் அமைக்கப்பட்டிருக்கிறதே தவிர கடவுளுக்கு அல்ல.

அண்ணா சிலைகளையும், பெரியார் சிலைகளையும் மற்றவர் கெடுக்காமலிருக்க கதவு போட்டு பூட்டி வைத்து அவற்றிற்கு ஆபரணங்களையும், மாலைகளையும் அணிவித்துப் போற்றிப் புகழ்ந்து கொண்டாடுவதை நன்றிக் கடனாகப் பகுத்தறிவாளர்கள் எப்படிக் கருதுகிறார்களோ அதே போலவே, –

இந்தப் பிரம்மாண்டமான பூமி, கடல், காற்று சூரியன், சந்திரன் முதலிய மற்ற கிரஹங்களையும் அதனதன் அயனகதியில் சற்றும் மாறாமல் ஒரு நிமிஷமும் தவறாமல் ஓயாமல் அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாகச் சுழற்றி இயக்கிக்கொண்டிருக்கும் அதியற்புதமான சாதனைகளைப் பாராட்டிப் போற்றிப் புகழவே, நன்றிக் கடனாகவே இவ்வாறு செய்யப்படுகிறது.

## 69. விதி என்றால் என்ன ?

கேள்வி : விதியால் மனிதன் சாகிறான் என்றால் நாளைக்கே உங்களைக் கொலை செய்ய ஒருவன் வந்தால் நம் விதி முடியப் போகிறது என்று நினைப்பீரா? கொலை செய்ய வந்தவனை விரட்டியடித்து விதியை வெல்வீரா?

பதில் : "விதி என்பது மனிதனுக்கும் அவனது சக்திக்கும் மீறிய ஒரு சக்தியின் செயல்"–என்பது பொருள்

ஒருவன் நம்மைக் கொலை செய்ய வருவதைத் தடுத்து, விரட்டியடிப்பது நமது சக்திக்கு உட்பட்ட செயல்.

அதனால், ஒருவன் நம்மைக் கொலை செய்ய வந்தால் நமது சக்தி பூராவையும் செலவிட்டு விரட்டியடிப்பதோடு அல்லாமல் போலிசாரிடம் ஒப்படைப்பதும் நமது கடமை.

அநீதிக்குப் பணிவது அஹிம்சையும், நீதியும், அன்பும் அல்ல, விதி என்பது – அநீதிக்குப் பணிவது அல்ல

## 70. படைக்கும் சக்தி

கேள்வி : உயிர்களைப் படைத்தவன் கடவுள் என்றால் நான் ஒரு குழந்தையை உண்டாக்கியதால நானும் ஒரு கடவுள்தானே? கடவுளே மனிதனைப் படைக்கிறான என்றால் பிரம்மச்சாரிகளுக்கும, கன்னிப் பெண்களுக்கும் விதவைகளுக்கும் ஏன குழந்தைகளே பிறப்பதில்லை?

பதில்: நாம் நமது மனைவியுடன் கூடிக் கர்ப்பம் உண்டாகிக் குழந்தைகளைப் பெறுகிறோம்,

ஆனாலும், இப்படிக் கர்ப்பம் உண்டாகக் கூடிய விந்து அணுக்களை – உயிரணுக்களை – நமது உடலில் நாம் படைக்கவில்லை, அதனால் நாமே கடவுள் அல்ல,

மனித சமுதாயம் விரித்தியடையும் பொருட்டு ஒவ்வொரு ஆண் பெண் உடலிலும் உயிரணுக்களை அமைத்திருப்பதும், இந்த அணுக்கள் வம்ச பரம்பரையாக வந்து வளர்ந்து, பெருகும்படி ஆதிமுதலாக ஆக்கி அமைத்திருப்பதும் கடவுளே ஆவார்.

மனிதனைப் படைக்கும் சக்தியை ஒவ்வொரு ஆணுக்கும் பெண்ணுக்கும் கொடுத்து, அவர்கள் மூலம்தான் கடவுள் மனிதரைப் படைக்கிறாரே தவிர நேரடியாகப் படைக்க வில்லை.

அதனால்தான், ஆணின் சேர்க்கை பெறாத கன்னிப் பெண்களுக்கும், விதவைகளுக்கும், பெண்ணின் சேர்க்கை பெறாத பிரம்மச்சாரிகளுக்கும் குழந்தை பிறப்பதில்லை,

ஆனாலும்; நாம் அனைவரும் கடவுளிடமிருந்தே வம்ச பரம்பரையாக வளர்ந்து வந்திருப்பதால், கடவுளுக்கு உள்ள சக்திகள் அனைத்தும் நம் ஒவ்வொருவருக்கும் உண்டு. நாமும் முயற்சி செய்தால் மகத்தான பிரம்மாண்டமான சாதனைகள் புரியலாம். இச்சக்தியை நம் ஒவ்வொருவர் உடலிலும் உயிரிலும் நமது கடவுள் அமைத்திருக்கிறார். இவற்றை உணர்ந்து அடக்கத்துடன் நமது கடமைகளைச் செய்து முன்னேறுவதே அவசியம்.

## 71. அகம்பாவத்தை அழித்து விடு

கேள்வி: "எல்லாம் அவன் செயல்" என்று கூறுகிறீர்களே. உங்கள் கடவுள்களையே நாங்கள் தூக்கிக் கொண்டு போனால், அதுவும் அவன் செயல்தானே? ஏன் போலீசாரிடம் வந்து புகார் செய்கிறீர்கள்?

பதில்: அன்புள்ள சகோதரர்களே! எங்கள் கடவுளையே தூக்கிக்கொண்டுபோக உங்களால் ஒருபோதும் இயலவே இயலாது

நீங்கள் எங்கள் கடவுளைத் தூக்கிக்கொண்டுபோக வேண்டுமானால், எங்கள் கடவுளின் படைப்பில் ஒரு சிறு அம்சமாகிய இந்தப் பூமியை ஒருநாளாவது சுழலாமல் நிறுத்தி வைக்க வேண்டும் இது முடியுமா?

எங்கள் கடவுளின் படைப்பில் ஒரு சிறு அம்சமாகிய கடலை, ஒரு மணி நேரமாவது அலை வீசாமல் நிறுத்தி வைக்க வேண்டும். இது உங்களால முடியுமா?

எங்கள் கடவுளின் படைப்பில் ஒரு சிறு அம்சமாகிய சூரியனைப் பகலில் ஒரு மணி நேரமாவது ஒளி வீசாமல் நிறுத்தி வைக்க வேண்டும் இது உங்களால் முடியுமா?

இவைகளைச் செய்ய உங்களால் முடியுமானால் நீங்கள் பேஷாக எவ்விதத் தடையும் இல்லாமல் எங்கள் கடவுளைத் தூக்கிக்கொண்டு போகலாம்

இவைகளைச் செய்ய முயற்சித்தீர்களானால், உங்களை நீங்களே அழித்துக்கொள்வதைத் தவிர வேறு ஒன்றை யும் செய்ய உங்களால் இயலவே இயலாது

தங்கம், வெள்ளி, தாமிரம் இவற்றால் செய்யப்பட்ட எங்கள் கடவுளின் உருவங்களைத்'' தூக்கிக்கொண்டு போய்விட்டு, 'உங்கள் உண்மையான கடவுளைத் தூக்கிக்கொண்டு போய்விட்டோம்'' என்று சூரத்தனம் பேசினால், அதை யாரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

''நீங்கள் எங்கள் கடவுளின் உருவங்களைத் தூக்கிக் கொண்டு போவதுபோல், மற்றவர்களின் உடைமைகளை யும் தூக்கிக்கொண்டு போகாமல் இருக்க வேண்டும்'' என்பதற்காகவே – மற்றவர்களின் நன்மைக்காகவே – போலிசில் புகார் செய்கிறோம். எங்கள் கடவுளுக்காக அல்ல. இதை இனிமேலாவது அறிந்துகொள்ளுங்கள். வீணான வீராப்புகள் பேசி வாழ்வை அழித்துக்கொள்வது பகுத்தறிவு அல்ல.

## 72. நீரின் மேல் நடக்கலாம்.

கேள்வி: கல்லைத் தெப்பமாக்கி திருநாவுக்கரசர் ''நமச்சிவாய'' என்று சொல்லிக் கரை சேர்ந்தார் என்பது உண்மையானால், உங்களைத் தூக்கி நடுக்கடலில் போடலாமா? தப்பித்து வந்து விடுவீரா?

பதில்: ''திருநாவுக்கரசர் கல்லைத் தெப்பமாக்கிக் கடவுள் நாமத்தைச் சொல்லிக்கொண்டு கரை சேர்ந்தார்'' என்பதை ஒப்புக்கொள்ள மறுக்கிறீர்கள்,

ஆனால், பல ஆயிரம் டன்கள் எடையுள்ள இரும்பைக் கொண்டு ஆக்கப்பட்ட தெப்பத்தை – கப்பலை – நீங்கள் கண்களால் நேருக்கு நேராகக் காண்கிறீர்கள். அதில் ஏறிப் பிரயாணமும் செய்கிறீர்கள்.

அதனால், திருநாவுக்கரசர் கல்லைத் தெப்பமாக்கிக் கரை சேர்ந்தார்'' என்றால், 'இப்போது இருப்பினால்

செய்யப்பட்டிருக்கும் கப்பல் போன்ற ஒரு சிறு சாதனத்தை கல்லினால் தயார் செய்து, அதன் மூலம் தப்பி வந்தார்'' என்பது பொருள்

இந்தப் பொருளை உணராமல், எங்களைத் தூக்கி நடுக் கடலில் போட்டால், எங்களைக் கொலை செய்ய முயற்சித்த குற்றத்திற்காக உங்களைப் போலீசார் பிடித்துப் போய் தூக்குத் தண்டனை வழங்குவார்கள்.

''நீரின் மேல் நடக்கலாம்'' என்று வேத சாஸ்த்திரங் களில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. — இதற்குக் ''கப்பல் போன்ற ஒரு சாதனத்தைக் கண்டுபிடித்து அதன் மூலம் நீரின் மேல் நடந்து நீரைக் கடந்து பல ஆயிரம் மைல்கள் செல்லலாம்'' என்பது பொருள.

''காற்றிலே பறக்கலாம்'' என்று வேத சாஸ்த்திரங் களில் கூறப்பட்டிருக்கிறது. ''விமானம். ஏரோப்ளேன, ராக்கெட், வானவெளிக் கப்பல், செயற்கைக் கிரஹம் போன்ற சாதனங்களைக் கண்டு பிடித்து, அதன் மூலம் வானத்தில் காற்றில் பறந்து செல்லும் சக்தியும் திறமையும் அறிவும் ஞானமும் மனிதனுக்கு உண்டு'' — என்பது இதன் பொருள்.

இப்படிப்பட்ட அற்புதமான சாதனைகளையெல்லாம் செய்யும் சக்தி ஒவ்வொரு மனிதருக்கும் உண்டு என்பதைக் காட்டவே, சாஸ்த்திரங்களில் இவ்வாறு கூறப்பட்டிருக் கின்றன,

அதனால், புராண இலக்கிய. வேத சாஸ்த்திர வரலாற்று நூல்களில் கூறப்பட்டுள்ள ஒவ்வொரு வாக்கியத் தின வார்த்தையின் பொருளையும் நன்கு உணர்ந்து கொண்டு அதன்பின் பேசுவதே அறிவுடைமை ஆகும்.

## 73. அநீதியை ஒழிப்பதே அன்பு.

**கேள்வி:** ''அன்பே சிவம்'' என்று அஹிம்சையைப் போதிக்கும் உங்கள் மதத் தெய்வங்களின் கையில்

கொடுமையை விளைவிக்கும் சூலம், வேலாயுதம் கத்தி இவைகள் எதற்கு? வேர்க் கடலை தோண்டவா?

பதில் : எங்கள் கடவுளை யார் வேண்டுமானாலும் அடிக்கலாம், அரிவாளால் வெட்டலாம், வேறு எது வேண்டுமானாலும் செய்யலாம், இப்படி என்ன தீமையைத் தனக்குச் செய்தாலும், அதற்குப் பதிலாக, எங்கள் கடவுள் நிச்சயமாக யாரையும் ஒன்றுமே செய்ய மாட்டார். இதுவே அவருடைய அஹிம்சை, அன்பு.

ஆனால், உங்களைப் போன்ற உங்கள் சகோதர மனிதர்களுக்கு, யாராவது ஏதாவது கொடுமை, தீமை, அநீதி செய்தால் அதைப் பார்த்துக்கொண்டு, பொறுத்துக் கொண்டு ஒரு நிமிஷமும் இருக்கமாட்டார்.

இப்படிப்பட்ட சகல அநீதிகளையும் அழித்து ஒழிப்பதற்காகவே, கையில் வேலாயுதமும் சூலாயுதமும் மற்றும் பல பல ஆயுதங்களையும் எங்கள் கடவுள்கள் வைத்திருக்கிறார்கள். வேர்க் கடலை தோண்டுவதற்கு அல்ல.

ஒருவர் "நமக்கு" எவ்வளவு தீமை செய்தாலும் அதைப் பொறுத்துக்கொள்ள வேண்டும். ஆனால் "மற்றவருக்கு" ஏதாவது தீமை செய்தால் அதைப் பொறுத்துக்கொள்ளாமல் அந்தத் தீமையை அழித்து ஒழிக்க வேண்டும். இதுவே அஹிம்சை, அன்பு.

தீமை செய்பவரின் உடலுக்கோ, உயிருக்கோ எவ்வித இடையூறும் செய்யாமல், அவருடைய தீமையான குணத்தையும், செயலையும் மட்டும் போக்க வேண்டும் இதுவே அஹிம்சை, இதுவே அன்பு.

தீமைக்குப் பயந்துகொண்டு பணிந்துகொண்டிப்பது அஹிம்சை அல்ல, கோழைத்தனமாகும், அநீதியாகும் அநீதியை அழித்து ஒழிப்பதே அன்பு

## 74. பாதுகாப்பு மந்திரி.

கேள்வி : ஐயங்கார் நெற்றியில் இருப்பது வெங்கடாஜலபதி பாதம் என்றால், வெங்கிடாஜலபதி நெற்றியில்

இருப்பது யார் பாதம்?

பதில்: நம்முடைய நாட்டு சர்க்காரில் பல இலாக்காக் களும் பல மந்திரிகளும் இருப்பதுபோலவே, தெய்வ சர்க்காரிலும் பல மந்திரிகளும் இருக்கிறார்கள், பல இலாகாக்களும் இருக்கின்றன. இவற்றில் அனைவருக்கும் வேண்டிய அனைத்தையும் கொடுத்துப் பாதுகாக்க வேண்டிய பாதுகாப்பு இலாகா மந்திரி ஸ்ரீ மகா விஷ்ணு ஆவார்

ஸ்ரீ மகா விஷ்ணுவின் நெற்றியில் இருக்கும் நாமத்தில் நடுவில் இருக்கும் சிகப்புக் கோடு பூமியிலுள்ள இரத்த முள்ள எல்லா உயிரினங்களையும் குறிக்கும். இந்த எல்லா உயிரினங்களுக்கும் வேண்டிய எல்லாப் பொருள்களையும் ஸ்ரீ லெக்ஷிமி தேவியே கொடுத்து வருவதால், இது ஸ்ரீ லெக்ஷிமி தேவியையும் குறிக்கும் என்றும் சிலர் சொல்லு வார்கள்

நாமத்தின் இருபுறமும் இருக்கும் இரு வெள்ளைக் கோடுகளும் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் இரு கரங்களையும் குறிக்கும் இதனால் "ஸ்ரீ மகா விஷ்ணு தனது இரு கரங்க ளாலும் சகல உயிரினங்களையும காக்கிறார்" என்பது இந்தச் சின்னத்தின் பொருள் ஆகும.

தென்கலையார் இந்த நாமத்திற்குக் கீழே பீடம் போன்ற குறிபோட்டுக்கொள்கிறார்கள். இந்தப்பீடமானது பூமியைக் குறிக்கும்.

நமது நாட்டு அரசியல் வாதிகள் சைக்கிள் சின்னம், சிங்கச் சின்னம், மோட்டார் சின்னம், ராட்டைச் சின்னம், என்று அவரவர்க்குப் பிரியமான சின்னங்களைப் போட்டுக் கொண்டு ஓட்டுக் கேட்பது போல், நமது மகாவிஷ்ணுவும் இந்த நாமச்சின்னத்தைப் போட்டுக் கொண்டிருக்கிறார்.

ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பரம்பறையில் வந்தவர்கள் வைஷ்ணவர்கள் அதனால் அவர்களும் இந்த நாமச் சின்னத்தைப் போட்டுக் கொள்கிறார்கள்,

அதனல் ஐயங்கார் நெற்றியில் இருப்பது வேறு, வெங்கடாஜலபதி நெற்றியில் இருப்பது வேறு அல்ல. அனைத்தும் ஒரே சின்னமே அனைத்துக்கும் மேலே கண்ட படி பொருள் ஒன்றே

## 75. முதல் மனிதர்.

கேள்வி: சாமிக்கு பசி உண்டா? காம உணர்ச்சிகள் உண்டா? இல்லையென்ருல் லட்டு. பஞ்சாமிர்தம், இவைகளை ஆறு காலமும் நைவேத்தியம் செய்வது எதற்காக?

பதில்: அனைத்துக்கும் ஆதிமுதலாகத் தாய் தந்தை இல்லாமல் பிறவி இல்லாமல் தானகத் தோன்றிய முதல் மனிதர் யாரோ. அவரே எங்கள் கடவுள்.

அவரும் நமது மனித வம்சத்தின் முதல் மனிதராய் இருப்பதால் அவருக்குப் பசி உண்டு காதல் உணர்ச்சி உண்டு, மற்ற யாவும் உண்டு.

அதனல்தான் லட்டு, வடை, சுண்டல், பலவகை அன்னங்கள பழங்கள், பால், பஞ்சாமிர்தம், தயிர் இளநீர் யாவற்றையும் படைத்து நிவேதனம் செய்கிறேம.

## 76. கண்டதும் காதல் கூடாது.

கேள்வி. உங்கள் கடவுளுக்குக் காம உணர்ச்சி அதிகப்பட்டு விட்டதா? ஒவ்வொரு ஆண்டும் புதுப் புது மனைவியைக் கேட்கிறரா? இல்லாவிட்டால், ஒவ்வொரு ஆண்டும் திருக்கல்யாண உற்சவம் நடத்துவது ஏன? அதனல் உங்களுக்கு என்ன பயன்?

பதில்: எங்கள் கடவுளுக்குக் காம உணர்ச்சி எதுவும் அதிகப்பட்டுத் தடுமாறவில்லை. "பெண்களைக் கண்டதும் காதல் கொள்வதும் கர்ப்பம் உண்டானதும் கைவிட்டு விடும் பழக்கமும்" உங்களிடம் அதிகப்பட்டு வருகிறது

அதனல் "இந்தக் கெட்ட பழக்கம் கூடாது ஒரே மனைவியுடன் வள்ளுவரும் வாசுகியும் போலும், பார்வதியும்

பரமசிவனும் போலும், லெட்சுமியும் நாராயணரும் போலும், உத்தம வாழ்க்கை வாழ வேண்டும்'' ''என்பதை ஒவ்வொரு வருக்கும் நினைவு படுத்துவதற்காகவே'' ஆண்டு தோறும் திருக்கல்யாண மகோத்சவ விழா என்ற விழாக் கொண் டாடப்படுகிறது.

எங்கள் கடவுள் உங்களைப் போல் ஆண்டு தோறும் புதுப் புது மனைவியைக் கேட்கவில்லை ஒரே மனைவி யுடனேயே மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் பார்வதி பரமேஸ்வரன் வள்ளி முருகன் என்று ஒவ்வொரு ஆண்டும் திருக் கல்யாண மகோத்சவ விழா கொண்டாடப்படுகிறது.

இந்த விழாக் கொண்டாடுவதால் ''கண்டதும் காதல் கொண்டு, கர்ப்பம் உண்டானதும் கைவிட்டு விடும்'' பழக்கம் குறைந்து வருகிறது இதுவே இதனால் உண்டாகும் பயன்.

## 77. பணிகளின் பிரிவினைகள்.

கேள்வி: பஞ்சாங்கத்தில் எதிர் காலத்தைக் கூறும் சக்தி உள்ளது, சந்திரனில் கிரஹணம் பிடிக்கப் போகும் நேரம், நாழிகை, இவைகளைத் துல்லியமாகச் சொல்லி யிருப்பதைப் போல். அங்கு ராக்கெட்டில் ஆம்ஸ்ட்ராங் எனபவர் வந்து இறங்கப் போவதை அது ஏன் குறிப்பிட வில்லை?

பதில்: சாஸ்த்திரங்களில் பூமி சாஸ்த்திரம் சூரிய சாஸ்த்திரம் வான சாஸ்த்திரம் கணித சாஸ்த்திரம் ஆயுள் சாஸ்த்திரம் என்று பல பிரிவுகள் உள்ளன, அவற்றில் தேர்ச்சி பெற்ற நிபுணர்கள அந்தந்த சாஸ்த்திரப்படி இயக்கங்களின் இயல்புகளை அறிந்து கணக்கிட்டு வெளியிடுவார்கள்

பூமியும் சந்திரனும் சுழன்று வருகிற சுழற்சியில், சந்திரனுக்கும் சூரியனுக்கும் இடையில் பூமி வரும் போது சூரியனுடைய ஒளி சந்திரன் மீது படாமல் சற்று நேரம் பூமி மறைக்கிறது. இந்த மறைப்பினால் உண்டாகும் நிழல்

சந்திரனில் தெரியும் போது, சந்திர கிரஹணம் என்று சொல்லுகிறோம்.

பூமியின் இந்த மறைப்பு எப்போது ஏற்படும் என்பதை பூமி சாஸ்த்திரப்படியும் வான சாஸ்த்திரப்படியும் சரியாக அறிவிக்கிறார்கள். இந்த சாஸ்த்திரங்கள் யாவும் நிரந்தர மானது நிர்ணயமானது

ஆனால், ஆம்ஸ்டராங் சந்திரனில் வந்து இறங்குவது நிறந்தரமானதலல "மூன்று நாள் வாழ்வு" இந்த மூன்று நாள் பயணத்திலும் சந்திரனில் இருந்தது ஒரு நாள் தான் இதைக் கவனிக்க வேண்டியது விஞ்ஞானிகள் தான்.

இந்த "ஒரு நாள் வாழ்வைப் பற்றி" விஞ்ஞானிகள் ரேடியோ மூலமும் பத்திரிகை மூலமும் டெலிவிஷன்கள் மூலமும் முன கூட்டியே வெளியிட்டு விட்டார்கள். மேலும் மேலும் அவசியமான செய்திகளை வெளியிட வேண்டியது விஞ்ஞானிகளின் பொறுப்பும் கடமையும் ஆகும். இந்தக் கடமையில தலையிட்டுக் குழப்படி செய்வது தவறு அதனால் பஞ்சாங்கத்தில் எதுவும் அறிவிக்கப்படவில்லை

## 78. பிராணிகளுக்கும் அன்பு செய்

கேள்வி: நாகராஜர், அநுமார், காகம், தேன் கருடன் நாய் என்று பிராணிகளையும் பறவைகளையும் தெய்வமாக நினைக்கிறீர்களே, இது அபத்தமில்லையா? உதாரணமாக நாகராஜன் உங்களுக்கு அருள் தர வேண்டுமென்று, வீட்டுக்குள வந்தால் அதற்கு பூசை செய்யாமல் அடித்து விரட்டுகிறீர்களே ஏன்?

பதில்: மேலே கண்ட பிராணிகளை யல்லாமல் ஈ எறும்பு முதலிய எண்பத்தி நாலாயிரம் உயிரினங்களையும் தூணையும் துரும்பையும் நாங்கள் கடவுள் என்றே கருது கிறோம். நமது உயிருக்கும் மற்றவற்றின் உயிருக்கும் ஏற்றத் தாழ்வு இல்லை அனைத்தும் கடவுளின் அம்சமே. அவரின் படைப்பே

அதனல், வெள்ளிக்கிழமை தோறும் புற்றில் பால் வார்க்கும் வழக்கம் இருந்து வருகிறது. ஒவ்வொரு ஆண்டும் ஆடி மாதத்தில் சுக்கில பட்ச பஞ்சமியன்று நாகபஞ்சமி என்று புற்றுக்குப் பால் வார்க்கும் விழா கொண்டாடப்படுகிறது. அன்று எத்தனை மைல் தூரத்தில் புற்று இருந்தாலும் அங்கு போய் பால் வார்த்துவிட்டு வரும் வழக்கம் இருந்து வருகிறது.

காகம் சனீஸ்வரனின் வாகனமாகையால் தினமும் மத்தியானம் சாப்பிடும் முன்பாகக் காக்கைக்கு கொஞ்சம் அன்னம் போட்டுவிட்டுத்தான் சாப்பிடுவது வழக்கம் இதனல், காக்கை சனீஸ்வரனிடம் சிபாரிசு செய்து நமது துன்பங்களைக் குறைக்கும் என்பது நம்பிக்கை.

நாம் எவ்வளவு குறைவாக சாப்பிட்டாலும் கடைசியில் இலையில் நாய்க்காகக் கொஞ்சம் சாதம் மிச்சம் வைக்கும் வழக்கம் இருந்து வருகிறது, இவ்விதம் செய்வதால் நாய்க்கு உள்ள நன்றியுணர்ச்சி நமக்கும் வளரும் என்பது நம்பிக்கை.

இதேபோல் ஒவ்வொரு பிராணிக்கும் ஒரு வரலாறு உள்ளது. எறும்புகளுக்கு உணவளிக்கவே தினமும் வாசலில் கோலம் போடப்படுகிறது.

இப்போது எல்லா நாடுகளிலும் சிங்கம், புலி, முதலியவைகளைக் கூட சுடக்கூடாது. முக்கிய ஆபத்து விளைவித்தால் மட்டுமே சுட வேண்டும்'' என்று விஞ்ஞான முறையில் சட்டம் இயற்றியிருக்கிருர்கள்

அதனல், மற்ற ஒவ்வொரு உயிரையும், நமது உயிரைப்போல் தெய்வமாக மதித்துப் போற்றுவது மிகவும் சிறந்த கருணையுள்ள பண்பாடேயொழிய அபத்தமானதோ, தவருனதோ மூட நம்பிக்கையோ அல்ல.

நாகராஜா விட்டுக்குள் வந்தால் அடித்துக்கொல்லும் பழக்கம் இல்லை. தூரத்தில் விரட்டி விட்டு விடுவதே

வழக்கம். தவருன முறையில், கடிக்க வந்தால் மட்டுமே கொல்லப்படுகிறது.

## 79 தண்டனையிலிருந்து தப்ப முடியாது.

கேள்வி: பிரம்மா மனிதனைப் படைக்கிருன். எமன் சாகடிக்கிருன் என்ருல் அவர்களைப் படைத்து அழிப்பவர் யார்?

பதில்: "பிரம்மா மனிதரைப் படைத்தார்"– என்ருல் ஒவ்வொரு மனிதரிடத்திலும் விந்து அணுக்களாகிய உயிரணுக்களை அமைத்து, அவரவரும் தமது மனைவியிடம் கர்ப்பம் உண்டாக்கிக் குழந்தைகளைப் பெற்று வம்ச பரம்பரை விருத்தியடையும்படி செய்தவர் பிரம்மாவே" என்பது பொருள்

"எமன் சாகடிக்கிருன் என்ருல், நமது பாவ புண்ணியச் செயல்களுக்கேற்றவாறு, நமது உயிர்ச் சக்தியின் அலைகளை உடலிலிருந்து பிரித்து, மற்ற ஜீவன்களின் கர்ப்பங்களிலுள்ள விந்து அணுக்களில் ரேடியோ அலைகள் மூலம் சேர்ப்பிக்கிருர்" என்பது பொருள்.

பிரம்மாவையும், எமனையும் படைத்து நமது ஆதி முதல் கடவுளாகிய ஸ்ரீ மந் நாராயணரே ஆவார்,

பிரம்மாவாயிருந்தாலும், எமனுய் இருந்தாலும் மற்ற யாராயிருந்தாலும் அநீதி செய்தால், அநீதியாளர்களை அழிப்பது. சிவனும் அன்னை பார்வதி தேவியுமே இந்தப் பார்வதி தேவிக்கு, உமா தேவி, காளி தேவி, துர்க்கா தேவி என்று மற்றும் பல பல பெயர்களும் உண்டு

அதனுல், யாராயிருந்தாலும் அநீதி செய்பவர் ஒரு நாளும் தண்டனையிலிருந்து ஒருபோதும் தப்பவே முடியாது.

## 80. கல்லே கடவுள், தண்ணீரே கடவுள்.

கேள்வி; கல்லே கடவுள். தண்ணீரே கடவுள் என்றால் கடவுள் மீது நடக்கிறாய், தண்ணீரை அசுத்தப் படுத்துகிறாய், இவையெல்லாம் தரோகமில்லையா?

பதில்: ''கல்லே கடவுள்'' என்றால் – "கொஞ்சம் கல்லை எடுத்து அதை நன்றாகத் தூள் செய்து அதை ரஸாயண முறையில் பரிசோதனை செய்து பார்த்தால், அதில் எவ்விதமான அணுக்கள், ரஸாயணப் பொருள்கள் இருக்கிறதோ, அவ்விதமான அணுக்கள், ரஸாயணப் பொருள்களின் சேர்க்கையால் கடவுள் இக்கல்லை உண்டாக்கியிருக்கிறார்'' என்பது பொருள்.

''தண்ணீரே கடவுள்'' என்றால் – "கொஞ்சம் தண்ணீரை எடுத்து அதை ரஸாயண முறையில் பரிசோதனை செய்து பார்த்தால், அதில் எவ்விதமான ரஸாயணப் பொருள்கள் இருக்கிறதோ, அவ்விதமான ரஸாயணப் பொருள்களின் சேர்க்கையால் கடவுள் தண்ணீரை உண்டாக்கியிருக்கிறார் என்பது பொருள்.

இந்தப் பூமியிலும் நம் உடலிலும், மற்ற உயிரினங்களின் உடலிலும் சேரும் அழுக்குகளைச் சுத்தம் செய்யத் தண்ணீர் தேவை. அதனால் தண்ணீரை அசுத்தப் படுத்தாமல் இருக்க இயலாது என்பதற்காகவே, தண்ணீரிலேயே வாழ்ந்து கொண்டு, அசுத்தங்களையே சாப்பிட்டுக் கொண்டு உயிர் வாழும்படியாக மீன்களையும் நமது கடவுள் படைத்திருக்கிறார்.

அதனால் இவைகள் துரோகம் அல்ல

## 81. பழமையும் புதுமையும்.

கேள்வி: எடிசன் உழைப்பால் உண்டான மின் சாரத்தைக் கொண்டு, ஏழுமலையானுக்கு வெளிச்சம் போடுவதா? இது புராணத்தில் உள்ளதற்கு மாறுபாடல்லவா?

பதில்' எடிசன் கண்டு பிடித்த மின்சாரமே உமது அறிவுக்குத் தென்படுகிறது.

"சூரியனை உண்டாக்கி, அதன் மூலம் பூமி பூராவுக்கும் மற்ற சகல கிரஹங்களுக்கும் "அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாய்" ஒளியையும் உஷ்ணத்தையும், மின் சக்தி அலைகளையும் எங்கள் கடவுள் அனுப்பிக் கொண்டே இருப்பது" உங்கள் கண்களுக்கும் அறிவுக்கும் தெரியவில்லை.

பூமியைச் சுற்றி பிரம்மாண்டமான காற்று மண்டலத்தை அமைத்து. அதில் எலக்ட்ரான் நியூட்ரான், புரோட்டான் அணுக்களை ஓடிக் கொண்டே இருக்கும்படி. எங்கள் கடவுள் "அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளாக" இயக்கிக் கொண்டிருப்பது உங்கள் கண்களுக்கும அறிவுக்கும தெரியவில்லை.

அதனால், அறுநூத்தி இருபத்தி ஒன்பது கோடி ஆண்டுகளுக்கு முன்பாகவே. சூரியனின் மூலம் மின் சக்தி அலைகளும், எலக்ட்ரான், நியூட்ரான், புரோட்டான் அணுக்களையும் உண்டாக்கியிருப்பவர் எங்கள் கடவுள்.

ஏற்கனவேயுள்ள இந்த மின் சக்தியையும் அணுக்களையும் கம்பிகளில் பாய்ச்சி ஒளி விசச் செய்வதும் இயந்திரங்களை இயக்குவதும விஞ்ஞானி.

மண்ணை உண்டாக்கியிருப்பவர் எங்கள் கடவுள்

இந்த மண்ணைச் சிமிண்டாகவும் செங்கலாகவும் செய்து விடு கட்டுபவன் விஞ்ஞானி

பூமியில் இரும்பை அமைத்திருப்பவர் எங்கள் கடவுள்.

இந்த இரும்பைக் கொண்டு இயந்திரங்களை அமைத்து இயக்குபவன் விஞ்ஞானி

பழமையை அமைத்திருப்பவர் எங்கள் கடவுள்.

இந்தப் பழமையிலிருந்து புதுமையை உண்டாக்குபவன் விஞ்ஞானி,

அதனால் விஞ்ஞானி, "தானாக" எதையும் செய்ய வில்லை. எங்கள் கடவுள் அமைத்துள்ள மூலப் பொருள் களைக் கொண்டு பல புதிய பொருள்களைச் செய்கிறான். அவ்வளவுதான்.

அதனால், எடிசன் உழைப்பால் உண்டான மின் சாரத்தை ஏழுமலையானுக்கும் வெளிச்சம் போடுவது தவறல்ல புராணத்திற்கு மாறுபாடல்ல

## 82. நிவேதனம் என்றால் என்ன?

கேள்வி: கடவுள் எங்கும் இருக்கிறார் என்றால் சோறு உள்ள இடத்திற்கே அவர் சென்று சாப்பிடுவாரே. நீ ஏன் நிவேதனம் செய்கிறாய்?

பதில்: இந்தப் பிரம்மாண்டமான பூமியையும் இதி லுள்ள சகல உயிரினங்களையும் பொருள்களையும் படைத்து யாவும் நல்வாழ்வு வாழ்ந்து, பேரின்ப நிலை அடையச் செய்வதே நமது கடவுளின் பணி'

அதனால், "நிவேதனம்" என்றால், 'நமது கடவுளின் இந்த மகத்தான பணியில் நாமும் பங்குகொண்டு நமது பொருள்களையும், இந்தப் பணிக்குக் காணிக்கையாக அர்ப்பணம் செய்கிறோம்' என்பது பொருள்.

ஒரு பொருளை நாம் கடவுளுக்கு நிவேதனம் செய்யா விட்டால், அதை நாம் மட்டுமே, உபயோகப்படுத்து கிறோம். மற்ற யாருக்கும் கொடுப்பதில்லை

ஒரு பொருளை நாம் கடவுளுக்கு நிவேதனம் செய்து விட்டால் அது பொதுவுடமை ஆகிறது. அதை நாம் மட்டும் சாப்பிடுவதில்லை. பிரசாதம் என்று சொல்லி, அனைவருக்கும் கொஞ்சம் கொஞ்சம் கொடுக்கிறோம் இதன் மூலம் நமது பொருள் கொஞ்சமாய் இருந்தாலும் அதைப் பெற்றுக் கொள்பவருக்கு இன்பத்தை அளிக்கிறது.

"அதனால் நிவேதனம் என்றால் நமது பொருளைக் கடவுளின் பணிக்குக் காணிக்கையாக, அர்ப்பணம் செய்வது என்பது பொருள்"

"கடவுளுக்குச் சோறு போடுவது" என்பது பொருள் அல்ல.

## 83. பயத்தை உண்டாக்குவது எது?

கேள்வி: பயத்தை உண்டாக்கி, விதி, எமன், மகமாயி ராட்சதன் எனப் படைத்துக்கொண்டு, மக்களிடம் ஒரு கோழைத்தனத்தை உண்டாக்கி, அதன் மேலே கடவுள் என்னும் சமாதி மேடை (பொய் உருவம்) படைத்திருக்கிறான் என்றால் அது தவறா? பயமா உன்னைப் பணிய வைத்துப் பக்தனாக்கியது?

பதில்: பயத்தை யாரும் உண்டாக்குவதில்லை. நீ ஒரு திருட்டோ, கொலையோ, வேறு குற்றமோ, கொடுமையோ, அநீதியோ, துன்பமோ, செய்தால் உடனே அதற்குரிய சட்டப்படி உன்னைத் தண்டிக்கப் போலீஸ்காரர் பிடித்துப் போகிறார். "எனக்கு என்ன தண்டனை கிடைக்குமோ, இப்படித் தெரியாமல் செய்து விட்டேனே" என்று உனக்கு நீயே பயந்து கொண்டு சமாதி மேடை அமைத்துக் கொள்கிறாய்.

அதனால், ஒவ்வொருவருக்கும் பயத்தையும், கோழைத்தனத்தையும், உண்டாக்கி சமாதி மேடையையும் அமைப்பது, அவரவர் செய்யும் தவறுகளும், குற்றங்களும், கொடுமைகளும், அநீதிகளுமே யாகும்.

விதி என்பது நம்மை மீறிய ஒரு சக்தியாகும். இந்தச் சக்தியே பூமியைச் சுழற்றுகிறது கடலைக்காக்கிறது. காற்று வீசச் செய்கிறது சந்திரன் முதலிய கிரஹங்களைச் சுழற்றுகிறது. நம்மையும் மரணத்துக்கு ஆளாக்குகிறது. அதனால் இதில் பயப்படுவதற்கு எதுவும் இல்லை.

எமன் என்பது அவரவர் மரணத்தைக் குறிக்கும்

பிறந்த மனிதன் ஒரு நாள் இறக்க வேண்டியது நிச்சயம் அதனால், இதில் பயப்படுவதற்கு எதுவும் இல்லை.

மகமாயி என்பது கண்ணகியேயாகும் அநீதியாகத் தன் கணவனைக் கொன்ற மதுரைப் பாண்டியனைப் பழிக்குப் பழி வாங்கி அவனுடைய அரசையும் நாசம் செய்ததால், அவளை "மகமாயி அநீதி செய்தால் கொன்று விடுவாள்" என்று ஒவ்வொரு ஊரிலும் மாரியம்மனை வைத்து கோவில் கட்டி வணங்கிப் பூஜிக்கிறார்கள் அதனால், தவறும் குற்றமும் அநீதியும் செய்பவர்களே இந்த மக மாயிக்குப் பயப்படவேண்டும்.

"ராட்சதன் என்றால், அதிகமான, பிரம்மாண்டமான மனிதனால் செய்ய முடியாத காரியங்களைச் செய்யும் சக்தி" என்று பொருள்.

ரயில், பஸ், லாரி, முதலியவைகள் எல்லாம் ராட்ச தர்களே. ராட்சத சக்திகளே இவைகளும், நாம் தவறான வழியில் சென்றால் நம் மீது ஏறிக் கொன்று விடும்.

அதனால், சரியான காரியம் செய்பவர்கள் யாருக்கும் பயப்படுவதில்லை.

தவறும், குற்றமும், அநீதியும் செய்பவர்களே அனைத் துக்கும் பயப்படுகிறார்கள். கோழைகளாகிறார்கள் தமக்குத் தாமே சமாதி மேடை அமைத்துக் கொள்கிறார்கள்.

## 84. சாணியின் சக்தி.

கேள்வி: மாட்டு மூத்திரம், சாணி இவைகளை டெட்டால் போட்டு சுத்தப் படுத்தும் நீ, சாணியில் விநாயகர் செய்து வைத்து வணங்குகிறாயே? அப்படிச் செய்தால அது துர் நாற்றம் வீசாமல் இருக்கிறதா?

பதில்: "நம் வீட்டின் தரையில் உண்டாகும் விஷக் கிருமிகளைக் கொல்லும் சக்தி அணுக்கள் சாணியில் இருக் கிறது" என்று விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

அதனுல் தான், தினமும் நம் வீடுகளில் சாணி போட்டு மெழுகுவதும், வாசலில் தினமும் சாணி தெளிப்பதும் வழக்கமாக இருந்து வருகிறது.

அதே போல் பசு மாட்டின் மூத்திரத்திலும் நம் உடலில் உள்ள விஷக் கிருமிகளைக் கொல்லும் சக்தியிருக்கிறது அதனுல் தான் நம் வீடுகளில் எந்தச் சுப காரியம் செய்தாலும். தீட்டுக் கழித்தாலும் சொம்பில் தண்ணீர் எடுத்து அதில் கொஞ்சம் பசு மாட்டு மூத்திரம் (கோமயம் –கோசலம்) கலந்து பூஜை செய்து வீடு பூராவும் தெளிக்கும் பழக்கம் இருந்து வருகிறது.

அதனுல் "பசுவின் சாணியில் விஞயகர் செய்து வைத்துப் பூஜை செய்தால், வீட்டிலுள்ள விஷக் கிருமிகள் யாவும் நீங்கி வீடு சுத்தப்படும்" என்பது பொருள்.

ஆனுல், ஐந்து மணி நேரத்திற்கு மேற்பட்டால் கெட்டு துர் நாற்ற மடிக்க ஆரம்பிக்கும். அதனுல் புதிதாகவே உபயோகிப்பது வழக்கம்.

நாம் சாப்பிடும் உணவுப் பண்டங்களும் சாப்பிடும் போது மிகவும் ருசியாக இருக்கின்றன, ஆனுல் ஐந்து மணி நேரத்திற்குப் பின் ஜீரணமாகாமல் பாக்கியிருப்பவை யாவும். கெட்டு மலமாகி விஷமாகி, விஷக்கிருமிகள் ஏராளமாக உண்டாகியிருக்கின்றன: அதனுல்தான், நாம் மலம் கழிக்கும்போது மலம் சகிக்க முடியாத துர்நாற்றம் அடிக்கிறது.

## 85. சாகாவரம் பெற்றவர்கள் எங்கே?

கேள்வி: சாகாவரம் பெற்ற தேவர்கள், அடியார்கள் இவர்கள் இப்போது எங்கே இருக்கிருர்கள்? அவர்களுடைய விலாசங்கள் என்ன?

பதில்: நமது உடல் வேறு. ஆத்மாவாகிய உயிர் வேறு. இரண்டும் ஒன்றல்ல.

மரண காலத்தில் உடலைவிட்டு உயிர் போனதும் நாம் இதை நேரில் காண்கிரேம். உணர்கிரேம்.

"இவ்வாறு உயிர்போனதும் உடலை எரித்து அழித்து விடுகிறோம்." அதனால், "மனிதன்" என்றால் அழியக் கூடிய இந்த உடலைக் குறிக்காது

"உடலை விட்டுச் செல்லும் உயிர் அழிவதில்லை. தனது பாவ புண்ணியச் செயல்களுக்கேற்றவாறு மறு பிறவி எடுத்து வாழ்கிறது." அதனால் "மனிதன" என்றால் "ஆத்மாவாகிய இந்த உயிரையே குறிக்கும்."

அதனால், சாகாவரம் பெற்ற பக்தர்கள். அடியார்கள் யோகிகள், ஞானிகள், ரிஷிகள். முனிவர்கள், தவசிகள் முதலியவர்களுடைய ஆத்மாக்களாகிய உயிர்ச் சக்தி மின் அலைகள், அவர்களுடைய உடல் அழிந்தபின், உடலை விட்டு வெளியேறி வான மண்டலத்தில் என்றென்றும் நக்ஷத்திரங்களாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன

சப்தரிஷி மண்டலம் என்னும் ஏழு நட்சத்திரங்களும் காசியப மகரிஷி, அத்திரி மகரிஷி, வஷிஷ்ட்ட மகரிஷி விசுவாமித்திர மகரிஷி. கௌதம மகரிஷி, ஜமதக்னி மகரிஷி பாரத்துவாஜ மகரிஷி. என்ற ஏழு மகரிஷிகளின் ஆத்மாக்களாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளே யாகும். இவைகளை நாம் இன்றும் வான மண்டலத்தில் தினமும் நேரில் காண்கிறோம்.

துருவன் கதை தான் உங்கள் எல்லோருக்கும் தெரிந்திருக்கும். ஐந்து வயது முதல், தவம் செய்து தெய்வ தரிசனம் பெற்று, நீதி, நேர்மை, அன்பு, அஹிம்சை உண்மை, ஒழுக்கம் சத்தியம், சாந்தம், பண்பு, பக்தி தவறாமல் வாழ்ந்ததால், அவனுடைய ஆத்மாவாகிய உயிர்ச் சக்தி மின் அலைகள் மிக மிகப் பிரம்மாண்டமான சக்தியுடையதாக வளர்ந்து அவனுடைய மரணத்திற்குப் பின் "துருவ நட்சத்திரமாக" வான மண்டலத்தில் பிரகாசித்துக் கொண்டிருப்பதை நாம் இன்றும் தினமும் நேரில் காண்கிறோம்,

இதே போலவே, வான மண்டலத்தில் நாம் தினமும்

நேரில் காண்கிற கோடிக்கணக்கான நட்சத்திரங்கள் யாவும், இந்தப் பூமி தோன்றியது முதல் இன்றுவரை, வாழ்ந்து, மரண மடைந்துள்ள, உத்தம பெரியார்கள், பக்தர்கள், அடியார்கள், ஞானிகள், ரிஷிகள் யோகிகள், முனிவர்கள், முதலியோருடைய ஆத்மாக்களாகிய உயிர்ச் சக்தி மின் அலைகளே யாகும்

''வானத்தில் நாம் தினமும் காணும் கோடிக்கணக்கான நக்ஷத்திரங்கள் யாவும ஞூரியனிடமிருந்து சிதறி விழுந்துள்ள துண்டுகளேயாகும்'' என்று சில மேல் நாட்டு விஞ்ஞானிகள் கூறுவது உண்மை அல்லவே அல்ல.

இவ்விதம் சில துண்டுகள் இருக்கலாம் ஆனல் முற்றிலும இந்தத் துண்டுகள் அல்ல

சப்த ரிஷிமண்டலம் போலும், துருவ நட்சத்திரம் போலும் மற்ற நட்சத்திரங்கள் யாவும், இதுவரை தோன்றி மறைந்துள்ள பெரியோர்கள். பக்தர்கள், 'ஞானிகள், யோகிகள், ரிஷிகள் முனிவர்கள், அடியார்களுடைய ஆத்மாக்களாகிய உயிர்ச் சக்தி மின அலைகளேயாகும்.

மேல் நாட்டு விஞ்ஞானிகளும் நாளடைவில் இதை ஒப்புக்கொளவார்கள் எனபது நிச்சயம்.

## 86. ஓராயிரம் தெய்வங்கள் எதற்கு?

கேள்வி: கடவுள் ஒருவரே என்பது உண்மையானல் ஓராயிரம் தெய்வங்களை உண்டாக்கியது யார்? அவைகள் எதற்கு?

பதில்: நம்மைப் பெற்று வளர்க்க நமது ''தாயாகக்'' கடவுள் வருகிறார்.

நமக்கு வேண்டியது யாவற்றையும் செய்ய நமது ''தந்தையாகக்'' கடவுள வருகிறார்.

நமக்குக் கல்வி போதித்து சிறந்த அறிஞராக ஆக்குவதற்கு 'ஆசிரியராகக்'' கடவுள் வருகிறார்.

நமக்கு அன்புடன் பணிவிடைகள் செய்ய ''மனைவியாகக்'' கடவுள் வருகிறார்.

பசித்தவனுக்கு ''உணவாகக்'' கடவுள் வருகிறார்

துன்பப் படுபவனுக்கு ''தோழனாகக்'' கடவுள் வருகிறார்.

வறுமையைப் போக்கி வாழ்வை வளப்படுத்த ''வேலையாகவும் தொழிலாகவும்'' கடவுள் வருகிறார்

பசிக்கிறவனுக்கு யார் உணவு அளிக்கிறார்களோ அவரையே அவன் தெய்வமாக வணங்கிப் பூஜிக்கிறான்

வேலையற்றவனுக்கு யார் வேலை கொடுகிறார்களோ. அவரையே அவன் தெய்வமாகப் போற்றி வணங்குகிறான்.

அறிவற்றவனுக்கு யார் அறிவையும ஞானத்தையும் போதிக்கிறார்களோ அவரையே அவன் தெய்வமாகப் போற்றி வணங்கிப் பூஜிக்கிறான்.

அதுபோல் அவரவரின் தேவையை யார் பூர்த்தி செய்கிறார்களோ அவரையே அவரவரும் தெய்வமாகப் பூஜித்துப் போற்றி வணங்குகிறார்கள்,

பகுத்தறிவாளர்கள் பெரியாரைத் தெய்வமாக ஏன் பூஜித்து வணங்குகிறார்கள்?

திராவிட முன்னேற்ற கழகக்காரர்கள் அண்ணாவைத் தெய்வமாக ஏன் பூஜித்து வணங்குகிறார்கள்?

ஆத்மீக ஞானத்தைத் தேடுபவர்கள் சிறந்த சந்நியாசிகளைத் தெய்வமாகப் பூஜித்து வணங்குகிறார்கள்,

இப்படி அவரவர் விருப்பத்தைப் பூர்த்தி செய்பவர்களையே அவரவர் தெய்வமாகப் பூஜித்து வணங்குவதால் தான ஓராயிரம தெய்வங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

இதனால் உங்களுக்கு எவ்விதமான இடையூரோ கஷ்டமோ நஷ்டமோ இல்லை

நீங்களும் உங்களுக்கு விருப்பமானவரைத் தெய்வமாகப் பூஜித்து வணங்கலாம்,

## 87. ஏழைகளின் விரோதி யார்?

கேள்வி: மக்கள் பசியால் வாடிக்கொண்டிருக்கையில் ஆலயத்தில் ஆண்டவன் மேல். பால், தயிரை ஊற்றி, நாசப்படுத்துவதன் பலன் என்ன? அதைப் பத்து ஏழைகளுக்குக் கொடுத்தால் அவர்கள் பசி தீருமே?

பதில்: நெருப்பின் மீது தண்ணீரை ஊற்றினால் உடனே ஆவி உண்டாகிறது. இந்த ஆவியே ரயில் இஞ்ஜினை இழுத்துச் செல்கிறது. மற்றும் பல விதமான இயந்திரங்களை இயக்கி மகத்தான சாதனைகள் புரிகிறது

முன் காலத்தில் தீப்பெட்டி இல்லாத போது இரண்டு வெள்ளைக் கல் துண்டுகளை ஒன்றுடன் ஒன்று உரசி, அதிலிருந்து உண்டாகும் தீப்பொறியினாலேயே நெருப்புப் பற்ற வைத்தார்கள். விளக்கு ஏற்றினார்கள்.

அதனால், வெள்ளைக் கல் திலைகளில் தீப்பொறியை உண்டாக்கக்கூடிய மின்சக்தி அலைகள் உள்ளன என்பது இதன்மூலம் நிரூபணமாகிறது. மந்திரங்கள் ஜெபிப்பதன் மூலம் இந்த மின் சக்தி மேலும் மேலும் பதிவு செய்து, அதிகப்படுத்தப்படுகிறது

அதனால், இவைகளின் மேல் பாலும் தயிரும் ஊற்றும் போது நெருப்பில நீர் விடும்போது ஆவி உண்டாவது போல் சக்தி அலைகள் வெளிப்பட்டு, முன்னால் நிற்பவர்களின் உள்ளத்திலும், இதயத்திலும் பாய்ந்து அவரவர் கோரிக்கை நிறைவேறுவதற்கு வேண்டிய சக்தியை அளிக்கிறது. அதனாலேயே இவ்வித அபிஷேகங்கள் செய்யப்படுகின்றன. அதனால் இவைகள் வீணானவை அல்ல,

இவ்விதம் ஒரு சில லிட்டர் அளவுள்ள பாலும் தயிரும் ஒரு சில ஏழைகளுக்குக் கொடுப்பதால் போதுமான நன்மை உண்டாகி விடாது

இன்று உலக அரசியல் வாதிகள் "ஒரு நாளைக்குச் சுமார் ஐயாயிரம் கோடி ரூபாய்களுக்கு மேல்" செலவு

செய்து பாதுகாப்பு யுத்தத்தின் பேரால். நமது சகோதரர்களைக் கொன்று குவிப்பதற்காகப் பயங்கரப் படு கொலை ஆயுதங்களைச் செய்து குவித்துக் கொண்டிருக்கிருர்கள். இது மகத்தான அநீதியானது

''இவர்கள் இவ்விதம் மனித வாழ்வுக்கு நல் வாழ்வு அளிக்கும் செல்வங்களைப் பாழாக்கி, இவ்விதம் பயங்கரப் படுகொலை ஆயுதங்களை உற்பத்தி செய்து குவிப்பதால் தான்'' உலகில் மூன்றில் இரண்டு பங்குப் பேர்கள் – சுமார் முன்னூறு கோடிப் பேர்கள் – பசியாலும், பஞ்சத்தாலும், பட்டினியாலும். வாழ வேண்டிய நிர்ப்பந்த நிலை ஏற்பட்டிருக்கிறது

' இவ்விதம் பயங்கரப் படுகொலை ஆயுதங்கள் செய்து குவிப்பதற்காகச் செலவு செய்யப்படும் செல்வங்கள் யாவற்றையும் நிறுத்தி, ஏழைகளின் நல் வாழ்வுக்குச் செலவு செய்தால், பத்தே ஆண்டுகளில் உலகம் பூருவும் உள்ள– சுமார் முன்னூறு கோடிப் பேர்களுக்குள்ள பஞ்சமும், பசியும், பட்டினியும் பறந்து விடும்''

''அதனுல் இவ்விதம் செய்யாத உலக அரசியல் வாதிகளே, ஏழைகளின மகத்தான விரோதிகள் ஏழைகளின மகத்தான துரோகிகள் ஆவார்கள்''

''அதனுல் ஆண்டவனுக்கு அபிஷேகம் செய்வதை நிறுத்தச் சொல்லும் பகுத்தறிவாளர்கள், இவ்விதம் அரசியல் வாதிகள் பயங்கரப் படுகொலை ஆயுதங்களை உற்பத்தி செய்து குவிக்காமல் அதை நிறுத்துவதற்குப் பாடு படுவதே அவசியமானது அவசரமானது''

## 88. புராணங்கள் எதற்கு?

கேள்வி: புஷ்பக விமானம் போனது அன்று, போயிங் விமானம் வந்துள்ளது இன்று, அசரீரி கேட்டார்கள் அன்று, வானெலி கேட்கிருேம் இன்று. ஞானக்கண்ணுல் கண்டார்கள் அன்று, டெலிவிஷனைப் பார்க்கிருேம்

இன்று. புராண காலத்தை விஞ்ஞான உலகம் வென்று விட்டது இன்று அதனால் இன்னமும் புராணத்தை நம்பு வதில் அர்த்தமென்ன?

பதில்: புராணங்கள் என்பது யாவும் முன் காலத்திய "வரலாறுகள்" ஆகும்

நமது வருங்கால சந்ததிகள் இன்றைய நிகழ்ச்சிகளை அறிந்து கொள்வதற்காக வரலாறுகளையும் சரித்திரங்களை யும் எழுதி வைக்கிறோம் இது அவசியமில்லையா? தேவை யற்ற செயலா? அல்ல.

அதுபோல், இன்றுள்ள நாம் அறிந்து கொள்வதற் காக, முன் காலத்திய நிகழ்ச்சிகளை, வரலாறுகளை, எழுதி வைத்திருக்கும் இலக்கியங்களே, புராணங்கள் ஆகும். அதனால் வரலாறுகள் வேண்டாமா?

அன்று "புஷ்பக விமானம்" என்று இருந்ததை— இன்று சில மாறுதல்கள் செய்து 'போயிங் விமானம்" என்று பெயர் மாற்றியிருக்கிறார்கள். இதில் அதிசயமோ ஆச்சரியமோ எதுவும் இல்லை.

அன்று "அசரிரி" என்று இருந்ததை— இன்று சில மாறுதலகள் செய்து "வானொலி" என்று பெயர் மாற்றி யிருக்கிறார்கள் அவ்வளவுதான் இதில் அதிசயமோ ஆச்சரியமோ எதுவும் இல்லை.

அன்று "ஞானக்கண்" என்று விளங்கி வந்ததை— இன்று சில மாறுதல்கள் செய்து "டெலிவிஷன்" என்று பெயர் மாற்றியிருக்கிறார்கள். அவ்வளவுதான் இதில் அதிச யமோ ஆச்சரியமோ எதுவும் இல்லை.

அதனால் புராண காலத்தை இன்று விஞ்ஞான உலகம் வென்று விடவில்லை, சூரியனை மாற்றி விடவில்லை. சந்திர னையும். மற்ற கிரகங்களையும் மாற்றி விடவில்லை "கடலைக் கரை கண்டு விடவில்லை" பூமியில் எவ்வித மாற்றமும் செய்ய வில்லை, "மழை பெய்யாத போது மழையைப் பொழி

விக்க விஞ்ஞானிகளால் முடியவில்லை'' ''ஒரு ஈ, கொசு வுக்குக்கூட உயிர் கொடுக்க எந்த விஞ்ஞானியாலும் இயலாது'' ''புயலையும் காற்றையும் நிறுத்த விஞ்ஞானி களால், பூகம்பத்தை நிறுத்த விஞ்ஞானிகளால் இயலாது. கடல் அலை வீசாமல் ஒரு மணி நேரம் கூட நிறுத்த எந்த விஞ்ஞானியாலும் இயலாது ' இதுபோல் விஞ்ஞானிகளால் செய்யமுடியாத காரியங்கள்'' இன்னும ஏராளமாக இருககின்றன.''

''அதனால், ''விஞ்ஞானிகளால் செய்யமுடியாத ஏராள மான காரியங்கள் யாவும் எப்படிச் செய்யப்பட்டிருக் கின்றன'' என்ற விபரங்கள் யாவும் புராண சாஸ்த்திரங் களிலும் வேதங்களிலும் வரலாறுகளிலும் இருக்கின்றன.''

அதனால், புராண சாஸ்த்திரங்கள் யாவும் மிக மிக அவசியமாகத் தேவை தேவை தேவை.

## 89. நோபம் கொடிது.

கேள்வி : சந்திரன் சிவன் தலையில் உள்ளது. கங்கையும் அங்கேதான் உள்ளது என்றால் சந்திரனில் இறங்கிய மனிதன சிவன் தலையிலும் கால் வைத்து விட்டான். கங்கை வானத்திலிருந்து கிளம்புகிறதா? பூமி யிலிருந்துதானே கிளப்புகிறது ஏன் புராணத்தில் அப்படித் திரிக்கப்பட்டிருக்கிறது,

பதில்: நமது நாட்டு சர்க்காரில் அநீதிகளையும் கொடுமைகளையும் குற்றங்களையும்' ஒழித்து நீதியைக் காக்க போலீஸ் இலாகாவும் போலீஸ் மந்திரியும் இருக்கிறார்கள்

அதுபோல் தெய்வ சர்க்காரில், அநீதியையும் கொடு மைகளையும் குற்றங்களையும அழித்து நீதியைக் காக்க ''அழிவு இலாகா மந்திரியாக'' இருப்பவர் பரமசிவன் ஆவார்.

பூமியிலுள்ள அநீதிகளையும் கொடுமைகளையும் ஒழிக்க இவருடைய தலையில் உள்ள சஹஸ்ரார நரம்புகளில்

ஏராளமான மின் சக்தி அலைகள் உள்ளன. இச்சக்தியின் மூலம் பூமியில் எங்கு அநீதியும் கொடுமையும் நடந்தாலும் இச்சக்தியைப் பாய்ச்சி யாவற்றையும் அழித்து விடுவார்.

இதையே "சிவன் நெற்றிக் கண்ணைத்திறந்து நெருப்பைப் பாய்ச்சி யாவற்றையும் எரித்து அழித்து விடுவார்" —என்று புராண வேத சாஸ்த்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது

டைபாய்டு ஜுரம் என்னும் விஷ ஜுரம் கடுமையாக அடிக்கும்போது, அந்த ஜுரத்தின் கடுமையைக் குறைக்க நோயாளியின் தலையில் ஐஸ் வைத்து டாக்டர்கள் கட்டுவதை நீங்கள் பார்த்திருப்பீர்கள்.

அதுபோல், சிவபெருமானுக்கு கோபம் அதிகமாகாமலும், சிறு சிறு காரியங்களுக்கெல்லாம் நெற்றிக் கண்ணை திறந்து உஷ்ண சக்தியை வெளியாக்காமல் "சாந்தமாக இருப்பதற்காகச்" சந்திரனின் குளிர்ச்சி அலைகளைத் தலையில் வைத்துக் கொண்டிருக்கிறார். இதுவே சந்திரன் சிவன் தலையில் இருப்பதாகக் காட்டியிருப்பதன் பொருள்.

டைபாய்டு ஜுரத்திற்கு ஐஸ் வைத்துக் கட்டுவது போல், சிவபெருமானின தலையிலுள்ள ஏராளமான மின் சக்தி அலைகள் அதிக உஷ்ணமடையாமல் சமன நிலையில் இருப்பதற்காக ஐஸ் கட்டிபோல் நீர்ச் சக்தி அலைகளையும் தலையில் வைத்திருக்கிறார் இதையே "கங்கையைத் தலையில் வைத்துக்கொண்டிருக்கிறார்" — என்று காட்டப்பட்டு இருக்கிறது

## 90. சமாதி யாருக்கு?

கேள்வி: உண்மையிலேயே கடவுள் இருந்தால் பல வருஷங்களாக அவரைச் சமாதி வைக்கத் துடிக்கும் எங்களை அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லையே ஏன்?

பதில்: நீங்களெல்லாம் வெறும் "வாய்ப்பேச்சு வீரர்களே தவிர செயல் வீரர்கள் அல்ல."

நீங்கள் சொல்வதுபோல் ஒருபோதும் எங்கள் கடவுளைச் சமாதி வைக்க உங்களால் இயலவே இயலாது. அதனால்தான் உங்களை ஒன்றும் செய்யவில்லை.

நீங்கள் எங்கள் கடவுளைச் சமாதி வைக்க வேண்டு மானால், எங்கள் கடவுளின் படைப்பில் ஒரு சிறு அம்சமாகிய இந்தப் பூமியை ஒரு மணி நேரமாவது "சுழலாமல்" நிறுத்த வேண்டும். இது உங்களால் முடியுமா?

எங்கள் கடவுளின் படைப்பில் ஒரு சிறு அம்சமாகிய கடல், "அலை வீசாமல்" ஒரு மணி நேரமாவது நிறுத்த வேண்டும் இது உங்களால் முடியுமா?

எங்கள் கடவுளின் படைப்பில் ஒரு சிறு அம்சமாகிய சூரியனைப் "பகலில் ஒளி வீசாமல்" ஒரு மணி நேரமாவது தடுதது நிறுத்த வேண்டும். இது உங்களால் முடியுமா?

இந்த ஒரு மணி நேர வேலை கூடச் செய்ய உங்களால் முடியா விட்டால், நீங்கள் எங்கள் கடவுளையே தூக்கிப் போய்ச் சமாதி வைப்பது எப்படி?

நீங்கள் எங்கள் கடவுளைச் சமாதி வைக்கும் முயற்சி யில் ஈடுபட்டால், உங்களை நீங்களே சமாதி வைத்துக் கொள்வதைத் தவிர வேறு எதுவுமே செய்ய இயலாது.

அதனால்தான் எங்கள் கடவுள் உங்களை ஒன்றும் செய்யவில்லை.

## 91. உலகம் ஒரே குடும்பம்.

கேள்வி: தேசப் பாதுகாப்பின் பேராலும், யுத்தத் தின் பேராலும் ஒரு நாளைக்குச் சுமார் ஐயாயிரம் கோடி ரூபாய்களைச் செலவு செய்து பயங்கரப் படுகொலை ஆயுதங் களைச் செய்து குவிக்கும் அரசியல்வாதிகளைத் தடுக்க இன்றைய நிலையில் என்ன செய்ய வேண்டும்?

பதில்: இன்றைய நிலையில் ஐக்கிய நாடுகள் சபையே உலக சமாதானத்தைப் பாதுகாப்பதற்கான ஒரே

ஸ்தாபனமாக இருக்கிறது. இந்த ஐ நா. சபையில் சுமார் நூற்றி நாற்பது நாடுகள் சேர்ந்து அங்கம் வகின்கின்றன.

இந்த சபையில், அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ் ரஷ்யா, சைனு ஆகிய ஐந்து பெரிய வல்லரசுகளுக்கு "ரத்து அதிகாரம்" என்னும் அநீதி அதிகாரம் இருக்கிறது.

இந்த சபையிலுள்ள, "நூற்றி நாற்பது நாடுகளும் சேர்ந்து" ஒரு நல்ல காரியத்தையும, ஒரு நல்ல தீர்மானத்தையும் கொண்டு வந்து நிறைவேற்றினுலும் கூட இந்த ஐந்து வல்லரசுகளில் ஏதாவது ஒன்று. இந்தத் தீர்மானம தனக்குப் பிடிக்கவில்லையானல், உடனே இந்தத் தீர்மானத்தை தனது ரத்து அதிகாரத்தின் மூலம் நிறை வேற்ருமல் தடுத்து அழித்து ஒழித்துவிடும்.

இவ்வாறு "நூற்றி நாற்பது நாடுகள் சேர்ந்து" நிறைவேற்றும் ஒரு நல்ல தீர்மானத்தை "ஒரே ஒரு நாடு" தடுத்து நிறுத்தி. அழித்து ஒழித்து விடும் மகத்தான அநீதியை ஐந்து வல்லரசுகளும் செய்து வருவதால்தான் ஐ. நா. சபை பலமிழந்து, உலக சமாதானத்தைச் சரியான படி நிறைவேற்றி பாதுகாக்க முடியாமல் இருக்கிறது.

ஐந்து வல்லரசுகள் செய்யும் இந்த மகத்தான அநீதி ஹிட்லரின் அநீதிகளைவிடக் கொடுமையானது. ரஷ்யாவின் ஜார் மன்னனின் ஆட்சியையும அநீதியையும் விட அதிகமானது. எவராலும் சகிக்க முடியாது.

அதனுல், "ஐ. நா. சபையில் ஐந்து வல்லரசுகளுக்கும் உள்ள ரத்து அதிகாரம் ரத்து செய்யப்பட்டுவிட்டது. இனிமேல் சகல காரியங்களுக்கும் மூன்றில் இரண்டு பங்கு ஓட்டு மெஜாரிட்டிப்படியே சகல நாடுகளும் கட்டுப்பட்டு நடக்க வேண்டும்" – என்று 'நமது இந்தியா தீர்மானம் கொண்டு வந்து நிறைவேற்ற வேண்டும்.

இப்படி நிறைவேற்றிவிட்டால், பின்பு ஐந்து வல்லரசு களும் தனது ரத்து அதிகாரத்தின் மூலம் நூற்றி நாற்பது

நாடுகள் சேர்ந்து நிறைவேற்றும் நல்ல தீர்மானங்களைத் தடுத்து அழித்து ஒழிக்கும் அநீதியைச் செய்யமுடியாது.

மேலும் ஒவ்வொரு தேசமும் தன்னிடமுள்ள படைகளிலும், ஆயுதங்களிலும், தனது உள்நாட்டுத் தேவைக்கானவைகளை மட்டும் வைத்துக்கொண்டு பாக்கியை ஐ.நா. சபையிடம் ஒப்படைத்துவிடவேண்டும்.

இப்படி ஒப்படைக்கும் படைகளையும், ஆயுதங்களையும் ஐ. நா. சபை தன் பொறுப்பில் வைத்துக்கொண்டு எங்காவது, எப்போதாவது, ஹிட்லர், முஸோலினி போன்ற அரக்கர்கள் தோன்றினால் அவர்களை அழிப்பதற்கு மட்டும் இந்த ஆயுதங்களைப் பயன்படுத்தி அவர்களை அழித்து ஒவ்வொரு நாட்டின் எல்லையையும். சமாதானத்தையும் பாதுகாத்து உறுதி செய்ய வேண்டும்.

இப்படிச் செய்தால், எல்லா நாட்டின் பாதுகாப்பும் ஐ. நா. சபையைச் சேர்ந்து விடும். அதனால் ஒவ்வொரு நாடும் தனது பாதுகாப்புக்காக ஏராளமான படைகளையும் வைத்துக்கொண்டு ஆயுதங்களையும் செய்து குவிக்க வேண்டிய அவசியமில்லை

அதனால், ஒவ்வொரு நாடும் தனது பாதுகாப்புக்காகவும் படைகளுக்காகவும், ஆயுதங்களுக்காகவும், ஏராளமாகச் செலவு செய்யும். பலபல கோடிக்கணக்கான ரூபாய்களையும் செல்வங்களையும் ஏழைகளின் நன்மைகளுக்கும் முன்னேற்றத்திற்கும் செலவு செய்து ஒவ்வொருவருக்கும் நல்வாழ்வை நிலைநாட்டலாம். இதுவே சரியான வழி

இப்படிச் செய்தால் பயங்கரப் படுகொலை ஆயுதங்களை உற்பத்தி செய்து குவிப்பதைத் தடுத்து. அதற்ாகும் செல்வங்களை அந்தந்த நாட்டின் ஏழைகளின் நன்மைக்காகச் செலவிட்டு அனைவருக்கும் நல்வாழ்வையும் நிலைநாட்டலாம்.

இதன் மூலம் உலகம் ஒரே குடும்பம். உலகினர் யாவரும் ஒரே சகோதரர்கள் என்ற லெக்ஷியத்தை நிலைநாட்டலாம். இதற்கு ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாளும் தவறுமல் உழைத்துப் பாடுபட்டு பணிபுரிய வேண்டும்

## 92. பிராமணர் – சூத்திரர்.

கேள்வி: மனிதர்கள் யாவரும் கடவுளின் குழந்தைகள், அனைவரும் ஒரே சகோதரர்களே! என்று ஹிந்து சாஸ்த்திரங்களும் சகல மதங்களும் வேதங்களும் கூறுகின்றன. அப்படியிருக்கப் பிராமணர், சூத்திரர் மற்றும் பல ஜாதி வேற்றுமைகள் ஏன் இருக்கின்றன?

பதில்: ஒருவர் வக்கீல் தொழில் செய்து வந்தால் அவருடைய பெயர் தெரிந்தவர்களும் தெரியாதவர்களும் "வக்கீல் சார்" என்றே கூப்பிடுகிருர்கள்.

ஒருவர் டாக்டர் தொழில் செய்து வந்தால் அவருடைய பெயர் தெரிந்தாலும், தெரியாவிட்டாலும் "டாக்டர் சார்" என்றே கூப்பிடுகிருர்கள்.

ஒருவர் தச்சு வேலை செய்து வந்தால் அவரை "ஆசாரி" என்றே கூப்பிடுகிரேும்.

கடை வைத்து வியாபாரம் செய்பவர்களை "கடைக்காரர்–வியாபாரி" என்றே கூப்பிடுகிரேும்

கலெக்டர் உத்தியோகம் பார்ப்பவர்களைக் "கலெக்டர் சார்" என்றே கூப்பிடுகிரேும்

தாசில்தார், இன்ஸ்பெக்டர், ஆசிரியர், கிளர்க், இஞ்சினியர், செகரெட்ரி, பியூன், மேஸ்திரி மானேஜர் என்று அவரவர் உத்தியோகப் பெயர்களையே சொல்லிக் கூப்பிடுகிரேும்

இப்படிக் கூப்பிடுவதால் அவரவரும் பெருமை அடைகிருர்களே தவிர, இழிவாக யாரும் கருதுவதில்லை,

அதுபோலவே, முன்காலத்திலும் அவரவர் தொழில் உத்தியோகப் பெயரையே சொல்லிக் கூப்பிடும் பழக்கம் இருந்து வந்தது.

வேதம் ஓதுபவர் வேதியர், பிராமணர் என்று அழைக்கப்பட்டார்கள். அதுபோலவே அவரவர் செய்யும் தொழில் பெயரையே சொல்லி அழைக்கப்பட்டார்கள்

விவசாயமே அனைவருக்கும் உணவு அளிக்கும் பிரதான தொழிலாக இருப்பதால், இந்தத் தொழிலின் பெயரைச் "சூத்திரம்" என்று வைத்தார்கள். சூத்திரம் என்றால் அனைத்துக்கும் ஜிவாதாரமானது, உயிர்நிலை யானது என்று பொருள் .

அதனால், விவசாயம் செய்பவர்களைச் "சூத்திரதாரிகள்" என்று அழைத்து வந்தார்கள். இந்தச் சூத்திரதாரிகள் என்றசொல் நாளடைவில் உச்சரிப்பில் சுருங்கி சூத்திரர் என்று வழங்கி வருகிறது.

அதனால், சூத்திரர் என்றால் விவசாயி என்றே பொருளே தவிர மட்டமான ஜாதி என்று பொருள் அல்ல.

இப்போதும் விவசாயத் தொழில் செய்பவர்களை விவசாயி என்றே அனைவரும் அழைத்து வருகிறார்கள். அதனால், அவர்கள் பெருமையடைகிறார்களே தவிர சிறுமை அடைவதில்லை.

அதனால் முன் காலத்திலும், இப்போதும் அவரவர் செய்யும் தொழிலின் பெயரைச் சொல்லியே அழைக்கும் பழக்கம் இருந்து வருவதால், "தொழிலை ஒரு ஜாதி" யாகக் கருதுவது தவறு

அதனால், தொழிலின் பெயரைச் சொல்லி அழைப்பது மட்டமானதோ, இழிவானதோ அல்ல. சகல தொழில்களும் வேலையும் உயர்வானதே சமமானதே சிறப்பானதேயாகும்.

## 93. பொய்க் கதைகளின் பயன்.

கேள்வி: ராமாயணத்தில் "ஹனுமார் சஞ்சீவி

மலையைத் தூக்கிக்கொண்டு இலங்கைக்குக் கடலைத் தாண்டி சென்ருர்" என்று குறிப்பிட்டிருக்கிறது. ஒரு குரங்கு ஒரு மலையைத் தூக்கிக்கொண்டு கடலைத் தாண்டிச் செல்ல முடியுமா? இது பொய் அல்லவா? இப்படிப்பட்ட பொய்கள் நிறைந்த கதைகளையே புனிதமானதாகப் போற்றி வருவது சரியா? பொய்களைப் பரப்புவதுதான் பக்தியா?

பதில்: இன்று உலகம் பூரும் சுமார் ஐம்பது கோடிக்கு மேற்பட்ட கற்பனைக் கதைகள் நிறைந்த நூல்களும், பத்திரிகைகளும் இருக்கின்றன இவைகளில் வரும கற்பனைக் கதைகள் யாவற்றையும் இளைஞர்களும் யுவதிகளும பெரியவர்களும் பெண்களும் படிக்கிருர்கள். மிக்க ஆர்வத்துடனும் தீவிரமாகவும் படிக்கிருர்கள்.

இந்த நூல்கள் பத்திரிகைகள் யாவற்றிலும் "இதில் குறிப்பிடடுளள சம்பவங்களும் பெயர்களும் யாவும் கற்பனையே உண்மை அலல" – என்று தலைப்பிலேயே பிரசுரிக்கிருர்கள்.

இதைப் பார்த்த பின்பும் இந்த உண்மையல்லாத கற்பனைப் பொய்க் கதைகளைக் கோடிக்கணக்கானவர் ஏன படிக்கிருர்கள்?

"இந்தப் பொய்க் கதைகளின் மூலம், சமூகத்தின் குறைகளை போக்கி, சிறந்த முன்னேற்றமடையும் போதனைகளும், படிப்பினைகளும, வழிமுறைகளும விளக்கிக் காட்டப்பட்டிருக்கின்றன" என்பதற்காகவே ஆர்வத்துடன் அனைவரும் படிக்கிருர்கள

இதே போலவே, ராமாயணம் மகாபாரதம் முதலிய புராணக் கதைகள் பொய்யாயிருந்தாலும்கூட அவற்றில் ஏராளமான நீதி போதனைகளை விளக்கிக் காட்டப்படுகின்கின்றன என்பதற்காகவே அவைகளைப் புனிதமானதாகப் போற்றப்படுகின்றன.

ஹனுமார் சஞ்சீவி மலையைத் தூக்கிக்கொண்டு இலங்கைக்கு கடலைத் தாண்டிச் சென்றது பொய்யாக

இருக்கலாம். ஆனால், இன்று பல நூறு டன் எடையுள்ள சாமான்களைச் சுமந்துகொண்டும், முன்னூறு பிரயாணிகளை ஏற்றிக்கொண்டும், விமானங்கள் கடலைத் தாண்டி பல ஆயிரம் மைல்கள் செல்வதை நாம் நேரில் காண்கிறோம்.

அதனால், "இப்படிப்பட்ட மகத்தான சக்திகள் மனிதருக்கு உண்டு" என்பதை முன்பே விளக்கிக் காட்டவே அந்தப் பொய்க்கதைகள் இயற்றப்பட்டிருக்கின்றன,

அதனாலேயே, அவைகளில் குறிப்பிட்டபடி பெரும்பாலும் நடைபெறுவதாலேயே அவற்றைப் புனிதமானதாக போற்றுகிறோம். இது தவறு அல்ல மூட நம்பிக்கை அல்ல முட்டாள்தனமானது அல்ல

## 94. ஏழு உலகங்களும், ஏழு கடல்களும்.

கேள்வி: இந்தப் பூமியின் மீது ஏழு உலகங்களும், ஏழு கடல்களும் இருப்பதாக ஹிந்து மத புராண வேத சாஸ்த்திரங்கள் கூறுகின்றன. இவை எப்படி எங்கு இருக்கின்றன? விஞ்ஞான முறையில் படத்துடன் விளக்கிக் காட்ட வேண்டும்.

பதில்: நமது புராண இதிகாசங்களில் முக்கியமானதாகிய பாகவதத்தில் பஞ்சமஸ்கந்தம் இருபதாம் அத்தியாயத்தில் கூறியுள்ளபடி. இதன் விவரங்களையும் கீழே விளக்கிப் படமும் பின் பக்கத்தில் போடப்பட்டிருக்கிறது.

அமெரிக்கா, ரஷ்யா விஞ்ஞானிகள் சந்திரனுக்குச் செல்வது போல், வானவெளிக் கப்பல்களில் தென் துருவத்திலிருந்து தெற்கு நோக்கிச் சென்றால் இவைகளை நேரிடையாகக் காணலாம்.

பின்பக்கத்தில் கண்ட படத்தில் ஒன்று என்று இலக்கமிட்டுக் காட்டியிருப்பது நாம் வசிக்கும் உலகமாகும். முதலாவது உலகமாகும்.

## இந்த ஏழு உலகங்களையும், ஏழு கடல்களையும் காட்டும் படம்.




1 நாம் காண்கிற முதலாவது உலகம்
2 நாம் காண்கிற உப்புநீர் கடல்
3 பிலட்சத்தீவு என்னும் இரண்டாவது உலகம்
4 கரும்புச்சார்க் கடல் என்னும் இரண்டாவது கடல்
5 சால்மலித்தீவு என்னும் மூன்றாவது உலகம்
6 தேன்கடல் என்னும் மூன்றாவது கடல்
7 குசத்தீவு என்னும் நான்காவது உலகம்
8 நெய்க்கடல் என்னும் நான்காவது கடல்
9 கிரௌஞ்சத்தீவு என்னும் ஐந்தாவது [redacted] உலகம்
10 பால்க்கடல் என்னும் ஐந்தாவது கடல்
11 சாகத்தீவு என்னும் ஆறாவது [redacted] உலகம்
12 தயிர்க்கடல் என்னும் ஆறாவது கடல்
13 புஷ்க்கரத்தீவு என்னும் ஏழாவது [redacted] உலகம்
14 இளநீர்க்கடல் என்னும் ஏழாவது கடல்
15 வைகுண்டம் என்னும் எட்டாவது உலகம். கடவுளாகிய ஸ்ரீமந் நாராயணர் வசிக்குமிடம்.

இரண்டாவது இலக்கமிட்டுக் காட்டியிருப்பது, நாம் நமது உலகைச் சுற்றிலும் காண்கிற உப்பு நீர்க்கடலாகும். நாம் உப்பில்லாமல் உணவு அருந்த இயலாது என்பதற்காகப் பல ஆயிரம் கோடி ஆண்டுகளுக்குத் தேவையான உப்பை இக்கடலில் நீரில் நமது கடவுள் கலந்து வைத்து உள்ளார். இந்த உப்பு நீரைக் கொஞ்சம் எடுத்து அதை ரஸாயன முறையில் பரிசோதனை செய்து பார்த்தால் அதில் எவ்விதமான ரஸாயனப் பொருள்கள் இருக்கிறதோ அவ்விதமான ரஸாயனப் பொருள்களின் சேர்க்கையால் நமது கடவுள் இக்கடலை அமைத்துள்ளார்.

இந்த உப்பு நீர்க்கடலின் மீது தெற்கு நோக்கி வான வெளிக் கப்பல்கள் மூலம் சுமார் பத்து லெக்ஷம் கிலோ மீட்டர்கள் பறந்து கடந்து சென்ருல் இக்கடலுக்கு எதிர் புறமாக மறு கரையாக உள்ள "பிலட்சத் தீவு" என்னும் இரண்டாவது உலகத்தை அடையலாம்.

இந்த இரண்டாவது உலகத்தில் பிலட்சம் என்னும் மரங்கள் அதிகமாக இருப்பதால் இதற்குப் "பிலட்சத் தீவு" என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது. இவ்வுலகம் சிலம், வயசம், சுபத்திரம், சாந்தம், க்ஷேமம், அபயம், ரிதம் என்னும ஏழு கண்டங்களாகப் பிரிப்பட்டிருக்கிறது. இந்த ஏழு கண்டங்களிலும், மணி கூடம். வச்சிர கூடம், இந்திரி சேனம், சோதிடமா, தூம்ப்ரவர்ணம், இரணிய கிரிவம், மேகமாலம் என்னும் ஏழு பெயர்களையுடைய ஏழு பெரிய மலைகள் இருக்கின்றன. இவைகளிலிருந்து அருணை ரமணை, ஆங்கீரஸி, சாவித்திரி, சுப்ரபாதா, ருதமபரா, சத்தியம்பரா, என்னும் ஏழு நதிகள் உற்பத்தியாகி ஓடுகின்றன. நமது கடவுளின் பேரன்மார்களில் ஒருவரான இந்துமசிக்குவன் என்பவர் தமது மனைவியுடன் முதல் முதலாக குடியேறி அரசாட்சி செய்துகொண்டு வாழ்ந்து வந்தார். அவருடைய வம்ச பரம்பரையினர் அம்ஸர், பதங்கர், ஊர்த்துவாயனர், சத்தியாகர் என நான்கு பிரிவினராக வாழ்ந்து வருகிருர்கள். இந்த இரண்டாவது

உலகத்தை முன் பக்கத்தில் உள்ள படத்தில் மூன்ருவது நம்பராகக் காட்டப்பட்டிருக்கிறது.

இந்த இரண்டாவது உலகின் மீது தெற்கு நோக்கி வானவெளிக் கப்பல்கள் மூலம் சுமார் இருபது லட்சம் கிலோ மீட்டர்கள் பறந்து கடந்து சென்ருல் இவ்வுலகைச் சூழ்ந்திருக்கும் இட்சு சமுத்திரம் என்னும் இரண்டாவது கடலாகிய கரும்புச்சார்க் கடலை அடையலாம்.

இந்தக் கரும்புச்சார்க் கடலானது முதல் தரமான கரும்பைப் பிழிந்த சார் போல் இனிப்பாகவும், விடமின் சத்துக்களுடனும் இருக்கிறது முதல் தரமான கரும்புச் சாரை ரஸாயன முறையில் பரிசோதனை செய்து பார்த்தால் அதில் எவ்விதமான ரஸாயனப் பொருள்கள் இருக்கிறதோ அவ்விதமான ரஸாயனப் பொருள்களின் சேர்க்கையால் நமது கடவுள் இக்கடலை உண்டாக்கியிருக்கிருர். நாம் காண்கிற உப்பு நீர்க் கடலின் நீரானது உப்பாக இருப்பது எப்படி உண்மையோ அதேபோல் இக்கடலின் நீர் சுத்தமான கரும்புச் சாராக இருப்பதும் உண்மை. நாம் உப்பு நீர்க்கடலில் இருந்து உப்பு எடுப்பது போலவே இரண்டாவது மூன்ருவது உலகத்தினர் இந்தக் கரும்புச் சார்க் கடலில் இருந்து சர்க்கரை எடுக்கிருர்கள். இந்தக் கடலை முன்பக்கத்திலுள்ள படத்தில் நான்காவது நம்பராக காட்டப்பட்டிருக்கிறது

இந்தக் கரும்புச் சார்க் கடலின் மீது வானவெளிக் கப்பல்கள் மூலம் சுமார் இருபது லட்சம் கிலோ மீட்டர்கள் தெற்கு நோக்கிச் சென்ருல் இக்கடலுக்கு எதிர்ப்புறமாக மறு கரையாக உள்ள "சால்மலித் தீவு" என்னும் மூன்ருவது உலகத்தை அடையலாம்

இந்த மூன்ருவது உலகத்தில் சால்மலி என்னும் மரங்கள் அதிகமாக இருப்பதால் இவ்வுலகுக்கு இப்பெயர் ஏற்பட்டிருக்கிறது இவ்வுலகம் சரோசனம், சௌமனசியம் ரமணகம், தேவபெருகம, பாரிபத்திரம், ஆப்பியாயனம

அபிக்கியானம், என்னும் ஏழு கண்டங்களாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது. இந்த ஏழு கண்டங்களிலும், சுவர்சம் சதசிருங்கம், வாமதேவம், குந்தம், குமுதம், புஷ்பவருஷம் சகசுருதி என்னும் ஏழு பெரிய மலைகள் இருக்கின்றன. இந்த மலைகளில் இருந்து அனுமதி, சினிவாலி, சரசுவதி குரு, அக்கினி, நந்தா, முகுந்தா, என்னும் ஏழு மகாநதிகள் உற்பத்தியாகி ஓடுகின்றன நமது கடவுளின பேரன்மார் களில் ஒருவராகிய எக்கியபாகு என்பவர் தமது மனைவி யுடன் முதல் முதலாக இவ்வுலகில் குடியேறி அரசாட்சி செய்துகொண்டு வாழ்ந்து வந்தார் அவருடைய வம்ச பரம்பரையினர் சுருத்திரர், வசுந்தராயர், இஷ்டாந்தரர் என்னும் மூன்று பிரிவினராக வாழ்ந்து வருகின்றுர்கள் இந்த மூன்ருவது உலகை 148-ம் பக்கத்தில் உள்ள படத்தில் ஐந்தாவது நம்பராக காட்டப்பட்டிருக்கிறது.

இந்த மூன்ருவது உலகின் மீது வானவெளிக் கப்பல்கள்மூலம், தெற்கு நோக்கிச் சுமார் நாற்பது லட்சம் கிலோ மீட்டர்கள் தூரம் பறந்து கடந்து சென்ருல் இவ் வுலகைச் சூழ்ந்துள்ள சுராசமுத்திரம் என்னும் தேன் கடலை அடையலாம்

இக்கடலின் நீரானது திராட்சைப்பழ ரஸம் போலவும் தேன் போலவும், இனிப்பாகவும், சத்துக்களுடனும் இருக்கிறது. திராட்சைப்பழ ரஸத்தையும், தேனையும் ரஸாயன முறையில் பரிசோதனை செய்து பார்த்தால் அதில் எவ்விதமான ரஸாயனப் பொருள்கள் இருக்கிறதோ அவ்விதமான ரஸாயனப் பொருள்களின் சேர்க்கையால் நமது கடவுள் இக்கடலை உண்டாக்கியிருக்கிறுர். நாம் காண்கிற உப்பு நீர்க் கடலின் நீரானது உப்பாக்கி யிருப்பது எப்படி உண்மையோ அதே போலவே இக்கடலின் நீர் திரக்ட்சைப்பழ ரஸம் போலவும், தேன் போலவும் இருப்பது உண்மை. இந்தக்கடலை 148-ம் பக்கத்தில் உள்ள படத்தில் ஆருவது நம்பராகக் காட்டப் பட்டிருக்கிறது.

இந்த சுராக்கடல் மீது வானவெளிக் கப்பல்கள் மூலம் தெற்கு நோக்கிச் சுமார் நாற்பது லட்சம் கிலோ மீட்டர்கள் பறந்து கடந்தா சென்றால், இக்கடலுக்கு எதிர்ப்புறமாக மறுகரையாக உள்ள "குசத்திவு" என்னும் நான்காவது உலகை அடையலாம்

இந்த உலகில் "குசஸ்த்தம்பங்கள்" என்னும் மலைக் குன்றுகள் அனேகம் இருக்கின்றன எரிமலைகளின் உச்சி யில் நெருப்பு எரியும்போது ஒளி உண்டாவது போல் இக்குன்றுகளின் உச்சியிலிருந்தா எப்போதும் ஒளி வீசிக் கொண்டே இருக்கும் ஆனால் இந்த ஒளியானது உஷ்ண மாயில்லாமல் சந்திரனின் ஒளிபோல் குளிர்ச்சியாய் இருக்கிறது இந்த ஒளிச் சக்தியானது மின மினிப் பூச்சி களிடம் உள்ள ஒளி வீசும் சக்தியைப் போன்றது. சந்திரனைப் போல் உஷ்ணமில்லாத இந்த ஒளி வீசும் அணுக்களை 'லூஸிஃபெர்ரின் அணுக்கள்" என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருககிறார்கள் இந்த அணுக் களின் சக்தியாலேயே இக்குன்றுகள் இவ்வித உஷ்ணம் இல்லாத ஒளியை வீசிக்கொண்டிருக்கின்றன, இவ்வுலகில உள்ளவர்கள் இந்த ஒளியையே தெய்வமாக வணங்கு கிறார்கள். இவ்வுலகம வசு, வசுதானம, திரடருசி, நாபி குமுதம, சத்திய விருதம், விப்பிரம், வாமதேவம என்னும் ஏழு கண்டங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இவைகளில் பெப்புரு, சதசிங்கம், பிப்பலம், சித்திரகூடம், தேவாகம், ஊர்த்தரோமா, திரவிணம் என்னும் ஏழு பெரிய மலைகள் இருக்கின்றன இவைகளிலிருந்து ரசகுல்லியை, மது குல்லியை, சுருது விந்தை, மித்துரு விந்தை, வேதகற்பை, கிருதச்சுதா, மந்திர மாலை என்னும் ஏழு மகா நதிகள் உற்பத்தியாகி ஓடுகின்றன. நமது கடவுளின் பேரன் மார்களில் ஒருவரான இரணிய ரோமன் என்பவர் தமது மனைவியுடன் முதல் முதலாக இவ்வுலகில் குடியேறி அரசாட்சி செய்துகொண்டு வாழ்ந்து வந்தார். அவருடைய வம்ச பரம்பரையினர் குலசர், கோவிதர், அபியுக்தர், குலகர் என்னும் நான்கு பிரிவினராக வாழ்ந்து வருகிறார்கள்.

இந்த நான்காவது உலகை 148-ம் பக்கத்திலுள்ள படத்தில் ஏழாவது நம்பராகக் காட்டப்பட்டிருக்கிறது.

குசத்தீவு என்னும் இந்த நான்காவது உலகின்மீது வானவெளிக் கப்பல்கள் மூலம் தெற்கு நோக்கிச் சுமார் எண்பது லட்சம் கிலோ மீட்டர்கள் பறந்து கடந்து சென்ருல் இவ்வுலகைச் சூழ்ந்துள்ள நெய்க் கடல் என்னும் நான்காவது கடலை அடையலாம்.

இக்கடலின் நீரானது சுத்தமான வெண்ணெயை உருக்கின நெய் போல் சுவையுடனும், மணமும், விடமின் சத்துக்களும் கொண்டதாக இருக்கிறது சுத்தமான நெய்யை ரஸாயன முறையில் பரிசோதனை செய்து பார்த்தால் அதில் எவ்விதமான ரஸாயனப் பொருள் இருக்கிறதோ அவ்விதமான ரஸாயனப் பொருள்களின் சேர்க்கையால் இககடலை நமது கடவுள் படைத்திருக்கிருர். நாம் காண்கிற உப்பு நீர்க் கடலின் நீரானது உப்பாக இருப்பது எப்படி உண்மையோ அதே போலவே இக் கடலின் நீரானது நெய்யாக இருப்பதும் உண்மை. இந்த நான்காவது கடலை 148-ம் பக்கத்தில் உள்ள படத்தில் எட்டாவது நம்பராகக் காட்டப்பட்டிருக்கிறது.

இந்த நெய்க் கடலின் மீது வானவெளிக் கப்பல்கள் மூலம் தெற்கு நோக்கிச் சுமார் எண்பது லட்சம் கிலோ மீட்டர்கள் பறந்து கடந்து சென்ருல் இக்கடலுக்கு எதிர்ப் புறமாக மறுகரையாக உள்ள "கிரௌஞ்சத் தீவு" என்னும் ஐந்தாவது உலகை அடையலாம்.

இந்த ஐந்தாவது உலகில் நமது இமய மலையைப் போல் கிரௌஞ்சம் என்னும் பெரிய மலை இருப்பதால் இதற்கு இப்பெயர் ஏற்பட்டிருக்கிறது. இவ்வுலகமும ஆமோதனம், துவகுனம், மேகப்பிரஷ்ட்டம், சுதானம், ரெஞ்சிஷ்ட்டம், லோகிதாரணம், வனஸ்ப்பதி என்னும் ஏழு கண்டங்களாகப் பிரிககப்பட்டிருக்கிறது இவைகளில் மேலே கண்ட கிரௌஞ்சம் என்னும் மலையைத் தவிர

சுக்கிலம், மர்த்தமானம், போஜனம், உபபெருகணம், ஆனந்தம், நந்தம், சர்வதோபத்திரம் என்ற ஏழு பெரிய மலைகளும் இருக்கின்றன இந்த மலைகளிலிருந்து அபையா, அமிர்தவுகா, ஆரியகா, தீர்த்தவதி, பாத்திராவதி, பவித்திர்வம், சுக்கிலே, என்னும் ஏழு மகா நதிகள் உற்பத்தியாகி ஓடுகின்றன நமது கடவுளின் பேரன்மார்களில் ஒருவரான கிருதபிருஷ்ட்டன் என்பவர் தமது மனைவியுடன் முதல் முதலாக இவ்வுலகில் குடியேறி அரசாட்சி செய்துகொண்டு வாழ்ந்து வந்தார். அவருடைய வம்ச பரம்பரையினர் குருவர், ரிஷபர் திரவினர் தேவர் என்னும் நான்குபிரிவினராக வாழ்ந்துவருகிறார்கள். இந்த ஐந்தாவது உலகை 148-ம் பக்கத்தில் உள்ள படத்தில் ஒன்பதாவது நம்பராகக் காட்டப்பட்டிருக்கிறது.

இந்த ஐந்தாவது உலகில் வானவெளிக் கப்பல்கள் மூலம் தெற்கு நோக்கிச் சுமார் ஒரு கோடியே அறுபது லட்சம் கிலோ மீட்டர்கள் பறந்து கடந்து சென்றால் இவ்வுலகைச் சூழ்ந்துள்ள "பால்க் கடல்" என்னும் ஐந்தாவது கடலை அடையலாம்.

இந்தப் பால்க் கடலின் நீரானது சுத்தமான பசுவின் பாலைப் போலவே வெண்மையாகவும் இனிப்பாகவும் விடமின் சத்துக்களுடனும் இருக்கிறது. நாம் காண்கிற உப்பு நீர்க் கடலின் நீரானது உப்பாக இருப்பது எப்படி உண்மையோ அதே போலவே இக்கடலின் நீரானது சுத்தமான பாலாக இருப்பதும் உண்மை. சுத்தமான பசுவின் பாலை ரஸாயன முறையில் பரிசோதனை செய்து பார்த்தால் அதில் எவ்விதமான ரஸாயனப் பொருள் இருக்கிறதோ அவ்விதமான ரஸாயனப் பொருள்களின் சேர்க்கையால் நமது கடவுள் இக்கடலை உண்டாக்கியிருக்கிறார் இக்கடலை 148-ம் பக்கத்தில் உள்ள படத்தில் பத்தாவது நம்பராகக் காட்டப்பட்டிருக்கிறது

இந்தப் பால்க் கடலின் மீது வானவெளிக் கப்பல்கள் மூலம் தெற்கு நோக்கிச் சுமார் ஒரு கோடியே அறுபது

லட்சம் கிலோ மீட்டர்கள் சென்றால் இக்கடலுக்கு எதிர்ப்புறமாக மறுகரையாக உள்ள "சாகத் தீவு" என்னும் ஆறாவது உலகத்தை அடையலாம்.

இவ்வுலகத்தில் சாகம் என்னும் மரங்கள் அதிகம் இருப்பதால் இதற்கு இப்பெயர் ஏற்பட்டிருக்கிறது. இவ்வுலகம் புரோசகம், மனோசவம், வெபானனி, தாம்ப்ராணிகம், சித்திராகம் வெகுரூபம், விசுவாசம் என ஏழு கண்டங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இவைகளில் ஈசானம், உருசிங்கம், பவபத்திரம், சதகேசரம், சகஸ்த்திர சுரோதசு, தேவபாலம். மகாநசம் என்னும் ஏழு பெரிய மலைகளும் இருக்கின்றன இவைகளிலிருந்து அநாகா ஆயுர்த்தா, உபயசிருஷ்ட்டி. அமராசிதா, பஞ்சதி, சகஸ்த்திரசுதி, நிசதுருதி என்னும் ஏழு மகாநதிகள் உற்பத்தியாகி ஓடுகின்றன நமது கடவுளின் பேரன்மார்களில் ஒருவரான மேதாதி என்பவர் தனது மனைவியுடன் முதல் முதலாக இவ்வுலகில் குடியேறி அரசாட்சி செய்து கொண்டு வாழ்ந்து வந்தார். அவருடைய வம்ச பரம்பரையினர் நிசவிருதர், சத்தியவிருதர், கானவிருதர், அனுவிரதர் என்னும நான்கு பிரிவினராக வாழ்ந்து வருகிறார்கள். இந்த ஆறாவது உலகை 148-ம் பக்கத்தில் உள்ள படத்தில பதினோராவது நம்பராகக் காட்டப்பட்டிருக்கிறது.

இந்த சாகத்திவு என்னும் ஆறாவது உலகின்மீது வானவெளிக் கப்பல்கள் மூலம் தெற்கு நோக்கிச் சுமார் மூன்று கோடியே இருபது லட்சம் கிலோ மீட்டர்கள் பறந்து கடந்து சென்றால் இவ்வுலகைச் சூழ்ந்துள்ள ஆறாவது கடலாகிய "தயிர்க் கடல்" அடையலாம.

இந்த தயிர்க்கடலின் நீரானது சுத்தமான தயிர் போல கெட்டியாகவும், வெண்மையாகவும், சுவையுடனும் விடமின் சத்துக்களுடனும் இருக்கிறது. சுத்தமான தயிரில் ~~எவ்விதமான தயிரில்~~ எவ்விதமான ரஸாயனப் பொருள்கள் இருக்கிறதோ அவ்விதமான ரஸாயனப் பொருள்களின்

சேர்க்கையால் இக் கடலை நமது கடவுள் உண்டாக்கி யிருக்கிறார். நாம் காண்கிற உப்பு நீர்க் கடலின் நீரானது உப்பாக இருப்பது எப்படி உண்மையோ அதேபோலவே இக்கடலின் நீரானது தயிராக இருப்பதும் உண்மை. இந்தக் கடலை 148-ம் பக்கத்திலுள்ள படத்தில் பனிரெண்டாவது நம்பராகக் காட்டப்பட்டிருக்கிறது.

இந்தத் தயிர்க் கடலின் மீது வானவெளிக் கப்பல்கள் மூலம் தெற்கு நோக்கிச் சுமார் மூன்று கோடியே இருபது லட்சம் கிலோ மீட்டர்கள் பறந்து கடந்து சென்றால் இக்கடலுக்கு எதிர்ப்புறமாக மறுகரையாக உள்ள "புஷ்கரத் தீவு" என்னும் ஏழாவது உலகத்தை அடையலாம்.

இந்த உலகத்தில் புஷ்க்கரம் என்கிற தாமரை மலர் போன்று அடுக்கடுக்காக வரிசை வரிசையாக படிப்படியாக சுமார் ஒரு லட்சம் மலைக் குன்றுகள் இருப்பதால் இதற்குப் புஷ்கரத்தீவு என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது. இந்த மலைக் குன்றுகளுக்கு நடுவே நமது இமய மலையைப் போல மானசோத்தரகிரி என்ற பெரிய மலையும் இருக்கிறது. இம்மலைகளிலிருந்து அனேக ஜீவ நதிகள் உண்டாகி ஓடுகின்றன இவ்வுலகம் ரமணகம், யாதனம் என்னும் இரண்டு கண்டங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது நமது கடவுளின் பேரன்மார்களில் ஒருவரான விதிகோத்திரன என்பவர் தமது மனைவியுடன் முதல் முதலாக இங்கு குடியேறி அரசாட்சி செய்துகொண்டு வாழ்ந்து வந்தார். அவருடைய வம்ச பரம்பரையினர் ரமணகர், யாதனர் என இரண்டு பிரிவினராக வாழ்ந்து வருகிறார்கள் இவர்களைத் "தேவர்கள்" என்றும் இந்தப் புஷ்கரத் தீவாகிய ஏழாவது உலகையே "தேவலோகம்" என்றும் நமது புராண வரலாறுகளில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த உலகை 148-ம் பக்கத்தில் உள்ள படத்தில் பதிமூன்றாம் நம்பராகக் காட்டப்பட்டிருக்கிறது

இந்த ஏழாவது உலகமாகிய புஷ்கரத்தீவின் மீது வானவெளிக் கப்பல்கள் மூலம் தெற்கு நோக்கிச் சுமார்

ஆறுகோடியே நாற்பது லட்சம் கிலோ மீட்டர்கள் பறந்து கடந்து சென்றுல் இவ்வுலகைச் சூழ்ந்துள்ள சுத்த ஜல சமுத்திரம் என்னும் ஏழாவது கடலே அடையலாம்.

இந்தக் கடலின் நீரானது சுத்தமான இளனீர் (தேங்காயின் உள்ளே உள்ள நீர்) போல் இனிப்பாகவும் விடமின் சத்துக்களுடனும் விளங்குகிறது. சுத்தமான முதல்தரமான இளநீரை ரஸாயன முறையில் பரிசோதனை செய்துபார்த்தால் அதில் எவ்விதமான ரஸாயனப் பொருள்கள் இருக்கிறதோ அவ்விதமான ரஸாயனப் பொருள்களின் சேர்க்கையால் நமது கடவுள் இக்கடலே உண்டாக்கியிருக்கிருர். நாம் காண்கிற உப்பு நீர்கடலின் நீரானது உப்பாக இருப்பது எப்படி உண்மையோ அதே போல இக்கடலின் நீரானது முதல்தரமான இளனீர் போல் இருப்பதும் உண்மை இக்கடலே 148-ம் பக்கத்தில் உள்ள படத்தில் பதினுன்காவது நம்பராகக் காட்டப் பட்டிருக்கிறது.

நமது புராண சாஸ்த்திர வரலாறுகளில் கூறப் பட்டுள்ள ஏழு உலகங்களும் ஏழு கடல்களும் இவ்வித மாகவே இருக்கின்றன. நாம் வசிக்கும் இந்த உலகமும் நாம் காணும் உப்பு நீர்க் கடலும் எப்படி உண்மையோ அதேபோலவே இந்த ஏழு உலகங்களும் ஏழு கடல்களும் உண்மையானவைகளேயாகும்.

உலக விஞ்ஞானிகள் சந்திரன், செவ்வாய், சுக்ரன் சனி முதலிய கிரஹ மண்டலங்களை ஆராய்ந்து அவை களுக்குப் போக்கு வரவு சாதனங்களை அமைக்க முயற்சி செய்வதுபோல் இந்த ஏழு உலகங்களையும் ஏழு கடல்களை யும் ஆராய்ச்சி செய்து இவைகளுக்குப் போக்கு வரவு சாதனங்கள் அமைக்க முயற்சிக்க வேண்டும். இது மிகவும் அவசியம்

நாம் வசித்தும், கண்டும் இன்பமடைகிற இந்த உலகத்தைப் போலும், நாம் காண்கிற உப்பு நீர்க் கடலைப்

போலும் பல பங்கு அதிகமான விஸ்த்திரணமுள்ள இந்த ஏழு உலகங்களையும் ஏழு கடல்களையும் அமைத்துள்ள நமது கடவுளின் மகத்தான சாதனைகளை நாம் ஒவ்வொருவரும் அறிந்துகொண்டு நாமும் அப்படிப்பட்ட பிரம்மாண்டமான சாதனைகளைப் புரியக்கூடிய அறிவையும் ஆற்றலையும் பெற வேண்டும். இப்படிப்பட்ட பிரம்மாண்டமான சாதனைகளையும் புரியக்கூடிய சக்தியை நம் ஒவ்வொருவர் உடலிலும் நமது கடவுள் அமைத்துள்ளார்

148-ம் பக்கத்தில் கண்ட படத்தில் உள்ளபடி நாம் வசிக்கிற இந்த முதலாவது உலகத்தையே விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள். செயற்கைச் சந்திரன், வான வெளிக் கப்பல்கள், ராக்கெட்டுகள் மூலம் இந்த முதலாவது உலகத்தைக் கிழக்கு மேற்காகவே சுற்றிவந்திருக்கிறார்கள். தெற்கு வடக்காகச் சுற்றவில்லை. அதனால் இரண்டாவது உலகம் அவர்களுக்குத் தெரியவில்லை. அதனால், முன பக்கங்களில் கண்ட விவரங்களின்படி தென் துருவத்திலிருந்து தெற்கு நோக்கிச் சுமார் பத்து லட்சம் கிலோ மீட்டர்கள் தூரம் சென்றால் நிச்சயமாக இந்த இரண்டாவது உலகை அடையலாம் மற்ற உலகங்களையும் அடையலாம.

## 95. கடவுள் வசிக்குமிடம்.

கேள்வி: உங்கள் கடவுள் எந்த இடத்தில் வசித்துக் கொண்டிருக்கிறார்? அவருடைய விலாசம் என்ன?

பதில்: 148-ம் பக்கத்தில் உள்ள படத்தில் கண்டுள்ளபடி ஏழு உலகங்களையும், ஏழு கடல்களையும் கடந்து சென்றால் எட்டாவது உலகமாகிய "வைகுண்டம்" என்னும் உலகை அடையலாம்,

இந்த உலகமானது சுமார் ஐநூறு கோடி கிலோ மீட்டர்கள் சுற்றளவுள்ளது இவ்வுலகைச் சுற்றி நான்கு பக்கங்களிலும ரிஷபம். புஷ்கர சூடம், வாமனம், அபாரா ஜிதம், என்னும் நான்கு மலைகள் சுவர்போல் இருக்கின்றன.

இவ்வுலகில் கற்பக விருட்சம் என்னும் அதிசயமான மரங்களும், மற்றும் பல பல அற்புதமான பலவித மரங்களும் பாரிஜாத புஷ்பம் என்னும் அற்புதமான புஷ்ப வகைகளும் காமதேனுக்கள் என்னும் அதியற்புதமான பசுவர்க்கங்களும் ஐந்து தலை, பத்துத் தலை, நூறு தலை, ஆயிரம் தலை உள்ள அதிசயப் பாம்பு வர்க்கங்களும் உள்ளன.

இந்த உலகத்தில்தான் நமது கடவுளாகிய முதல் மனிதராகிய ஸ்ரீமந் நாராயணர் ஆயிரம் தலைகளையுடைய ஆதிசேஷன் என்னும் பாம்பின் உடலைப் பீடமாகவும் தலையைக் குடையாகவும் கொண்டு அதில் அமர்ந்து கொண்டு வாழ்ந்து வருகிறார்.

இந்த ஏழு உலகங்களிலும் உள்ளவர்கள் எண்ணும் எண்ணங்களையும், கோரும் கோரிக்கைகளையும், ஒரு நொடியில் அறிவிக்கும் ரேடியோ, டெலிவிஷன், டெலிமீட்ரி கம்யூட்டர், ரிமோட் கண்ட்ரோல் முதலிய சாதனங்கள் யாவும் இங்கு இருக்கின்றன.

இந்த சாதனங்கள் மூலமாகவே சூரியன், பூமி, சந்திரன் மற்ற கிரஹங்கள், கடல், காற்று பற்றும் சகல பொருள்களையும் சகல ஜீவன்களையும் யாவற்றையும் "ரேடியோ அலைகள் மூலமாகவே" இயக்கி, அதனதன் காரியங்களை அணுவளவும் பிசகாது செய்யும்படி சுமார் அறுநூற்று இருபத்து ஒன்பது கோடி ஆண்டுகளாகச் செயலாற்றிக்கொண்டிருக்கிறார் இன்னும் பல ஆயிரம் கோடி ஆண்டுகள் இவ்விதம் செயல் புரிந்துகொண்டு இருப்பார்.

நாம் சந்திரனுக்கும் மற்றக் கிரஹங்களுக்கும் வான வெளிக் கப்பல்கள் மூலம் சென்று அவைகளை அடைவது போல் முயற்சித்து இந்த ஏழு உலகங்களுக்கும் ஏழு கடல்களுக்கும் சென்று அவைகளைக் கடந்து இந்த வைகுண்ட லோகத்தை அடைந்து அங்கு வசித்துக்கொண்டிருக்கும் நமது கடவுளை நேரில் சந்திக்கலாம். அவருடன் பேசலாம் நாம் கோரும் யாவற்றையும் கேட்டுப் பெறலாம்.

ஆனால் நமது கடவுளை இவ்விதம் இவ்வளவு தூரம் சென்று நேரில் காண வேண்டிய அவசியமில்லை சாத்தியமும் இல்லை

நமது எண்ணங்களின் ஒளி அலைகளாகிய ''ரேடியோ அலைகள் மூலமாகவே'' நமது கோரிக்கைகள் யாவற்றையும் தெரிவித்து பதில் பெற்றுச் சகல தேவைகளையும் பூர்த்தி செய்துகொண்டு பேரின்பம் நிறைந்த நித்திய வாழ்வைப் பெறலாம்

ஆனால், ''கடவுள் இல்லை, இந்தப் பூமி, சூரியன், சந்திரன், மற்ற கிரஹங்கள் யாவற்றையும் கடவுள் இயக்க வில்லை இவைகள் இயற்கையானவைகள். அதனால் கடவுள் தத்துவம் யாவும் உண்மையல்ல பொய், மூட நம்பிக்கை கடவுளை உண்டாக்கியவன் முட்டாள். வணங்குபவன் அயோக்கியன், பரப்புகிறவன் காட்டுமிராண்டி என்று பறைசாற்றுகிற பகுத்தறிவாளர்கள் சந்தேகப்படு கிறவர்கள இதில் கண்டபடி வைகுண்ட லோகம் சென்று கடவுளை நேரிடையாகக் காணலாம்

## 96. கடவுளின் உருவங்கள்.

கேள்வி: ''கடவுளுக்கு உருவமில்லை'' என்று ஹிந்து மதமும் மற்ற சகல மதங்களும் கூறுகின்றன. அப்படி யிருக்க பல உருவங்களை வைத்துப் பணிந்து பூஜிப்பது ஏன்?

பதில்: உங்கள் உறவினர்கள் வெளிநாடுகளிலும் வெளியூர்களிலும் இருந்தால், அவர்களை உங்கள் வீட்டி லேயே எப்போதும் பார்த்துக்கொண்டே இருப்பதற்காகப் போட்டோப் படம் எடுத்து வைத்துக்கொள்கிறீர்கள்.

உங்கள் உறவினர்களில் வயதானவர்களையும், அவர் களுடைய மரணத்திற்குப் பின்னும் எப்போதும் பார்த்துக் கொண்டே இருப்பதற்காகப் போட்டோப் படம் எடுத்து வைத்துக்கொள்கிறீர்கள்,

ஒவ்வொரு நாட்டிற்கும் சுதந்திரம் பெற்றுத் தந்த வீரத் தந்தைகளையும், அரசியல் தலைவர்களையும், சங்கரர் புத்தர், இயேசு, போன்ற தத்துவ ஞானிகளையும் மற்றும் பல பல மேதாவிகளையும் அவர்களின் மகத்தான சாதனை களுக்காக அவர்களுடைய ஞாபகார்த்தமாக அவர்களுடைய உருவங்களைப் பளிங்கிலும், வெண்கலம், தாமிரம் முதலிய உலோகங்களிலும், கல்லிலும் சிலையாகச் செய்து வைத்து அவர்களைப் போற்றிப் புகழ்ந்து வணங்கும் வழக்கம் உலகம் பூருவிலும் இருந்து வருகிறது. இதை மூட நம்பிக்கை என்று பகுத்தறிவுள்ள எவரும் சொல்வதில்லை,

அதேபோலவே, இந்தப் பூமி, சூரியன். சந்திரன் மற்ற கிரஹங்கள் யாவற்றையும் உண்டாக்கி, அறுநூற்று இருபத்து ஒன்பது கோடி ஆண்டுகளாக "ரேடியோ அலைகள்" மூலமாகவே இயக்கிக்கொண்டிருக்கும் பிரம் மாண்டமான. அதிசயமான, அதியற்புதமான சாதனைகளை புகழ்ந்து பாராட்டுவதற்காகவே நமது கடவுளைப் பல உருவங்களாகவும், மனித உருவமாகவும், லிங்கமாகவும் சிலைகளைச் செய்து வைத்து, அவரவர் விருப்பப்படி வணங்கிப் பூஜித்துப் பணிந்து போற்றும வழக்கம இருந்து வருகிறது. இது மூட நம்பிக்கை அல்ல. விஞ்ஞான பூர்வமான சரியான உண்மைகளேயாகும்

உலக விஞ்ஞானிகள் யாவரும் "கடவுள் ஒருவர் உண்டு. விஞ்ஞானத்திற்கு மேலான மெய்ஞ்ஞான சக்தி ஒன்று உண்டு" என்று உண்மையுடன நம்புகிறார்கள். வானவெளிக கப்பல்களில் அபாயம் நேரிடும்போதும் பூகம்பம், புயல், வெள்ளம் முதலிய நிகழ்ச்சிகள் உண்டாகும் சமயங்களிலும் "கடவுளே காப்பாற்றுங்கள்!" என்று பிரார்த்தனை செய்கிறார்கள்'

அதனால், நாளடைவில் உலக விஞ்ஞானிகள சந்திரன் சுக்கிரன், செவ்வாய் முதலிய கிரஹங்களுக்குச் செல்ல முயற்சிப்பது போல், முன் பக்கங்களில் கண்டுள்ளபடி இந்த ஏழு உலகங்களிலும், ஏழு கடல்களிலும் வான

வெளிக் கப்பல்கள் மூலம் சென்று வைகுண்ட லோகத்தை அடையும் முறைகளை ஆராய்ச்சிகள் செய்து திட்டமிட்டு முயற்சி செய்வார்கள் என்பது நிச்சயம்.

## 97. கோவில்கள் எதற்கு ?

கேள்வி : கோவில்கள் கட்டுவதற்காக ஊர் தோறும் லட்ச லட்சமாகச் செலவு செய்யும் தொகைகளை ஏழைகளின் நன்மைக்காகச் செலவு செய்தால் எவ்வளவோ நன்மையாக இருக்குமே இப்படிச் செய்தால் என்ன?

பதில் : மனிதர் ஒவ்வொருவரும் தமது வறுமையையும் துன்பங்களையும் போக்கிக்கொள்ளக் கூடிய மகத்தான சக்திகளையும் அவரவரிடமுள்ள ஆற்றல்களையும் உணர்த்தி ஊக்குவித்து பிரம்மாண்டமான சாதனைகள் புரியக்கூடிய வழிகாட்டிகளாக விளங்குவதற்காகவே ஒவ்வொரு ஊரிலும் பல லட்சம் ரூபாய்கள் செலவு செய்து கோவில் கட்டப்படுகின்றன.

அரசியல் தலைவர்களில் அரிய சாதனைகள் புரிந்தவர்களைப் போற்றிப் பாராட்டும் முறையில் அவர்களுடைய உருவச் சிலைகளைப் பல பல லட்ச ரூபாய்கள் செலவு செய்து வெண்கலத்திலும், பலிங்கிலும செய்து ஊர் ஊராக வைத்துப் போற்றி வணங்கும் வழக்கம் உலகம் பூராவிலும் இருந்து வருகிறது.

அதேபோலவே இந்தப் பிரம்மாண்டமான பூமி சூரியன், சந்திரன் மற்ற கிரகங்கள் கடல், காற்று முதலிய சகல மண்டலங்களையும், படைத்து அவைகளை ரேடியோ அலைகள் மூலமாகவே சுமார் அறுநூற்று இருபத்து ஒன்பது கோடி ஆண்டுகளாக இயக்கிக்கொண்டிருக்கிற பிரம்மாண்டமான மகத்தான சாதனைகளைப் புரிந்து கொண்டிருக்கிற நமது கடவுளைப் பணிந்து போற்றும் முறையிலேயே ஊர் ஊராக கோவில்களைக் கட்டி வைத்து அவைகளில கடவுளைப் பல உருவங்களில சிலைகள் செய்து வைத்து வணங்கி பூஜிக்கும் வழக்கம் இருந்து வருகிறது.

இது விஞ்ஞான பூர்வமான உண்மைகளே தவிர மூட நம்பிக்கையுடையதோ முட்டாள் தனமானதோ அல்லவே அல்ல.

## 98. விஞ்ஞான முறைப் பணி.

சில நூற்றுண்டுகளுக்கு முன்பு பல நூறு மைல்கள் தூரத்திற்குப் பிரயாணம் செய்ய வேண்டுமானுலும் கால் நடையாகவே சென்று வந்தார்கள்

இப்போது மோட்டார்களிலும், ரயில்களிலும், விமானங்களிலும், கப்பல்களிலும், செல்கிறோம் அதுபோல் நமது மதத்தையும் தெய்வீகத் தத்துவ சாஸ்த்திரங்களையும் வேதங்களையும் இந்த நவீன விஞ்ஞான காலத்திற்கேற்ற வாறு புதுப்பித்து ஆராய்ச்சி செய்து விளக்கிப் பரப்ப வேண்டும்.

நமது வீடு மிகப் பழமையானதாக இருந்தால் அதை நவீன விஞ்ஞான முறையில் புதுப்பித்து ஏர்கண்டிஷன் அரண்மனையாகச் செய்கிறோம். இதே போலவே மிக மிகப் பழமையான இலக்கிய முறையில் உள்ள நமது மத தெய்வீகத் தத்துவ சாஸ்த்திரங்களையும் இறைவனின் அன்னையின் அருளால் சென்ற முப்பது ஆண்டுகளாக நவீன விஞ்ஞான முறையில் புதுப்பித்து ஆராய்ச்சி செய்து அதன் உண்மைகளை விளக்கிப் பணி செய்து வருகிறோம்.

இந்தப் பணியில் இதைப் படிக்கும் ஒவ்வொருவரும் பங்கு கொண்டு நமது மகத்தான வாழ்வின் உண்மைகளை உணர்ந்து கொண்டு பேரின்பப்பெருவாழ்வை பெற வேண்டுகிறோம்.

## 99. அணுக்களுக்கும் அறிவுண்டு உயிர் உண்டு.

நமது விந்து அணுக்களில் ஒரு துளியில் ஐந்து லெக்ஷத்தில் ஒரு பாகமுள்ள ஒரே ஒரு அணுவிலிருந்தே

கர்ப்பம் உண்டாகிக் குழந்தை பிறந்து மனிதன் வளர்ந்து மகத்தான சாதனைகள் புரிகிறான். இதை நீங்கள் நன்கு அறிவீர்கள்

இந்த அணுவின் படைப்பிலும் வளர்ச்சியிலும் எவ்வளவு அதியற்புதமான அறிவும் ஆற்றலும் சக்தியும் இருக்கின்றன என்பதைச் சற்றுச் சிந்தித்துப் பாருங்கள்.

நமது கண்களில் மட்டும் லென்சுகள் அமைந்து பார்க்கும் சக்தி உண்டாக வேண்டும். உடலில் மற்ற இடங்களில் கூடாது என்று இந்த அணுக்களுக்கு எப்படித் தெரிகிறது?

மூக்கில் மட்டும் வாசனைகளை நுகரும் சக்தி இருக்க வேண்டும் உடலில் மற்ற இடங்களில் இச்சக்தி இருக்கக் கூடாது என்று இந்த அணுக்களுக்கு எப்படி தெரிகிறது?

நாக்கில் மட்டும ருசி பார்க்கும் சக்தி இருக்க வேண்டும் உடலில் மற்ற இடங்களில் இச்சக்தி இருக்கக் கூடாது என்று இந்த அணுக்களுக்கு எப்படித் தெரிகிறது?

கை விரல்களிலும் கால் விரல்களிலும் மட்டும் நகங்கள் உண்டாக வேண்டும். உடலில் மற்ற இடங்களில் நகங்கள் உண்டாகக் கூடாது என்று இந்த அணுக்களுக்கு எப்படித் தெரிகிறது?

இதுபோல் உடலின் ஒவ்வொரு பாகத்திலும் அந்தந்த வேலைகளைச் செய்யக் கூடிய சக்திகளும் நரம்புகளும் அணுக்களும அமைக்க வேண்டும் உடலின் மற்ற பாகத்தில் அமையக் கூடாது என்ற அறிவும் ஆற்றலும் இந்த அணுக்களுக்கு எப்படி உண்டாகிறது?

இதுதான் நமது கடவுளின் அதியற்புதமான ஆச்சரியகரமான படைப்பின் அரிய செயல் இப்படி அணுக்களுக்கும் அறிவை அளித்து இயக்குவதன் ஆற்றலை நாம் அறிந்து சிந்தித்து அதன் பெருமைகளை உணர வேண்டும்,

இப்படி அணுக்களுக்கும் அறிவை அளித்து இயக்குவது எந்தப் பகுத்தறிவாளரோ. அல்லது எந்த விஞ்ஞானியோ அல்லவே அல்ல என்பதை இன்றே உணர்ந்து அறியவேண்டும்.

## 100. திருடன்தான் கடவுளா?

கேள்வி: கண்ணன் பால் தயிர் வெண்ணெகளைத் திருடித தானும் தின்று மற்றவர்களுக்கும் கொடுப்பதாக சகல சாஸ்த்திரங்களும் கூறுகின்றன இப்படிப்பட்ட ஒரு திருடன்தான் கடவுளா?

பதில்: நம் குழந்தைகளுக்கும் சிறுவர்களுக்கும் இயற்கையான பால், தயிர், வெண்ணெ, முதலியவைதான் உடலுக்கும் உள்ளத்திற்கும் சிறந்த ஊட்டமும் ஆரோக்கியமும் அளிக்கவல்லது அதனுல் நம் குழந்தைகளுக்கும் சிறுவர்களுக்கும் கெட்டுப் போன பூச்சி பிடித்த பழைய மாவுகளால செய்யப்பட்ட பிஸ்கட்களையும் பலகாரங்களையும் கொடுப்பது கூடாது. பால், தயிர் வெண்ணெ முதலியவைகளையே கொடுக்கவேண்டியது அவசியம் என்பதை அனைவருக்கும் விளக்கிக்காட்டுவதற்காகவே இவ்விதம் கண்ணன் விடுதோறும் பால், தயிர், வெண்ணெகளைத் தானும் திருடித் தின்று மற்றவருக்கும் கொடுக்கிருன்

மற்றவர்களுடைய பொருளை நயவஞ்சமாகத் திருட வேண்டும் கைப்பற்ற வேண்டும் என்ற கெட்ட எண்ணத்துடன் இவ்வாறு செய்யவில்லே. அதனுல் கண்ணன் ஒரு திருடன் அல்ல.

## 101. சேலே திருடும் கயவன்

கேள்வி: பெண்கள் குளத்தில் குளிக்கும் போது அவர்களுடைய சேலேகளைக் கண்ணன எடுத்துக்கொண்டு போய்விடுகிருன். பெண்களின் சேலேகளை இவ்வாறு திருடும் கயவன்தான் கடவுளா?

பதில்: பெண்கள் தங்கள் உடலிலுள்ள உடைகள் பூராவையும் களைந்து கரையில் வைத்துவிட்டு, உடலில் உடையே இல்லாமல் குளித்ததாலேயே கண்ணன

அவைகளை எடுத்துக் கொண்டுபோய் வைத்திருந்து பின்பு அவர்கள் கேட்டதும் கொடுத்து விட்டான்

ஆண்களாயினும் சரி, பெண்களாயினும் சரி, குளங்களிலும் ஆறுகளிலும் குளிக்கும் போது உடைகளைக் களைந்துவிடக்கூடாது உடையுடனேயே குளிக்க வேண்டும் என்பதை ஒவ்வொருவருக்கும் அறிவுறுத்திக் காட்டுவதற்காகவே கண்ணன் உடைகள் இல்லாமல் குளித்த பெண்களின் உடைகளை எடுத்து மறைத்து வைத்திருந்து பின்பு அவர்கள் கேட்டதும் கொடுத்துவிட்டான்,

அதனால், கண்ணன் பெண்களின் சேலைகளைத் திருட வேண்டும் என்ற எண்ணம் கொண்ட கயவன் அல்ல.

## 102. பெண்களைக் கெடுக்கும் ஸ்திரீ லோலன்

கேள்வி: நூற்றுக்கணக்கான பெண்களுடன் கூத்தாடிக் கூடிக் குலவும் ஸ்திரீ லோலனாகிய கண்ணன்தான் கடவுளா?

பதில்: கண்ணனின் அதி அற்புதமான அழகையும் ஆற்றலையும் கண்டு அனேக பெண்கள் அவனை அடைய ஆவல் கொள்கின்றனர். இப்படி விரும்பும் ஒவ்வொரு பெண்ணுக்கும் தன்னைப்போலவே உருவம் கொண்ட ஒவ்வொருவரை உருவாக்கிக் கொடுக்கிறானே தவிர தானே எல்லாப் பெண்களையும் கூடிக் கூத்தாடிக் கெடுக்கவில்லை.

ஒவ்வொரு பெண்ணுடனும் ஒரு கண்ணனையும் அனேக பெண்களுக்கு அனேக கண்ணன்களையுமே நாம் கண்ணன் சரித்திரக் காட்சிகளிலும் வரலாறுகளிலும் காண்கிறோம்.

கண்ணனுக்கு ருக்குமிணி, சத்தியபாமா என்ற இரு மனைவியரைத் தவிர வேறு எந்த முறையிலும் எவ்விதத்திலும் காதலர்களோ காதலிகளோ கிடையாது

அதனால் கண்ணன் மற்ற பெண்களைக் கெடுக்கும் ஸ்திரீ லோலன் அல்ல.

## 103 மாடு மேய்ப்பவன்தான் கடவுளா?

கேள்வி: கண்ணன் மாடுகளையும் ஆடுகளையும் மேய்த்துக்கொண்டு இருக்கிறான். இப்படி ஆடு, மாடு மேய்ப்பவன்தான் கடவுளா?

பதில்: ஆடு மாடுகளை மேய்ப்பது போன்ற வேலைகளை மட்டமான வேலைகள் என்று பலர் நினைக்கின்றனர்

அதனால், ஆடு மாடுகளை மேய்ப்பது தெருக்கூட்டுவது கூலி வேலைகள் செய்வது போன்ற வேலைகளை மட்டமான வேலைகளாக நினைப்பது கூடாது. இப்படிப்பட்ட வேலைகளைச் செய்பவர்களைத் "தாழ்ந்தவர்கள், கேவலமானவர்கள்" என்று கருதுவது கூடாது என்று அனைவருக்கும் அறிவுறுத்திக் காட்டுவதற்காகவே கண்ணன் இவ்விதம் ஆடு மாடுகளை மேய்த்துக்கொண்டிருக்கிறார், ஆடு மாடுகளிடமும் அன்பு செய்துகொண்டிருக்கிறார்,

## 104. பூகம்பம் ஏன் உண்டாகிறது?

கேள்வி: கருணையுள்ள உங்கள் கடவுள் அடிக்கடி பூகம்பங்களை உண்டாக்கி ஏன் ஏராளமான உயிர்களையும் உடைமைகளையும் அழிக்கிறார்?

பதில்; பூமி உருண்டையாக இருக்கிறதென்றும் அது ஒரு நிமிஷத்திற்கு சுமார் நாற்பதாயிரம் கிலோ மீட்டர்கள் வேகத்தில் சுழன்றுகொண்டிருக்கிறதென்றும் விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள் அல்லவா?

பூமி இவ்விதம் சுழல்கிற வேகத்திலும் அதிர்ச்சியிலும் உருண்டையின் ஓரப் பகுதிகள் அதிர்ந்து சில சமயம் பூகம்பங்கள் உண்டாகின்றனவே தவிர, கடவுள் வேண்டுமென்றே உயிர்களையும் உடைமைகளையும் அழிக்க வேண்டும் என்பதற்காகப் பூகம்பங்களை உண்டாக்குவது இல்லை

அதனால் இந்தப் பூமி உருண்டையின் ஓரப் பகுதிகளில் நகரங்களையும், ஊர்களையும், குடியிருப்புகளையும் அமைக்காமல் இருந்தால் பூகம்பத்தையும் அதனால் உண்டாகும் அழிவுகளையும் தடுக்கலாம்.

## 105. ஹிந்து சமயக் கல்லூரியின் சேவை

முன் காலத்தில் நாம் முன்னூறுமைல்களுக்குமேல் போக வேண்டியதிருந்தாலும் கால்நடையாகவும் கட்டை வண்டிகளிலும் போய்வந்தோம். இப்போது மோட்டார்களிலும் ரயில்களிலும் விமானங்களிலும் கப்பல்களிலும் செல்கிறோம்;

நமது ஆடைகள் பழையனவாகி கிழிந்து விட்டால் அவற்றை அகற்றிவிட்டு, நவீனமான புதிய ஆடைகளை அணிந்து மகிழ்கிறோம்.

நமது வீடு மிகப் பழமையாகி இத்துப்போய் இடிந்து விட்டால் அதைப் புதுப்பித்து நவீனமான ஏர் கண்டிஷன் அரண்மனையாக ஆக்கி அதில் வசித்து இன்பமடைகிறோம்.

"அதுபோல் நமது நாட்டின் மிக மிகப் பழமையான நமது ஹிந்து மத தத்துவங்களையும் உண்மைகளையும் தற்கால நவீன நாகரிக விஞ்ஞான ராக்கெட் சகாப்தத்திற்கேற்றவாறு புதுப்பித்து அதன் மிக மிக உன்னதமான உண்மைகளை நவீன விஞ்ஞான முறையில் உலகெலாம் பரப்ப வேண்டும்" என்பதை லெட்சியமாகக் கொண்டு சென்ற முப்பத்தி ஐந்து ஆண்டுகளாக நமது மதவேத தெய்வீகத் தத்துவ சாஸ்த்திரங்கள் யாவற்றையும் நவீன விஞ்ஞான முறையில் ஆராய்ச்சி செய்து விளக்கிப் போதித்து எங்கள் ஹிந்து சமயக் கல்லூரி மூலம் பணி புரிந்து வருகிறோம்.

நமது நாட்டின் பல பகுதிகளிலும் உள்ள மடங்கள் ஆஸ்ரமங்கள் சமய சன்மார்க்க சங்கங்கள் தெய்வீக நிலையங்கள் மன்றங்கள் கல்லூரிகள் கலைக் கூடங்கள் முதலியவற்றின் ஒத்துழைப்புடன் ஆங்காங்கு மாலை நேரப் பயிற்சி வகுப்புகள் நடத்தி நமது நாட்டின் மிக மிக உன்னதமான தெய்வீகத் தத்துவ சாஸ்த்திர உண்மைகளை நவீன விஞ்ஞான முறையில் போதித்துப் பணி புரிந்து வருகிறோம்

எங்கள் பணியில் நீங்களும் ஒவ்வொருவரும் பங்கு கொண்டு பேரின்ப வாழ்வு பெற வேண்டுமாய் வணக்கமாய் வேண்டுகிறோம்

தங்கள் அன்புள்ள சகோதரன்,

சு. ஸ்ரீனிவாஸன்.